# புதுவைச்சிவம் கவிதைகளும் புரட்சிக் கோட்பாடுகளும்

முனைவர் சிவ. இளங்கோ

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# புதுவைச்சிவம் கவிதைகளும் புரட்சிக் கோட்பாடுகளும்

முனைவர் சிவ. இளங்கோ

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
அறக்கட்டளை நிறுவியவர்: டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்
சொற்பொழிவு : 13

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Putuvaic civam kavitaikaḷum puraṭcik kōṭpāṭukaḷum |
| Author | : | Dr. Siva. Ilango<br>6, Poet Pudhuvai Sivam Street<br>Venkatta Nagar, Puduchery - 605 011 |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai - 600 113<br>Ph: 2254 2992 |
| Publication No. | : | 607 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xvi + 184 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 60/- (Rupees Sixty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Poems and Revolutionary thoughts of Pudhuvai Sivam |

பேரா. க. அன்பழகன்
நிதித்துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

## வாழ்த்துரை

புதுவைச் சிவம் அவர்கள் தந்தை பெரியாரின் தன்மான இயக்கத்தில் ஈடுபட்டு, புதுவை மாநிலத்தில் திராவிட இயக்கக் கொள்கைகள் வேரூன்ற வழிகண்ட தளபதியாய்த் திகழ்ந்தார். பாவேந்தருடன் நெருக்கமான தொடர்பும் நட்பும் கொண்டு, தமிழ் உணர்வு தழைக்கப் பாடுபட்டவர். பேரறிஞர் அண்ணாவிடம் அன்பு கொண்டு பழகி அவரது பாராட்டினைப் பெற்ற பெருமைக்குரியவர். புதுமைச்சிவம் அவர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டும் வளர்த்த பகுத்தறிவுக் கொள்கையும் தமிழ் மக்களின் வாழ்விற்குப் பெரும் பயன் விளைவித்தவை. பகுத்தறிவு இயக்கத்தின் முன்னோடிகளில் ஒருவராகத் திகழ்ந்து, சுயமரியாதைச் சுடர் வீசும் கவிதைகளை இயற்றித் தமிழ் மக்களின் நெடுந்தூக்கத்தைக் கலைத்து விழிப்புணர்வு ஏற்படுத்தியவர் கவிஞர் புதுவைச்சிவம்.

புதுச்சேரியில் அவரது காலத்தில் 'தமிழ்' தனித்தன்மையோடும் சிறப்போடும் விளங்குகிற வாய்ப்பைப் பெற்றிருந்தது. ஆனால், தமிழ் நாட்டில் தமிழ் அந்த நாளில் அவ்வளவு சுதந்திரமாக இல்லை. புதுச்சேரியில் பிரெஞ்சு சமுதாயத்தின் புரட்சி உணர்வின் காரணமாக, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் அந்தப் புரட்சி எண்ணங்களையும் அது பிரதிபலித்ததுடன், அந்த எண்ண ஓட்டங்களையும் அது வளர்த்தெடுத்தது. அதனால்தான் புதுச்சேரியில் தமிழ் சுதந்திரச் சூழலில் திளைத்த மொழியாக, பழமைக் கட்டுக்களை அறுத்ததனால், எதையும் சமத்துவமாகக் கருதும் ஒரு மொழியாக, எல்லோரையும் உடன்பிறப்பாக அரவணைத்து ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை வளர்க்கும் ஒரு மொழியாக உயர்ந்தது. அதனால் தமிழை ஏற்றம் பெற்றிடச் செய்த சிறப்புத் தகுதியைப் புதுச்சேரி பெற்றது.

'தமிழால் பாரதி தகுதி பெற்றதும் பாரதியால் தமிழ் தகுதி பெற்றதும்' என்று புரட்சிக் கவிஞர் பாடினார். பாரதியால் தமிழ் பெருமை பெற்றலைப் போல, புதுச்சேரியும் பெருமை பெற்றது. அதைப் போலவே,

பாரதிதாசனாலும் புதுச்சேரி பெருமை பெற்றது. அதேவழியில் புதுவைச்சிவத்தாலும் அவரது தமிழாலும் புதுச்சேரி பெருமை அடைகிறது.

அறிஞர் அண்ணாவுக்கு முன்னர்ப் பிறந்தவர் புதுவைச்சிவம். எப்போதுமே பின்னால் பிறந்தவர்களுக்கு ஒரு வாய்ப்பு மிகுதியாக இருக்கும். புதுவைச்சிவம் பிறந்த காலத்தில் தமிழ் இலக்கியங்களைப் படிக்கும் வாய்ப்பு குறைவு. பாரதியார், நாமக்கல் கவிஞர், தேசிக விநாயகம், புரட்சிக் கவிஞர் போன்ற ஒரு சிலரின் கவிதைகள்தான் புதுவைச்சிவத்திற்குக் கிடைத்திருக்கும். எனவேதான், தமிழ் அறிந்தவர் புரட்சிக் கவிஞர் என்ற சிறப்பு வாய்ந்த பாரதிதாசனிடம் அடிப்படை இலக்கணத்தைக் கற்றார் சிவம். பாரதிதாசன் கவிதை ஊற்று என்றால், புதுவைச்சிவம் ஒரு கவிதைப் பூங்கொத்து. புதுவைச்சிவம் கொள்கைகளைக் கவிதையாக வடித்திட முனைந்த சிந்தனைச் சிற்பி. அவரது கொள்கைவழிப்பட்ட எண்ணங்கள், கவிதைகள், நாடகம், உரைநடை என்னும் பலவகையிலும் வெளிப்பட்டன.

பாரதியின் கவிதையில் தாளம் தவறாத இசை ஓட்டம் இருக்கும். புரட்சிக் கவிஞரின் கவிதையில் கருத்துப் புரட்சி முழங்கும். புதுவைச்சிவத்தின் கவிதைகள் கருத்து விளக்கப் பாட்டாக இருக்கும். தெளிவும் திட்டவட்டமான கருத்தும் அந்த எண்ணத்தைப் பரப்ப வேண்டும் என்ற ஆர்வமும் காரணமாகப் பிறந்தது அவரது கவிதை. கொள்கையைப் பரப்பும் அந்த ஆர்வத்தால்தான் பெரியாரால் பாராட்டப்படும் வாய்ப்பும் புதுவைச்சிவத்திற்குக் கிடைத்தது.

புத்துலக எண்ணமும் வளம் கொழுக்கும் மொழியும் சேர்ந்தால் அறிஞர் அண்ணா. எண்ணமும் மொழியும் கலை நயமும் சேர்ந்தால் கலைஞர். மொழி வளத்தையும் பொருள் பொதிந்த நடையையும் அடுக்குமொழி சிறந்திட அண்ணாவைப்போலப் பயன்படுத்தக்கூடிய இன்னொருவரை இதுவரை நான் காணவில்லை. சொற்களுக்கிடையே அவர் தெளிவுபடுத்தும் பொருள் வேறுபாடும் கருத்து நலனும் தமிழ் ஆசிரியர்களுக்குக்கூடப் படித்த பிறகுதான் தெளிவாகும். தமிழ்ச் சொல் வளத்தைப் பயன்படுத்தி எழிலொழுகும் ஓசை நலம் வாய்ந்த கவிதையாக மலரச் செய்தவர் குமரகுருபரர். அழகான கவிதை நடையில் ஆழமான கருத்தும் தொடர்ச்சியான சிந்தனையும்

வழங்கியவர் வடலூர் வள்ளலார். மக்களுக்குத் தேவையான முறையில் எளிமையாகப் படித்தறிந்து பாடி மகிழ வைத்தவர் பாரதியார். புரட்சிக் கருத்து பொங்கிவர எழுச்சி தரும் பகுத்தறிவுப் பண் பாடியவர் புரட்சிக் கவிஞர். பகுத்தறிவுக் கருத்தை உணர்த்திப் பாடியவர் புதுவைச்சிவம். புத்துலகச் சிந்தனையை உவமை எழில் சிறக்கப் பாடியவர் சுரதா. இனிய, எளிய நடையில் கவிதை வழங்கியவர் வாணிதாசன். புரட்சிக் கவிஞரின் மாணவர்களில் ஒருவரான கம்பதாசன், திரைப்பட நீரோட்டத்தில் ஆடிப்பாடிப் புகழ்பெற்றுக் கரைந்து போனார்.

சுயமரியாதை இயக்கக் கவிஞரான புதுவைச்சிவம் அவர்களால் இயக்கம் வளர்ந்தது. அதனால்தான் புதுவைச்சிவத்தைத் தந்தை பெரியார் பாராட்டினார். ஞாயிறு நூற்பதிப்பகம் வாயிலாகப் பல நூல்களைப் புதுவைச்சிவம் பதிப்பித்தபோது அவரது தொண்டுக்குத் தமிழ் மக்கள் நன்றியுடையவர்களாக ஆகவேண்டும் என்று பெரியார் வாழ்த்தினார். அறிஞர் அண்ணா நடத்தியதொரு ஏட்டில், புதுவைச்சிவத்தின் ஒரு கவிதை நூலுக்கு அணிந்துரை எழுதும் முறையில் பாராட்டி எழுதியுள்ளார். சுயமரியாதை இயக்கம் வளர்கின்ற காலத்தில் எப்படி மக்கள் மனதில் இடம்பெற்று வளர்ந்தது என்பதைப் புதுவைச்சிவத்தின் நூல்களில் இருந்து நாம் புரிந்துகொள்ள முடியும். சுயமரியாதை இயக்கத்தின் துவக்கக் காலத்தில் புதுவைச்சிவத்தின் உள்ளம் உணர்ந்த கொதிப்பை இன்றைக்கு நாம் உணரமுடியாது. அன்றைக்குத் தமிழன் என்று சொல்லிக் கொள்ளப் பலருக்குத் துணிவு இல்லை. அப்படிச் சொல்லாதவர்களும் சொல்லத் தயங்கியவர்களும் கூட இன்று சொல்கிறார்கள். தமிழன், தமிழகத்திலேயே இன்னும் தமிழனாகத் தலைநிமிரவில்லை என்பதுதான் தமிழகம் கண்டுள்ள உண்மை. சிவம் மனத்தில் தமிழன் என்ற எண்ணம் இருந்தது. இது இனப்பகைக்காகவோ, இனவேற்றுமை வளர்க்கவோ அல்ல. தமிழன் தாழ்வுக்கு உரியவனல்ல; அவனது தகுதி மற்றவர்க்குக் குறைந்ததல்ல; தமிழனது குறிக்கோள் எந்த வகையிலும் மாசுபட்டதல்ல; தமிழினம் வஞ்சகம் செய்து வாழ்வு பெற்ற இனம் அல்ல; மாறாக, வஞ்சகர்களால் வீழ்த்தப்பட்டவர் தமிழர் என்ற எண்ணங்களை வெளிப்படுத்தியவர் புதுவைச்சிவம்.

புரட்சிக் கவிஞரோடு நெருங்கிப் பழகி, அவரது கையெழுத்துப் படிகளைப் பெயர்த்தெழுதி அவருக்கு உதவும் நற்றொண்டு ஆற்றியவர்

புதுவைச்சிவம். பாவேந்தரின் பெரும்புலமையைப் பாராட்டி ஏற்றுக் கொள்ளும் மனமும் நல்ல உள்ளமும் கொண்டிருந்தார் புதுவைச் சிவம். பாரதிதாசன் பாய் விரித்து ஒரு தலைகணையில் படுத்துக்கொண்டே எழுதுவார். அப்படி எழுதும்போது உணர்ச்சி பொங்கிவரும் வேகத்தில் எழுதுவதால், கவிதையில் அடியோ, சீரோ குறையுமானால் அதை அவரிடம் காட்டித் திருத்தி, எடுத்தெழுதி, ஏடுகளுக்கு அனுப்பக்கூடிய அளவுக்கு அவரிடம் நெருக்கமான உறவும், பற்றும் கொண்டிருந்தார் புதுவைச்சிவம். இன்னும் சொல்லப்போனால், நீ ஏன் கவிதை எழுதக் கூடாது என்று சிவத்தை நோக்கிப் புரட்சிக் கவிஞர் கேட்ட பின்னரே, சிவம் எழுதத் தலைப்பட்டார் என்பது வரலாறு.

புதுவைச்சிவம் நடத்திய இதழ்களிலும் வெளியிட்ட நூல்களிலும் வெளியிடப்பட்டுள்ள படம் உதயசூரியன். அவர் நடத்திய பத்திரிகை ஒன்றின் பெயர் ஞாயிறு. 1940களிலேயே, உதயசூரியன் படம்போட்டு ஏட்டை வெளியிடும் ஆர்வம் அவருக்கு ஏற்பட்டிருப்பதை என்ன வென்று கூறுவது? அன்று அவர் வெளியிட்ட அந்த உதயசூரியன் படம்தான் அண்ணா கண்ட தி.மு.க.வின் தேர்தல் சின்னமாக இன்று உயர்ந்துள்ளது. பெரியார் பெருந்தொண்டு என்ற நூலில் பெரியாரின் தியாகம், உழைப்பு, மாபெரும் குறிக்கோள் அனைத்தையும் விவரித்து எழுதியுள்ளார் புதுவைச்சிவம். ஒரு நூலில் இந்தியாவுக்கே சுதந்திரம் கிடைப்பதாக இருந்தால்கூட, மக்களின் அறியாமையும் மூட நம்பிக்கையும் ஒழிந்தால் தவிரச் சுதந்திரத்தை நுகர முடியாது என்று கூறுகிறார் புதுவைச்சிவம். 'மூடச் செயல் எல்லாம் முற்றும் ஒழியாமுன், நாடாது தன்னரசு' என்ற புதுவைச்சிவத்தின் வரிகள், புதுவைச்சிவம், பாரதிதாசன், அண்ணா, பெரியார் ஆகியோரின் கருத்து மட்டுமல்ல. தேசியகவி பாரதியார்கூட அந்தக் கருத்தைச் சொல்லியிருக்கிறார். சுதந்திரத்திற்காக எழுச்சி மிகுந்த பாடல்களைத் தந்த பாரதியார், அதே காலத்தில் சாதி வேற்றுமை ஒழிந்த சமத்துவம் தழைக்கும் சமுதாய விடுதலை இன்றேல் சுதந்திரம் சிறக்காது என்றும் கூறியிருக்கிறார்.

புதுவைச்சிவம் அவர்கள் 1969இல் நாடாளுமன்ற தி.மு.க. கொறடாவாகப் பணியாற்றினார். அப்போது இவர் அங்கே முதன் முதலாகத் தமிழில்தான் பேசினார். இப்படிப் பல பெருமைகளுக்கு முன்னோடியாக இருந்தவர் புதுவைச்சிவம். தந்தை பெரியாரின் கொள்கைகள் மீது அவருக்கிருந்த அளவு கடந்த ஈடுபாடு காரணமாக, ஆண்டுக்கு ஒரு முறை புதுச்சேரியில் கூட்டம் ஏற்பாடு செய்து என்னை

அழைத்தாலும் அவரிடம் கொண்ட நட்பு காரணமாக, உடனடியாகப் பதில் எழுதி அதில் கலந்து கொண்டதை ஒரு பெருமையாகக் கருதுகிறேன்.

அமரர் புதுவைச்சிவம் நான் மதிக்கின்ற தன்மானக் கவிஞர். நான் பாராட்டுகிற ஓர் அரசியல்வாதி. கொள்கையோடு இறுதிவரை வாழ்ந்த பகுத்தறிவாளர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அப்படிப் பட்ட ஒருவரின் நினைவைப் போற்றுவதற்காக அவருடைய மகனாலேயே அவரைப் பற்றிய ஒரு சொற்பொழிவு நடத்துவதையும் அப்பொழிவை நூலாக்கி அச்சொற்பொழிவன்றே வெளியிடுவதையும் உளமாரப் பாராட்டுகின்றேன்.

புதுவைச்சிவம் புகழ் வாழ்க.

**க. அன்பழகன்**

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

தமிழ்நாட்டில் எந்த அளவு திராவிடக் கொள்கையை நிறுவிடப் பலரும் அன்று பாடுபட்டனரோ அதுபோலவே புதுச்சேரியிலும் பலர் பாடுபட்டனர். திராவிட இயக்க வரலாறு குறித்துப் பேசுவோர் புதுச்சேரியில் இருந்து கவிதை நூல்கள், நாடகங்கள், இதழ்கள் எனப்பல நிலைகளில் திராவிட இயக்கக் கருத்தியல் குறித்துப் பாடுபட்ட பாவேந்தர், புதுவைச்சிவம் ஆகியோரது பங்களிப்புகளை மறந்துவிட இயலாது.

> *தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் தொடங்கிய காலத்தில் (1938) தமிழுணர்வுக் கவிதைகளும் பெரியார் ஈ.வெ.ராமசாமியின் சுயமரியாதை இயக்கம் பரவத் தொடங்கிய காலத்தில் பகுத்தறிவுக் கவிதைகளும் சமுதாயத்தில் பெரும் வரவேற்பைப் பெற்றதோடு சமுதாய மாற்றத்திலும் மறுமலர்ச்சி யிலும் பெரும் துணையாகவும் நின்றன (ப. 6)*

இந்தப் பின்புலத்தில்தான் புதுவைச்சிவம் கவிதைகளையும், நாடகங்களையும் எழுதிவந்துள்ளார் (ப. 13). இவருக்கு முன்னோடி களாகப் பாரதியும் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும் விளங்குகின்றனர்.

'திராவிடநாடு' என்ற கொள்கையைத் தந்தை பெரியார் முன்வைத்த போதும் (1949) பின்னர்ப் பெரியாரிடமிருந்து தனியே பிரிந்து சென்ற அண்ணா முன்வைத்த (1969) "தமிழ்நாடு" எனும் கொள்கையை முன்வைக்கும் காலம் வரை புதுவைச்சிவம் அவர்கள் 'திராவிட நாடு' என்ற கொள்கையை மனங்கொண்டு தமிழரிடையே தொடர்ந்து தன் படைப்பிலக்கியங்கள் வழியே முன்வைத்துச் செயற்பட்டவர்.

> வடக்கில் வேங்கடம் தெற்கில் குமரி
> வாய்த்ததுவே தமிழ்நாடு... (புதுவைச்சிவம் 1945: 3)
>
> ஆந்திர மலையாளந்துளு கன்னடந்தமிழே – உன்
> அங்கமென விளங்க நிமிர்ந்தாடிடுங் கொடியே..
> (புதுவைச்சிவம் 1945:41)

புதுவைச்சிவம் அவர்களின் படைப்புகளிலிருந்து பல எடுத்துக்காட்டுக்களைச் சுட்டி அவரது புதல்வர் சிவ. இளங்கோ அவர்கள் தமிழ்நாடும், திராவிட நாடும் ஒரே எல்லைப்பகுதிகளைக் கொண்டவை எனத் துணியலாம் எனும் போன்ற கருத்துக்களை முன்வைக்கிறார். (ப. 22)

சுதந்திரப் போராட்டக் காலகட்டங்களில் பல கலைஞர்களும், படைப்பாளிகளும் தத்தம் பங்களிப்புக்களைச் செய்தனர். அதுபோன்றே திராவிட இயக்கக் கருத்தியலை மக்களிடம் முன்வைத்தபோது பாவேந்தர், புதுவைச்சிவம் போன்றோர் தம் பங்களிப்புகளைப் புதுச்சேரியில் முன்வைத்துள்ளனர்.

இந்தியாவை ஆங்கிலேயர்கள் ஆதிக்கப்படுத்தியதுபோன்றே புதுச்சேரியைப் பிரான்ஸ் நாட்டார் ஆதிக்கப்படுத்தியிருந்தனர். புதுவைச்சிவமும் பிரிட்டிஷ் ஆரியர் ஆதிக்கத்தை எதிர்த்தார். 1935ஆம் ஆண்டில் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம் முதல் இதழுக்கான வாழ்த்துப் பாவில்

> விடுதலை யுன் எண்ண மதாய் இருத்தல் வேண்டும்
> (ஸ்ரீசுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம், ஆனி 1935)

என்று ஒலிக்கும் அவரது குரல் எனப் பதிவுகள் (ப. 27) இவரது நூலின் பக்கங்கள் தோறும் மிளிர்கின்றன.

> பார்ப்பனர்க்குச் சமூகத்தில் அடிமை யானோம்
> பாராளும் ஆங்கிலர்க்கும் அடிமைப்பட்டோம்
> (புதுவைச்சிவம் 1944:43)

> பிழைக்க வந்த கூட்டத்திற்கே கொழுப்பு மிகுந்து
> போச்சு மேலும் (புதுவைச்சிவம் 1951–23)

பெரியார், அண்ணா போன்றோரின் மேடைப் பேச்சுகள், எழுத்துகள் இவைகளை உள்வாங்கிய புதுவைச்சிவம் அவர்கள் தன் படைப்புகளில் (ப. 28) தொடர்ந்து பதிவு செய்துள்ளார்.

> புராணங்கள் அறிவை மாய்க்கின்றன. மூட நம்பிக்கையை வளர்க்கின்றன என்று சுயமரியாதை இயக்கத்தினர் சொல்லி வந்ததை, கடவுள் நம்பிக்கையாளர்கள் எதிர்த்துவந்தனர். இப் பிரச்சினை இவ்விரு பிரிவினரிடையே நேரடி வாத மாகவும் நிகழ்ந்திருக்கிறது. புராணங்கள் தேவை யில்லை என்ற கருத்தினில், அறிஞர் அண்ணா, ஈழத்தடிகள் ஆகியோரும், புராணங்கள் தேவையே

> என்ற கருத்தினில் சோமசுந்தரபாரதியாரும், ரா.பி. சேதுபிள்ளையும் நிகழ்த்திய சொற்போரினை, "தீ பரவட்டும்" என்ற தலைப்பிட்டு 1943ஆம் ஆண்டில் நூலாகத் தனது ஞாயிறு நூற்பதிப்பகம் மூலமாகப் புதுவைச்சிவம் வெளியிட்டார் என்பது குறிப்பிடத் தக்கது. (ப. 111)

திராவிட இயக்க வரலாறு அறிய விரும்புவோருக்கு இது போன்ற அரிய தகவல்கள் கொண்டு எழுதப்பட்ட "புதுவைச்சிவம் கவிதைகளும் கோட்பாடுகளும்" எனும் இச்சொற்பொழிவு நூல் பெரிதும் உதவக்கூடியது. நூலாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்கள் பெயரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப்பெற்றுள்ள அறக்கட்டளையின் பொழிவாக இந்நூல் அமைகின்றது. சொற்பொழிவன்றே அச்சிட்டு வெளிவருவதும் பாராட்டிற்குரியதாகும். இந்த அறக்கட்டளையை நிறுவிய பத்மஸ்ரீ டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களையும் பாராட்டுகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

மாண்புமிகு தமிழக முதல்வர் போன்று, தமிழின் சிறப்புகளைத் தரணி முழுதும் எடுத்தோதி, இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு மேன்மை ஏற்படுத்திவரும் தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அவர்களுக்கு நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத்துறை அரசுச் செயலர் திரு க. முத்துச்சாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலின் மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன், கணிப்பொறியாளர் திருமதி ந. லட்சுமி ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# தன் விவரக்குறிப்பு



பெயர் : சிவ. இளங்கோ

தந்தை பெயர் : கவிஞர் புதுவைச் சிவம்
(புதுவை ச. சிவப்பிரகாசம்)

தாயார் : செகதாம்பாள் அம்மையார்

பிறப்பிடம் : புதுச்சேரி

வயது (2008ல்): 51 (15-2-1957)

கல்வித் தகுதி : இளங்கலை, முதுகலை (மதுரை காமராசர் பல்கலைக்கழகம்)
இளமுனைவர் (புதுவைப் பல்கலைக் கழகம்)
முனைவர் (தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை)
ஆய்வு தலைப்பு: புதுவைச் சிவமும் திராவிட இயக்கமும்
**Office Automation Course MS Office 2000 (Pondicherry Engineering College)**

பரிசுத்திட்டங்கள்:
1. புதுவை அரசின் பாவேந்தர் பட்டயம் (1990)
2. புதுக்கவிதைச் சித்தர் (1994) திருவள்ளுவர் மன்றம், வளவனூர்
3. இலக்கிய மாமணி (1998) திருக்குறள் முத்தமிழ்க் கழகம், திருவள்ளூர்
4. பாவேந்தர் பைந்தமிழ்ச் செல்வர் (1999) பாவேந்தர் பாசறை, சென்னை.
5. இலக்கியச் சிந்தனைச் செம்மல் (2000), தவத்திரு சங்கர தாஸ் சுவாமிகள் இயல் இசை நாடக சபை, புதுச்சேரி
6. சான்றோர் மாமணி (2000), தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் இயல் இசை நாடக சபை, புதுச்சேரி
7. சேவாரத்னா (2001), தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் இயல் இசை நாடக சபை, புதுச்சேரி
8. கவிஞர் தின விருது (2003), வெற்றித் தமிழர் பேரவை, புதுச்சேரி
9. புதுவை அரசின் காமராசர் நூற்றாண்டு விழாக் கவியரங்கப் பட்டயம் (2005)
10. பத்திரிகையாளர் தினவிருது (2007)
11. கவிஞர் புதுவைச் சிவம் நூற்றாண்டுக் கவியரங்கப் பட்டயம் (2008)

இயற்றிய நூல்கள்:

1. கவிஞர் புதுவைச் சிவம் நினைவுப் பூக்கள் (1989)
2. பாவேந்தரும் புதுவைச் சிவமும் (1990)
3. புதிய பேராசிரியர்கள் (1990)
4. பாரதிதாசன் (எ) கனகசுப்புரத்தினம் (1991)
5. பிரஞ்சிந்தியாவும் திராவிட இயக்கமும் (2000)
6. எட்டுமணி நேர வேலை - ஆசியாவில் முதல் வெற்றி (2004)
7. பெரியார் பெருந்தொண்டர் புதுவைச் சிவம் (2007)
8. புதுவைச் சிவம் படைப்புகள் (2008)

தொகுப்பித்த நூல்கள்:

1. புதுவைச் சிவம் கவிதைகள் (1977) (புதுவை அரசின் கலைப் பண்பாட்டுத் துறை வெளியீடு)
2. புதுவைச் சிவம் நாடகங்கள் (2000) (புதுவை அரசின் கலைப் பண்பாட்டுத் துறை வெளியீடு)
3. புதுவைச் சிவம் படைப்புகள் (2007) (காவ்யா வெளியீடு)

வகித்த, வகிக்கும் பொறுப்புகள்:

1. செயற்குழு உறுப்பினர் காப்பியக் கழகம், புதுவை
2. தலைவர், பாவேந்தர் அறிவியல் இலக்கியப் பேரவை
3. துணைச் செயலர், கவிஞர் புதுவைச் சிவம் இலக்கியப் பேரவை
4. பொதுச் செயலாளர், தலித்சேனா - புதுவை
5. செயலாளர், தமிழ் வளர்ச்சி நடவடிக்கைக் குழு
6. செயற்குழு உறுப்பினர், தமிழ்ப் பயிற்றுமொழி போராட்டக் குழு
7. செயற்குழு உறுப்பினர், புதுவைத் தமிழ் எழுத்தாளர் கழகம்
8. இயக்குநர், கவிதை வானில் - புதுச்சேரி
9. தலைவர், கானல்வரி கலைக்குழு - புதுச்சேரி
10. பொதுச் செயலாளர், பிரெஞ்சிந்திய புதுச்சேரிப் பிரதேச விடுதலைக் கால மக்கள் நற்பணி இயக்கம்.
11. புதுச்சேரி மாநில அமைப்பாளர், அண்ணா பேரவை
12. நிறுவுநர், புதுவைச் சிவம் நினைவு திராவிட மொழி இலக்கிய ஆய்வு அறக்கட்டளை

# உள்ளடக்கம்

# இருபதாம் நூற்றாண்டின் படைப்புச் சூழல்

தமிழ் இலக்கியம் தொடக்க நிலையிலிருந்து மரபு சார்ந்தே படைக்கப்பட்டு வந்துள்ளது. வடிவங்களிலும், பொருண்மை களிலும் காலம் சார்ந்த சில மாறுதல்கள் காணப்பட்டாலும் அவை அனைத்துமே தமிழ்ப் பண்பாட்டின் கூறுகளில் ஒன்றாகவும் அவற்றை வெளிப்படுத்தும் வகையிலுமே அமைந்திருந்தன. இந்திய மரபில் மிகவும் போற்றப்படுகின்ற வடமொழி இலக்கியங்களும், புதிய சிந்தனைப் போக்குகளைத் தமிழுக்குத் தரவில்லை.

இந்நிலையில் ஐரோப்பியர்களின் வருகை இந்தியாவில் கல்வி, பொருளாதாரம், அரசியல் ஆகிய துறைகளில் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்தியது. ஐரோப்பியர்களின் வரலாற்று ஆய்வுப் பணிகள் அத்துறையில் பெருத்த ஆர்வமில்லாதிருந்த இந்தியர்களுக்கு ஆர்வத்தையும் பெருமையையும் ஏற்படுத்தின. குறிப்பாகத் தமிழ் இலக்கியங்கள் குறித்த விழிப்புணர்வும் தமிழர் நாகரிகம், வாழ்வு குறித்த எண்ணங்களும் தமிழர்களிடையே பரவின. செழுமையான இலக்கியத்தையும் பண்பாட்டுக் கூறுகளையும் கொண்டிருந்தவர் தமிழர் என்ற உண்மையை உணர்ந்ததால் இனப்பெருமையும் அதற்குச் சான்று காட்ட வரலாற்றார்வமும் கிளர்ந்தெழுந்தன.

இதனூடே மேலைநாட்டுச் சிந்தனைகளும் தமிழுக்கு அறிமுகமாயின. கவிதையே ஆதிக்கம் செலுத்தி வந்த தமிழ் இலக்கியம், புதினம், நாடகம், உரைநடை, சிறுகதை எனப் படர்ந்து விரியலாயிற்று.

இதனால் காலந்தோறும் வடிவிலும் பொருண்மையிலும், மரபு சார்ந்த மாற்றங்களைப் பெற்று வளர்ந்து வந்த தமிழ்க்

கவிதை இலக்கியம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல புதிய மாற்றங்களையும் வளர்ச்சியையும் எதிர்கொண்டது.

தமிழ்ப்புலவர்கள் கடுநடையில் பாப்புனையும் முறையை மாற்றி எளிமையாகவும் மக்களுக்குப் புரியும் வகையிலும் கவிதை இயற்ற வேண்டிய சூழல் உருவானது. இதனோடு மேலைநாட்டுச் சிந்தனைகளின் தாக்கமும் பதியவே தமிழ்க் கவிதையின் வடிவமும் பாடுபொருள்களும் கூடப் புதியன வாகவும், மாற்றம் பெற்றும் வளர்ந்தன. பாரதியாரின் வசன கவிதைகள், பரிதிமாற் கலைஞரின் தனிப்பாசுரங்கள் ஆகியவற்றை இதற்குத் தொடக்க எடுத்துக் காட்டுக்களாகக் கூறலாம்.

தமிழிலக்கியத்திற்கு நாடகம் என்ற சொல்லும் நாடக உருவாக்கமும் புதிதில்லை என்றாலும், அவை கூத்தின் வடிவங் களிலிருந்து விலகாத தன்மையைக் கொண்டிருந்தன. மேலை நாட்டு நாடகத் தாக்கங்களின் விளைவாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்க்கூத்து அமைப்பு விரவிய நாடகங்கள் உருப்பெற்றன. சங்கரதாஸ் சுவாமிகளும் பம்மல் சம்பந்த முதலியாரும் இவ்வகை நாடகப்பாணியை அறிமுகப்படுத்தியவர்களாக இருந்தனர். இது பொதுமக்கள் ஊடகமாகப் பார்க்கப்பட்டதால், சமயச் சார்பினரும் இயக்கச் சார்பினரும் இவற்றைப் பெருமளவில் பயன்படுத்தினர். இக்காலத்தில் நாடகங்கள் பல நூல்வடிவம் பெற்றன. இதற்கு முன்னர் நாடக நூல்கள் நூல்வடிவம் பெறாமைக்கு அவை அடித்தட்டு மக்களுக்கு உரியதாகவும் இலக்கியத்தரம் கொடுத்துப் போற்றப்படாமையும்தான் காரணம் என்று கருதப்படுகின்றது (அரங்க.முருகையன் 2001: 156).

மரபிலக்கியங்களையே இலக்கியப் படைப்பாகக் கருதிய காலத்தில் புதினங்களும் சிறுகதைகளும் இலக்கியமாகக் கருதப்படவில்லை. மேலைநாட்டுச் சிந்தனைத் தாக்கத்தின் விளைவாகத் தமிழிலும் புதினமும் சிறுகதையும் மக்கள் இலக்கியமாக வளர்ந்த தவிர்க்கவியலாத சூழ்நிலையில்

இலக்கியத் தகுதியைப் பெற்றன. தற்காலத் தமிழ் இலக்கியப் படைப்புகளில் இவையே முன்னணியில் இடம்பிடித்துள்ளன.

உரைநடை இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்து தான் வளர்ச்சி நிலையை எட்டியுள்ளது. உரைநடை என்னும் இலக்கிய வகையை அறிமுகப்படுத்தவே புதினங்கள் தமிழில் அறிமுகப்படுத்தப்பட்டன என்றும் சில ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர் (த.நடராஜன் 2001 : 150). அறிவியல் கண்டுபிடிப்பால் பரவிய அச்சுக்கலை, உரைநடையைப் பெருமளவில் வளர்ச்சியுறச் செய்தது. பத்திரிகைகள் உரைநடையின் உறைவிடமாக விளங்க, இதழ்களும் நூல்களும் உரைநடையை இலக்கியமாக மாற்றின. கருத்து, கற்பனை, அணிகலன்கள் போன்ற கவிதைக்கு மட்டுமே இருந்த கூறுகள் உரைநடைக்கும் உரிய அளவில் பொதுத்தன்மை அடைந்து விட்டன என்பது ஆய்வாளர்களின் கருத்து (வல்லம் வேங்கடபதி 1988: 21).

இருபதாம் நூற்றாண்டில் கவிதை இலக்கியத்தில் முற்றிலும் புதிய வரவாகப் புதுக்கவிதை அமைந்தது. மேலை நாட்டுச் சிந்தனையின் தாக்கமும் மேலைநாட்டு இலக்கிய இயக்கங்களின் தாக்கமும் இதில் மிகுந்து காணப்படுகின்றன. பாரதியாரின் வசனகவிதைகளில் தொடங்கி, ந. பிச்சமுத்து காலங்களில் வளர்ந்து இன்று மிகப் பெரும் இலக்கிய வடிவமாக இது மாறியுள்ளது. ‘தமிழ்ப் புதுக் கவிதையில் மேலைநாட்டு இலக்கிய இயக்கங்கள் வடிவ நிலையிலும் உள்ளடக்கத்திலும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன’ என்று ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர் (இரா. சம்பத் 1992: 20).

காலந்தோறும் மாறியும் உருவாகியும் வருகின்ற மரபுவழிச் சிந்தனைகளே இலக்கிய வகைகளிலும் அவற்றின் வடிவம் மற்றும் உள்ளடக்கத்திலும் மாற்றங்களை ஏற்படுத்து கின்றன. அதே நேரம் கவிதை, காப்பியம், நாடகம், புதினம், சிறுகதை, உரைநடை ஆகிய இலக்கியத்தின் பன்முகங்களும் சமுதாயம் ஏற்கும் புதிய சிந்தனைகளைச் சார்ந்தும்

அமைகின்றன. இந்த வகையிலேயே இருபதாம் நூற்றாண்டின் படைப்புச் சூழல், அன்றைய சமுதாய நெறிகளைச் சார்ந்தும், மேலைநாட்டுச் சிந்தனை வளர்ச்சியால் தூண்டப் பெற்றும் வந்துள்ளது. 'பழையன கழிதலும், புதியன புகுதலும், வழுவல, கால வகையினானே' என்ற நன்னூலின் பொருள் பொதிந்த கூற்றும் இங்கு நோக்கத்தக்கது.

**கவிதையும் உணர்ச்சியும்**

நனவு வாழ்க்கையில் தனக்கு மறுக்கப்படுபவற்றை அழகியல் உணர்வுள்ள கலைப்படைப்புகளாக மனிதன் படைத்தான். அக்கலைப்படைப்புகளில் கவிதையும் ஒன்று. 'அடக்கப்பட்ட உணர்வுகளின் வெளிப்பாடே கலையும் இலக்கியமும்' என்று உளவியலாரை மேற்கோள் காட்டிச் சில ஆய்வாளர்கள் சுட்டுகின்றனர் (த.நடராஜன் 2001: 20). விலங்கிலிருந்து பரிணாமம் பெற்ற மனிதனின் அடிப்படை உணர்ச்சிகள் காமம், போர் என்றிருக்க, இவ்விரண்டு உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்துவதே பகுத்தறிவுள்ள மனித சமுதாயமாக வளர்ச்சி பெற்றது. ஆனாலும் தற்காப்புக்காகவும் நாட்டுப்பற்றின் வெளிப்பாடாகவும் போர்த் தொழில் இன்றுவரை பல நாடுகளால் போற்றப்பட்டே வருகிறது. இவற்றை இலக்கியங்கள் ஆதரித்து மேம்படுத்தின. சங்க இலக்கியப் பாடல்கள் பெரும்பாலானவை போரை விரும்பியும் போர் உணர்ச்சி ஊட்டுவதாகவுமே அமைந்துள்ளன.

'கவிதைக்கு உணர்ச்சி ஓர் இன்றியமையாத உயிர்க்கூறு' என்று அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர் (எஸ். வையாபுரிப் பிள்ளை 1952: 350). மேலும் கவிதைகள் வாழ்வியல் உணர்வுகளைக் கிளர்ந்தெழுப்பக் கூடியனவாகவும் நோக்கப் படுகின்றன. ரூசோ (Russo), வால்டேரின் (Voltaire) கவிதைகள் பிரெஞ்சுப் புரட்சிக்கு அடிப்படையாக அமைந்ததைப்போல், ஆதிக்கத்திற்கெதிரான உணர்வுகளைத் தூண்டிவிடும் விதத்தில் விக்டர் உயூகோ (Victor Hugo), வால்ட் விட்மன் (Walt Wittman),

பாப்லோ நெருடா (Baplo Neruda) ஆகிய உலகப் புகழ்பெற்ற கவிஞர்களின் படைப்புகள் அமைந்தன. வாழ்வியல் உணர்வுகளைத் தூண்டக்கூடிய விதத்தில் அமையும் கவிதைகள் காலத்தை வென்று நிற்கின்றன. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (புறநானூறு பா-192) என்னும் சங்க இலக்கியப் பாடல் அடி இன்று உலகளாவிய தத்துவமாகப் போற்றப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் கையறு நிலையும், துணிவும் இன்றுவரை மக்களால் மறக்கடிக்கப்படாமல், 'தேரா மன்னா செப்புவதுடையேன்' என்று இலக்கிய மேடைகளில் ஒலிக்கப் பட அக்கவிதையே காரணமாகிறது. இராமாயணத்தையும், மகாபாரதத்தையும் தெருக் கூத்தாக அமைத்து எளிய கவிதைகளாகப் பாடி ஆடும் பொழுது பார்ப்பவர் கண்கள் பனிப்பதை இன்றும் காணலாம். தேவாரம் போன்ற பக்தி இலக்கியங்களைப் பாடும்போதே பாடுவோருக்கும், கேட்போருக்கும் உணர்வு தூண்டப்பட்டுக் கண்ணீர் சொரிந்து நின்றனர் என்ற செய்தியும் கதைகளின் வாயிலாக வெளிப் படுத்தப்பட்டுள்ளது. உணர்ச்சியும் வடிவமும் இயைந்த இலக்கிய வகைகளில் கவிதையே அதிக உணர்ச்சிமிக்கது என்பது அறிஞர் கூற்று (மு. வரதராசன் 1965: 54).

ஒரு சமுதாயத்தைப் பிணைக்கவும் ஆதிக்கத்தை அழிக்கும் ஒரு தூண்டுகோலாக மாற்றவும் உணர்வுப்பூர்வமான கவிதைகளால் முடியும் என்பதை உலக வரலாறுகள் மெய்ப்பித்திருக்கின்றன. ஆனாலும், கவிஞனுக்கு ஏற்படும் உணர்வைப் பிறரிடம் அந்த வேகங்குறையாமல் ஏற்றும் ஒரு வடிவமாகக் கவிதையைக் கையாளும் உத்தியில் அத்தனைக் கவிஞர்களும் வெற்றிபெற்று விடுவதில்லை. 'பாரதி சகாப்தம்' என்று குறிப்பிடுமளவில் பாரதியின் கவிதைகள் இவ்வகையில் பெரும் வெற்றியைப் பெற்றன. தமிழுணர்வும் தேசியவுணர்வும் அவரது கவிதைகள் மூலம் தமிழ்ச் சூழலை ஊடுருவின. 'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்', 'செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே' போன்ற

அவரது பாடல்கள் உணர்வில் தோய்ந்த கவிதைகளாகக் கருதப்படுகின்றன. உணர்வுப்பூர்வமாக ஒரு கவிஞனின் மேல் எழும் ஈடுபாட்டால் அக்கவிஞனது பெயரையே சூட்டிக் கொள்ளும் வழக்கத்தில் பாரதி ஷெல்லிதாசனாக ஆனார். அதேபோல் 'பாரதிதாசன்' ஆகிய கனகசுப்புரத்தினம், உணர்வுகளைக் கவிதையில் ஏற்றிக் கொடுப்பதில் பாரதியை விஞ்சிய கவிஞராகப் போற்றப் படுகிறார்.

### கவிதையும் சமுதாயமும்

தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் தொடங்கிய காலத்தில் (1938) தமிழுணர்வுக் கவிதைகளும் பெரியார் ஈ.வெ.ராமசாமியின் சுயமரியாதை இயக்கம் பரவத்தொடங்கிய காலத்தில் பகுத்தறிவுக் கவிதைகளும் சமுதாயத்தில் பெரும் வரவேற்பைப் பெற்றதோடு சமுதாய மாற்றத்திலும் மறுமலர்ச்சியிலும் பெரும் துணையாகவும் நின்றன. ஒரு சமுதாயத்தை எழுச்சி பெற வைக்கக்கூடிய பல கூறுகளுள் கவிதைகள் மிகச் சிறப்பான பணியாற்ற முடியும் என்பதைப் பாரதி, பாரதிதாசனின் கவிதைகள் நிரூபித்திருக் கின்றன. அதனாலேயே இவ்விருவரையும் தொடர்ந்து பெருமளவில் தமிழ்க்கவிஞர்கள் உருவாகியிருக்கின்றனர் என்பதும் ஏற்புடையதே. தற்காலச் சமுதாய வரவேற்பின் ஏற்ற இறக்கங்களுக்குக் காலச்சூழலும் பாடுபொருளும் பெருந் துணையாக இருப்பதைக் காண முடிகிறது.

### சுப்பிரமணிய பாரதி

யாப்புகளை எளிமைப் படுத்தும் முயற்சி பத்தாம் நூற்றாண்டிலிருந்து தொடங்கிப் பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகளார், குணங்குடி மஸ்தான் சாகிபு, அண்ணாமலை ரெட்டியார், வேதநாயக சாஸ்திரி, வேதநாயகம் பிள்ளை முதலானவர்களால் வளர்ந்து வந்தது. என்றாலும், தமிழ்க் கவிதைகளை எளிமையான வடிவில் கொடுத்து அதை மக்கள் இலக்கியமாக மாற்றிய பெருமையுள்ளவராகப்

பாரதியைக் குறிப்பிடுமளவுக்கு அவரது கவிதைகள் மக்களைச் சென்றடைந்தன. அந்தாதி, உலா, சதகம், பள்ளு, புராணம் போன்ற வடிவங்களில் பக்திப் பாடல்களை மட்டுமே தமிழ்ப்புலவர்கள் அளித்து வந்த நிலை மாறியது. புதிய வடிவங்களை அறிமுகப்படுத்தவும், அதை ஏற்றுக் கொள்வதுமான சூழ்நிலை உருவாகத் தொடங்கிய காலத்தில் அவ்விடத்தைச் சரியாக நிரப்புவதாகப் பாரதியின் கவிதைகள் அமைந்தன. மேலைநாட்டுச் சிந்தனைத் தாக்கமுள்ள தமிழ்க்கவிஞர்களால் புதிய வடிவங்களும் பொருண்மைகளும் தமிழுக்கு அறிமுகம் செய்யப்பட்டன. பரிதிமாற்கலைஞர், சோமசுந்தரபாரதி, இராகவையங்கார், வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார், பூண்டி அரங்கநாத முதலியார் போன்றோர் இவ்வகைப் புதுமைகளைச் செய்யத் தொடங்கினர் (மு. இளங்கோவன் 2001:10). இதேபோல் பாரதியும், ஷெல்லி (Shelly), வால்ட் விட்மன் (Walt Wittman) ஆகியோர் செய்த கவிதைப் புதுமைகளைத் தமிழிலும் அறிமுகப் படுத்தினார். ''புதுநெறி காட்டிய புலவன்'' என்று பாரதிதாசன் குறிப்பிடுவதற்கேற்பவே பாரதி கவிதை வடிவத்தைப் புதுக்கியதுடன், புதிய பொருண்மைகளிலும் பாடல்களை யாத்தார். விடுதலை இயக்கம் குறித்த புறச்சார்பு உணர்வுகளும் அவரது கவிதைகளில் பாஞ்சாலி சபதம் போன்ற கவிதை இலக்கியப் படைப்புகளாக வெளிப்பட்டன. அவரது கண்ணன் பாட்டும் குயில் பாட்டும் புதிய கற்பனை, உள்ளடக்கம் மற்றும் வெளியீட்டு உத்திகளைத் தமிழுக்குத் தந்து, வருந் தலைமுறையினர்க்கு வழிகாட்டுவனவாக அமைந்தன. 'ஒரு மொழியில் பெருங்கவிஞனொருவன் செயற்பட்டபின் கவிதை உலகம் முன்னிருந்தது போல் இருக்கமாட்டாது. மாற்ற முடியாத மாற்றங்கள் நிகழ்ந்துவிடுகின்றன' என்று ஆங்கில அறிஞர் எலியட் (Eliot) குறிப்பிட்டதற்குப் பொருத்தமானவராகப் பாரதியார் விளங்குகிறார்( மு. இளங்கோவன் 2001: 14).

**பாரதிதாசன்**

தமிழ் இலக்கியப் பாரம்பரியத்தில் பக்தி இலக்கியம் படைக்கும் மற்றுமோர் புலவராகத் தனது இலக்கிய வாழ்வை ஆரம்பித்த கனக- சுப்புரத்தினம், பாடலிற் புதுமுறைப் புதுநடை கண்டு அதில் வெற்றி நடைபோட்ட புரட்சிக் கவிஞராக மிளிர்ந்ததற்குப் பாரதியாரே காரணம் என்பது தமிழிலக்கிய உலகமும் ஆய்வுலகமும் அறிந்த உண்மை. தமிழிலக்கிய உலகுக்குப் புதியதாகப் பல பொருண்மைகளைப் பாரதியார் அறிமுகப்படுத்தியதைப்போல், பாரதிதாசனும் பல புதிய பொருண்மைகளைத் தனது படைப்புகளில் கையாண்டுள்ளார். அவரது காலச் சூழலின் வெளிப்பாடாகவும் அவை அவரது கவிதைகளில் நிலை கொண்டன. தமிழ், தமிழினம் என்ற பொருண்மைகள் கவிதையுலகில் மிகப் பெரும் வல்லமை படைத்த வடிவமானதற்குப் பாரதிதாசன் காரணமாக அமைந்தார். அதற்குப் பின்னணியாகத் திராவிட இயக்கம் அமைந்தது. பாரதியின் புதுமுறையைப் பின்பற்றித் தேசிய இயக்கக் கவிஞராக வளர்ச்சி நிலைபெற்ற பாரதிதாசன், தமிழின மறுமலர்ச்சியை இதுவரை யாரும் பாடியிராத அளவில் முன்னெடுத்துச் சென்றதற்குப் பின்னணியில் திராவிட இயக்க எழுச்சி அமைந்திருந்தது. இவ்வியக்கத்தில் பாரதிதாசன் பெற்ற நேரடி அனுபவங்களால் அவரது கவிதைகள் புறச்சார்பு அனுபவ நிலைக் கவிதைகளாகப் பரிணமித்து, சமுதாயத்தில் பெரும் வரவேற்பைப் பெற்றன.

திராவிட இயக்கத்தின் கொள்கைகள் அனைத்தும் பாரதிதாசன் கவிதைகளில் பாடுபொருட்களாக இடம்பெற்றன. மூடநம்பிக்கை ஒழிப்பை வலியுறுத்தியும் இந்தி மொழித் திணிப்பை எதிர்த்தும் பெண்ணுரிமையை நிலைநாட்ட முனைந்தும் தமிழ், தமிழின மேன்மை குறித்தும் படைக்கப் பட்ட பாரதிதாசன் பாடல்கள் மிகச் சிறப்பானவையாக, உணர்வுப்பூர்வமானவையாக இன்றளவும் கருதப்படுகின்றன. ‘தீண்டாமை, பெண்ணுரிமை என்பவைகளைப் பற்றி இவர்

(பாரதிதாசன்) பாடியவை, பாரதியார் பாடியவற்றிலும் பார்க்க உணர்ச்சி கூடியனவாகக் காணப்படுகின்றன. தமிழ், தமிழர், தமிழ்நாடு, என்பவற்றைப் பற்றி இவரளவு பொங்கி வழியும் ஆர்வத்தோடு பாடிய தமிழ்ப்புலவர் வேறு ஒருவருமிலர்' என்று பாவேந்தர் கவிதைகள் குறித்து ஆய்வாளர்கள் மதிப்பிட்டுள்ளனர் (ஆ. வேலுப்பிள்ளை 1985: 208) .

**புதுவைச்சிவம்**

தனக்குப் பின் வரக்கூடிய ஒரு பெருங்கவிஞனைப் பாரதியார் தன் காலத்திலேயே அடையாளம் காட்டிச் சென்றார். 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலத்தைச்சேர்ந்த கனக-சுப்புரத்தினம்' என்று பாரதியார் குறிப்பிட்டதிலிருந்து தன்னைப் போன்ற புதுநெறிப் புலவர்களின் பட்டாளம் ஒன்றை உருவாக்கப் பாரதியார் கொண்ட விருப்பம் தெரிய வருகிறது. ஆனால் பாரதி பரம்பரை பாரதிதாசனோடு நின்று பின்னர்ப் பாரதிதாசன் பரம்பரை என்று மிகப்பெரிய வளர்ச்சி நிலையை எட்டியது. 'பாரதி, பாரதிதாசனாய் வளர்ந்து பாரதிதாசன் பரம்பரையாய்ப் பூத்துக் குலுங்குகிற காட்சியே இன்றைய இலக்கியக் காட்சியாகும்' என்ற தமிழண்ணலின் கூற்று நோக்கத்தக்கது(மு. இளங்கோவன் 2001: 19).

மேற்குறிப்பிட்ட பரம்பரைக் கவிஞர்களில் பாரதி, பாரதிதாசனுக்கு அடுத்த நிலையில் குறிப்பிடக்கூடியவராகக் கவிஞர் புதுவைச்சிவம் விளங்குகிறார். புதுச்சேரியில் பாரதி, பாரதிதாசன் ஆகியோரின் சமகாலத்தில் வாழ்ந்தவரான புதுவைச் சிவம், பாரதியைப் பாரதிதாசன் வழி நன்கு உள்வாங்கியவர். பாரதிதாசனோடு மிக நெருக்கமாகப் பல்லாண்டுக்காலம் ஒன்றாகப் பழகி, ஒரே இயக்கத்தில் பணியாற்றி வந்தவர். இந் நிலையே புதுவைச்சிவத்திற்குப் புதுநெறி, புதுநடையில் தன் கவிதைப் படைப்புகளை உருவாக்க உணர்வுத் தூண்டலாய் நின்றது.

பார்ப்பனராதிக்க எதிர்ப்பியக்கத்தின் தீவிர ஈடுபாடு இருந்தாலும், பாரதியைப் பாரதிதாசன் எப்போதும் உயர்வாகப்

போற்றி வந்தது போலவே, புதுவைச்சிவமும் பாரதியைப் போற்றியே வாழ்ந்தார். இன்னும் ஒருபடி மேலேபோய்ப் பாரதியைச் சீர்திருத்த இயக்கத்தின் தலைவராகவே குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம் (புதுவைச்சிவம் 1948: முன்னுரை). அதேபோல் பாரதிதாசனிடமே யாப்புப் பயின்று, அவரது கவிதை அரவணைப்பில் தானும் ஒரு கவிஞனாக உருவானதைத் 'தனக்குத் தீந்தமிழளித்த ஆசிரியர்' என்று பாரதிதாசனைப்பற்றிக் குறிப்பிடுவதன் மூலம் புதுவைச்சிவமே தெளிவு படுத்துகிறார் (புதுவைச்சிவம் 1944: முன்னுரை).

தன்னுணர்ச்சி மிகுந்த கவிதைகளைவிடப் புறவுணர்ச்சி மிகுந்த கவிதைகளையே பாரதிதாசன் அதிகமாக இயற்றி யுள்ளார். பாரதியார் காலத்தில் தமிழின மேம்பாடு குறித்துப் பாடிய புறவுணர்ச்சிக் கவிதைகள் கூட கால மாறுபாட்டால் தற்சார்பு நிலைக் கவிதைகளாகவே கருதப்படுகின்றன (வல்லம் வேங்கடபதி 1988:23). ஆனால் புதுவைச்சிவத்தின் அனைத்துக் கவிதைகளுமே புறவுணர்ச்சி மிகுந்த புறச்சார்பு நிலைக்கவிதைகளாகவே அமைந்துள்ளன. இந்நிலைக்குப் புதுவைச்சிவமே விளக்கம் கொடுத்திருக்கிறார். தனக்கு உலகப் பொது அறிவை உணர்த்திய பெரியார் ஈ. வெ.ராவைத் தனது முதலாசிரியராகவும், தமிழறிவை வளர்த்த பாரதிதாசனை இரண்டாம் ஆசிரியராகவும் அவர் குறிப்பிடுகின்றார் (புதுவைச்சிவம் 1944: முன்னுரை).

தனது படைப்புகளின் தொடக்க நிலைமுதல் இறுதி வரையில் தன்னைத் திராவிட இயக்கக் கவிஞராகவே அடையாளம் காட்டியிருக்கும் புதுவைச்சிவம், அவ் வியக்கத்தில் இணைந்து இயக்கவாதியாகிப் பல்வேறு பொறுப்புகளை வகித்துப் பல போராட்டங்களில் ஈடுபட்டு, பொதுக்கூட்டங்களில் கொள்கை விளக்கமளித்துப் பெற்ற நேரடி அனுபவங்களால் அவரது கவிதைகள் புறச்சார்பு அனுபவ நிலையிலேயே அமைந்து இயக்க வரலாற்றுடன் இணைந்தே செல்கின்றன.

ஒரு படைப்பாளியின் இயக்க மாற்றம் அவரது கவிதைப் பொருண்மைகளிலும் தலைகீழ் மாற்றத்தை ஏற்படுத்தி விடுகிறது. இதற்குக் கண்ணதாசன் படைப்புகளை எடுத்துக் காட்டாகக் கூறலாம். திராவிடத் தேசியத்தில் ஆரம்பித்துத் தமிழ்த் தேசியமாகிப் பின்னர் இந்தியத் தேசியப் பொருண்மைகளில் கண்ணதாசனின் பாடல்கள் உருவாக்கிய நிலை பரிணாம வளர்ச்சி என்று ஆய்வாளர்களால் குறிக்கப் பெறுகின்றது (வல்லம் வெங்கடபதி 1988: 38). இந்தியத் தேசியத்தில் ஆரம்பித்துத் திராவிடத் தேசியமாக வளர்ந்து, தமிழ்த்தேசியமாக இறுதி நிலையை எட்டிய பாரதிதாசனின் கவிதைப் பொருண்மைகளும் பரிணாம வளர்ச்சியின் நிலை என்றே சுட்டப்படுகின்றன (மு. இளங்கோவன் 2001: 20-33). புதுவைச்சிவம் கவிதைகளில் இத்தகைய மாறுபாடு காணப்பட வில்லை. தொடக்கம் முதலே அவரது கவிதைப் பொருண்மைகள் இயக்கம் சார்ந்தவையாகவே இருந்ததைப் போல், இறுதிவரை யிலும் இயக்கத்துடன் இயைந்து செல்கின்ற போக்கு காணப்படு கிறது. இயக்கத்தின் பரிணாம நிலைகள் (சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம்) அவரது கவிதைகளில் பிரதிபலித்தாலும் கூட, இவ்வியக்கங் களிடையே கொள்கை மாறுபாடு பெரிய அளவில் இல்லாத தால், புதுவைச்சிவம் கவிதைகளின் பொருண்மைகளில் தொடக்கம் முதல் இறுதிவரை மாற்றமில்லாத நிலையே காணப்படுகிறது.

### புதுவைச்சிவம் கவிதைகள் குறித்த விளக்கம்

புதுவைச்சிவம் கவிதைகள் எழுதத் தொடங்கிய ஆண்டு 1932 என அவரது முதல் வெளியீடான 'புதுவை நெசவுத் தொழில் ஏழையர் எழுச்சிப் பாட்டு' நூலைச் சான்றாகக் கொண்டு குறிப்பிடலாம்.

இதனைத் தொடர்ந்து, 1935 ஆம் ஆண்டில் வெளியான 'ஸ்ரீ சுப்ரமணிய பாரதி கவிதா மண்டலம்' கவிதை இதழில் தொடங்கித் தொடர்ந்து 'குடி அரசு,' 'விடுதலை', 'புரட்சி',

'நகரதூதன்', 'திராவிட நாடு', 'புது உலகம்', 'மன்றம்', 'தென்றல்', 'போர்வாள்', 'கழகக்குரல்', 'பொன்னி', 'திராவிடன்' போன்ற பெரும்பாலான திராவிட இயக்க இதழ்களில் அவரது கவிதைகள் தொடர்ந்து வெளிவந்தன .

புதுவைச்சிவம் இயற்றிய 'ரஞ்சித சுந்தரா அல்லது ரகசியச் சுரங்கம்' என்னும் நாடகத்தின் பாடல்கள் மட்டும் அடங்கிய நூலொன்று அந்நாடகம் நடத்தப்பட்ட 15.8.1936 அன்று வெளியிடப்பட்டது. 1941 ஆம் ஆண்டில் அவர் இயற்றிய 'சமூகசேவை' என்னும் நாடகத்தின் பாட்டுகள் அடங்கிய தொகுப்பொன்று அந்நாடகம் நடத்தியவர்களால் வெளியிடப் பட்டது.

1944 ஆம் ஆண்டு அவரது அடுத்த கவிதை நூல் அச்சில் வெளிவந்தது. பெரியாரின் வாழ்க்கை வரலாறைக் கவிதை நடையில் கூறும் 'பெரியார்பெருந்தொண்டு' என்னும் நூல் புதுச்சேரிப் பூங்கொடிப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது. பின்னர் அதே பதிப்பகம், புதுவைச்சிவத்தின் 'கைம்மை வெறுத்த காரிகை' என்னும் கவிதை நூலை 1945 ஆம் ஆண்டில் வெளியிட்டது. அவரது மற்றொரு கவிதை நூலான 'மறக்குடி மகளிர்' புதுச்சேரித் 'தொழிலாளர் மித்திரன்' நிர்வாகத்தினரால் 1945 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

இதழ்களில் வெளிவந்த தனது கவிதைகளைத் திரட்டிப் புதுவைச்சிவம் முதன் முதலாக ஒரு கவிதைத் தொகுப்பினை 1945 ஆம் ஆண்டில் 'தமிழர் தன்மதிப்புப் பாடல்கள்' என்ற தலைப்பில் தனது ஞாயிறு நூற்பதிப்பகத்தின் முதல் வெளியீடாக வெளியிட்டார். பின்னர் இதே நூல் 1946 ஆம் ஆண்டு இரண்டாவது பதிப்பாக ஞாயிறு நூற்பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது.

இதனைத் தொடர்ந்து 1946 ஆம் ஆண்டு 'திராவிடப்பண்' என்ற தலைப்பில் இசைப்பாடல்கள் தொகுதியும், 'காதலும் கற்பும்' என்னும் கவிதை நூலும், 'மறுமலர்ச்சிக் கவிதைகள்'

என்ற தலைப்பில், இதழ்களில் வெளிவந்த கவிதைகளின் தொகுப்புமாக மூன்று நூல்கள் ஞாயிறு நூற்பதிப்பகத்தால் வெளியிடப்பட்டன.

1948 ஆம் ஆண்டு புதுவைச்சிவம் இயற்றிய 'இந்தி மறுப்புப் பாடல்கள்' என்னும் கவிதை நூலும் 1950 ஆம் ஆண்டு 'தமிழிசைப்பாடல்கள்' என்ற தலைப்பிலான இசைப் பாடல்கள் தொகுதியும், 1951 ஆம் ஆண்டு 'தன்மதிப்புப் பாடல்' என்னும் தலைப்பில் மற்றொரு இசைப் பாடல்கள் தொகுதியும் ஞாயிறு நூற்பதிப்பகம் மூலமாக வெளியிடப் பட்டன.

இதற்குப் பிறகு அவரது கவிதை நூல்கள் ஏதும் அச்சில் வெளிவரவில்லை. நீண்டகால இடைவெளியில் அவரது மறைவிற்குப் பிறகு 1993 ஆம் ஆண்டு, 'புதுவைச்சிவம் கவிதைகள்' என்ற தலைப்பில், முன்னரே அவரது கவிதை நூல்களில் இடம் பெற்ற ஒரு சில கவிதைகளைத் தொகுத்து சென்னையிலுள்ள முல்லைப் பதிப்பகம் வெளியிட்டது.

பின்னர், 1997 ஆம் ஆண்டு புதுச்சேரி அரசின் கலை பண்பாட்டுத் துறை, புதுவைச்சிவத்தின், அச்சில் வெளிவந்த கவிதை நூல்களான 'பெரியார் பெருந்தொண்டு', 'கைம்மை வெறுத்த காரிகை', 'மறக்குடி மகளிர்', 'தமிழர் தன்மதிப்புப் பாடல்கள்', 'திராவிடப்பண்', 'காதலும் கற்பும்', 'மறுமலர்ச்சிக் கவிதைகள்', 'தமிழிசைப் பாடல்கள்', 'தன்மதிப்புப்பாடல்கள்' ஆகிய ஒன்பது நூல்களையும் தொகுத்துப் 'புதுவைச்சிவம் கவிதைகள்' என்ற தலைப்பில் வெளியிட்டது.

புதுவைச்சிவத்தின் எட்டு நாடகங்களைத் தொகுத்து வெளியிட்ட புதுச்சேரி அரசின் கலை பண்பாட்டுத்துறை, அந்நூலில் நாடகங்களைத் தொடர்ந்து 'ரஞ்சித சுந்தரா' (அ) ரகசியச் சுரங்கம்', 'அமுதவல்லி (அ) அடிமையின் வீழ்ச்சி', 'சமூக சேவை', 'சிதைந்த வாழ்வு' ஆகிய நான்கு நாடகப் பாட்டுகளின் தொகுப்பையும் 2000 ஆவது ஆண்டில் வெளியிட்டது.

இங்குக் குறிப்பிடப்பட்டவை தவிரப் புதுவைச்சிவத்தின் வேறு கவிதை நூல்கள் ஏதும் அச்சில் வெளிவந்ததாகத் தகவல் இல்லை. மேற்குறித்தவை தவிரத் திராவிட இயக்க இதழ்களில் வெளிவந்த பல கவிதைகள் இன்னும் தொகுக்கப்படவில்லை. இவை தவிரவும் கையெழுத்துப் பிரதியாகவே கிடைத்திருக்கும் பல கவிதைகளும் இன்னும் தொகுக்கப் பெறவில்லை. இந் நிலையில் மேற்குறித்தபடி நூல்களாக வெளிவந்த கவிதைகள் மட்டுமே இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கவிஞர் புதுவைச்சிவம் இயற்றியுள்ள கவிதைகள் அனைத்துமே இயக்கக் கொள்கைகள் அமைந்தனவாகவே உள்ளன. 1932 ஆம் ஆண்டில் கவிதைகள் இயற்றத் தொடங்கிய அவர், 1951ஆம் ஆண்டுக்குள் பெரும்பான்மைக் கவிதைகளை எழுதி நூலாக்கமும் செய்திருக்கிறார். அதற்குப் பின்னர் அவரது படைப்புகள் மிகுதியும் குறைந்து விடுகின்றன. சரியாக இதே நேரத்தில், திமுக தோற்றம் பெற்று அரசியல் கட்சி ஆனபின்பு, புதுவைச்சிவம் அதன் அமைப்பாளராகப் பொறுப்பேற்று முழுநேர அரசியல்வாதியானதை இதற்கு முக்கியக் காரணமாகக் குறிப்பிடலாம். இந்தக் காலக்கட்டங்களில் திராவிட இயக்க இதழ்களின் ஆண்டு மலர்கள், பொங்கல் மலர்கள், சித்திரை மலர்கள் போன்றவற்றில் மட்டுமே அவருடைய பாடல்கள் காணப்படுகின்றன. புதுவைச்சிவத்தின் கவிதைகள் (நூல்களாக வெளிவந்தவை) திராவிட இயக்கத்தின் வளர்ச்சிக்கும், கொள்கைப்பரப்பலுக்கும் எந்த அளவிற்குத் துணைநின்றன என்பதை இனிவரும் ஆய்வில் காணலாம்.[1]

**படைப்புகளின் உள்ளடக்கம்**

இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையாக வடிவமும், உள்ளடக்கமும் விளங்குகின்றன. இவை இரண்டில் ஒன்றை மட்டுமே அடிப்படையாகவும், இன்றியமையாததாகவும் வலியுறுத்தும் போக்கு மேலை நாட்டுத் திறனாய்வாளர்களிடம் நிலவுகிறது. ஆனால் தமிழில் இலக்கியத்தின் பயன் சமூக

முன்னேற்றம் என்றும், அழகியல் இன்பமே என்றும் இருவேறு போக்குகள் முன்வைக்கப்பட்டுள்ளன. சமூகவியல் அம்சங்களை வலியுறுத்துவதே இலக்கியம் என்று கருதிய கா. சிவத்தம்பி, அழகியல் அம்சங்களைப் புறக்கணிக்கத் தேவை யில்லை என்றும் பின்னர்க் கருத்துக் கூறியிருக்கிறார். கலை சமூகத்திற்காக என்று வலியுறுத்திய மார்க்சியம், இலக்கிய உள்ளடக்கத்தில் உலகளாவிய பார்வையையும் வற்புறுத்துகிறது (இரா. சம்பத் 1992: 236). இலக்கியம் ஒரே நேரத்தில் தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் பயன் அளிப்பதாக இருக்க வேண்டும் என்ற தொல்காப்பியரின் கூற்றே இந்திய இலக்கியக் கொள்கையாகக் கருதப்படுகிறது (த. நடராஜன் 2001 : 93).

புதுவைச்சிவம் கவிதைகளின் உள்ளடக்கம் எந்த அளவிற்குச் சமுதாயம் சார்ந்தது என்ற பார்வையுடன், திராவிட இயக்கக் கொள்கைகளான இனவுணர்வு, மொழி யுணர்வு, பெண்ணுரிமை, தொழிலாளர் நலன், சாதிமத எதிர்ப்பு, சமூகச் சீர்திருத்தம் ஆகியவற்றின் சமுதாய மையக் கருத்தியலின் அடிப்படையில் புதுவைச்சிவத்தின் கவிதைகள் சமுதாயத்திற்கும், திராவிட இயக்க வளர்ச்சிக்கும் பயன்பட்ட நிலை குறித்து இந்நூலில் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

புதுவைச்சிவத்தின் கவிதைகள் குறித்த விளக்கத்துடன் அவரது சிறு காவியப் படைப்புகள், கவிதைக்கதைகள் வெளிப்படுத்திய சமூக, இயக்கப் பார்வைகள் குறித்தும் இந்நூல் ஆய்கிறது.

## திராவிடத் தேசியம்

தென்னிந்தியர்களின் நலனுக்காகப் பாடுபடும் என்ற அறிவிப்போடு 1916 ஆம் ஆண்டில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் தொடங்கப்பட்டது. இவ்வமைப்பு பின்னாட்களில் நீதிக்கட்சி என வழங்கப்பட்டது. ஆனால் இதனைச் சாராத தனி அமைப்பாக உருவெடுத்த சுயமரியாதை இயக்கமே தமிழர்களின் (தென்னிந்தியர்களின்) நலன்கருதித் திராவிடத் தேசியக் கோட்பாட்டை முன்வைத்தது. இது தென்னிந்தியா என்ற அமைப்பை விடவும், திராவிட இந்தியா அல்லது திராவிட நாடு என்ற அமைப்பில்தான் திராவிடத் தேசியம் சாத்தியமாகும் என்றும், அதற்குக் காரணமான திராவிடம் என்பது இனப்பாகுபாட்டின் வழித் தனியாகக் குறிப்பிடக் கூடிய தகுதிவாய்ந்தது என்றும் பெரியார் ஈ.வெ.ராமசாமி விளக்கமளித்தார் (பெரியார் ஈ.வெ. ராமசாமி இனிப் பெரியார் எனக் குறிக்கப்பெறுவார்) .

திராவிடர், ஆரியர் என்ற இனங்களே ஆதியில் இந்தியாவில் இருந்தன என்றும், இந்தியாவின் தென்பாகத்தில் தான் திராவிடர்கள் பெருங்குடி மக்களாக வாழ்கின்றனர் என்றும், இதற்கு 600 ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்று ஆதாரங்கள் உள்ளன என்றும், திராவிட ஆரியக் கலாச்சாரங்கள் அதை உறுதிப்படுத்துகின்றன என்றும் பெரியார் கூறினார். வருணாசிரம தரும முறைப்படி சூத்திரர் என்ற இழிவான பட்டப்பெயரை மாற்றிக் கொள்ளப் பொதுவான உணர்வுள்ள ஒரு சொல்லாகத் 'திராவிட' என்னும் சொல் அமைவதாகவும், அதுவே இலட்சியச் சொல் என்றும் குறிப்பிட்ட பெரியார் மேலும்,

> *"....நாமெல்லோரும் (பார்ப்பனரல்லாதவர்கள்)*
> *ஒரு பட்டியில், ஒரு கூட்டத்தில் சேரும்*

> *படியாக இருக்கவேண்டுமென்று கருதியே நம்மைத் ''திராவிடர்கள்'' என்றும், நமது நாட்டைத் 'திராவிட நாடு' என்றும், திராவிட நாடு தனி சுதந்திர நாடாக ஆகவேண்டும் என்ற கொள்கை வேண்டும் என்றும் முடிவாகத் தீர்மானித்தேன்''*
>
> (வே. ஆனைமுத்து 1974: 500)

என்றும் தெளிவுபடுத்துகிறார். பெரியார் குறிப்பிடும் திராவிட நாடு, 1939 ஆம் ஆண்டில் அன்றிருந்த சென்னை மாகாண எல்லைக்குட்பட்ட பகுதிகளைக் கொண்டதாக இருந்தது. தற்போதைய தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், கேரளா, கர்நாடகா, மகாராட்டிரத்தின் ஒரு பகுதி ஆகியவற்றை உள்ளடக்கியதாகப் பெரியார் குறிப்பிட்ட திராவிட நாடு இருந்தது. இவை எல்லாமே தமிழ்நாடுதான் என்பதும், தமிழிலிருந்துதான் பிற திராவிட மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகியவை தோன்றியதால் தமிழ்நாடு என்ற சொல் இவை அனைத்தையுமே குறிக்கும் என்பதும் பெரியாரின் கருத்து. ஆகவே 1953 ஆம் ஆண்டில் மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்படும் வரை பெரியார் திராவிட நாடு எனக்குறிப்பிட்டதும், தமிழ்நாடு என்று குறிப்பிட்டதும், நமது நாடு என்று குறிப்பிட்டதும் சென்னை மாகாணத்தின் முழுமையான பரப்பையே என்றுதான் கொள்ள வேண்டும். இந்த அடிப்படையில் 1939 ஆம் ஆண்டில் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று ஏற்பட்ட கொள்கையும் முழக்கமும் நாளடைவில் 'திராவிடநாடு திராவிடர்க்கே' என்று மாற்றம் பெற்றன. 1962 ஆம் ஆண்டில் தி.மு.க., திராவிட நாடு கொள்கையைக் கைவிடும் வரையிலும், தமிழ் பேசும் நிலப்பகுதியை மட்டும் குறிப்பிட்டுத் தமிழ்த் தேசியம் என்று பெரியார் குறிப்பிடும் 1953 ஆம் ஆண்டு வரையிலும் மேற்சொன்ன நிலையே நீடித்தது.

*"....திராவிட நாட்டுக்காரர்கள் ஆகிய நாம் 1938 லேயே ஆரம்பித்தோம், திராவிட நாடு திராவிடர்க்கே, தமிழ்நாடு தமிழருக்கே என்று..."*

(வே. ஆனைமுத்து 1974: 717)

என்ற பெரியாரின் பேச்சு மேற்குறிப்பிட்ட நிலையை விளக்கு வதாக அமைகிறது. திராவிட இயக்கத்தில் தொடக்கக் காலம் முதல் கவிஞர்களாக இருந்த பாரதிதாசனும், புதுவைச்சிவமும் திராவிடத் தேசியத்தைத் தங்கள் பாடுபொருளாகக் கொண்டு எண்ணற்ற பாடல்களை இயற்றியுள்ளனர். திராவிட நாட்டு எல்லை, கொடி வணக்கம், நாட்டுப்பாடல், மொழிவாழ்த்து, திராவிடச் சமுதாயம் போன்ற பல்வேறு நிலைகளில் திராவிட நாட்டின் மேன்மையையும் அதன் அவசியம் குறித்தும் இவ்விரு கவிஞர்களும் பெருமளவில் பாடியுள்ளனர்.

**திராவிட நாடு கோரிக்கை**

1789ஆம் ஆண்டின் பிரெஞ்சுப் புரட்சி உலக நாடுகளில் ஏற்பட்ட மற்றப் புரட்சிகளுக்கு முன்னோடி என்று கருதப்படுகிறது. இப்புரட்சிகளும், பல நாடுகள் ஆதிக்கத்தி லிருந்து விடுதலை பெற்ற நிகழ்வுகளும், மற்ற நாடுகளில் அடிமைப்பட்டிருந்த மக்களுக்குத் தங்களது நிலை பற்றிய சிந்தனை அலைகளை எழுப்பின. இது அந்தந்த நாட்டின் இன, மொழி,வரலாறு, பண்பாடு ஆகியவற்றின் உண்மை நிலையை அறியும் விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தியது. புதிய புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளும் பகுத்தறிவைத் தூண்டி அனைத்துவித ஆராய்ச்சிகளுக்கும் வழிவகுத்தன. மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழ்வாய்வுகள், புதையுண்டு கிடந்த திராவிடர் நாகரிகத்தை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தன. தமிழின் சங்க இலக்கியங்கள் தமிழரின் பெருமைக்குரிய நாகரிகத்தை எடுத்தியம்பின. இவற்றின் மூலமாகப் பெற்ற விழிப்புணர்ச்சியின் மூலம் திராவிட நாகரிகம், மற்ற சில பழமைமிகு நாகரிகங்களுக்கு இணையாகவும், சில நாகரிகங்களை விட உயர்வானதாகவும் கருதப்பட்டது. மேலும்,

இந்தியாவைப் பொறுத்தவரை மற்ற பகுதிகளில் காணப்படாத புதுமைப் பண்புகளையும், முற்போக்கு இயல்புகளையும் கொண்டிருப்பதான ஒரு நாகரிகத்திற்குத் தமிழர்கள் உரியவர்கள் என்ற சிந்தனையையும் வலுப்படுத்தியது. அதே நேரம் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் மொழியையும், தமிழர்களின் தாழ்ந்த நிலையையும் முற்காலப் பெருமையோடு ஒப்பிட்டும் பார்க்கும் போக்கும் இயல்பாக எழுந்தது.

தமிழர்களின் முற்காலத்திய உயர்நிலையிலிருந்து தற்காலத்திய தாழ்வு நிலைக்கு ஆரியமும், ஆரிய மொழிகளும், ஆரியப்பண்பாடுமே காரணம் என்று பெரியார் கருதினார். ஆகவே உலகம் போற்றிய தமிழர்களது கலை, நாகரிகம், பழக்க வழக்கம் ஆகியன உயர்ந்த நிலைக்கு வரவேண்டுமானால் திராவிட நாடு சுதந்திரம் பெற்றாக வேண்டும் என்று 1939 ஆம் ஆண்டில் பெரியார் கருத்துரைத்தார். 1930 ஆம் ஆண்டில் இந்தியா ஒரு தனி நாடல்ல என்ற கருத்தை முன்வைத்த பெரியார், 1938 ஆம் ஆண்டில் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற இயக்கத்தை முன்மொழிந்தார். இம்முழக்கம் 1939 ஆம் ஆண்டில் 'திராவிட நாடு திராவிடருக்கே' என்றானது. தமிழர் என்றால் அதில் மற்ற சாதியினரும், இனத்தவரும் அடங்குவர் என்றும், திராவிடர் என்றால் பார்ப்பனர், வடநாட்டினர் உள்ளிட்ட ஆரியர் அதில் அடங்கமுடியாது என்றும் அதனால் இன அடிப்படையில் 'திராவிட நாடு திராவிடருக்கே' என்ற முழக்கம் முன்வைக்கப் படுவதாகவும் பெரியார் அறிவித்தார் (வே. ஆனைமுத்து 1974: XXXIX).

முல்தானி, குஜராத்தி, காஷ்மீரி, மார்வாடி, பனியா ஆகிய வடநாட்டினர் திராவிட நாட்டின் முக்கியத் தொழில்களை யெல்லாம் வசப்படுத்தித் திராவிட நாட்டுச் சொத்துக்களைக் கொள்ளை கொண்டு போவதாலும், ஆதிக்கமும் அதிகாரமும் முழுமையாக வடவர்களின் கையிலேயே இருப்பதாலும் திராவிட நாடு தனியே பிரிந்தால்தான் அதன் பொருளாதாரம் சீர்படும் என்றார் பெரியார். திராவிட நாட்டைத் திராவிடர்களே

ஆளவேண்டும்; ஆதலால் பிரிட்டிஷாரும் கூட திராவிட நாட்டை விட்டு வெளியேற வேண்டும் என்றார் பெரியார்.

> *''....நம்மிடத்திலேயிருந்து வாங்கிய நாட்டை வெள்ளைக்காரன் நம்மிடத்திலேதான் கொடுக்க வேண்டும் அதை வடநாட்டான் எடுத்துக் கொள்ளக் கூடாது.''*

( வே. ஆனைமுத்து 1974 : 715)

என்று பெரியார் கூறினார். வடநாட்டவர்கள் தமிழர்களைவிட மட்டமானவர்கள், குறைந்தவர்கள், நாகரிகம் அற்றவர்கள், மூடநம்பிக்கைக்காரர்கள் என்று மதிப்பிட்டார் பெரியார்; எனவே அவர்களின் ஆதிக்கத்தின்கீழ் திராவிட நாடு இருக்க முடியாது என்று கருதினார். அனைத்து விதமான நிலைகளிலும் வட நாட்டினரின் ஆதிக்கத்தை ஒழித்துத் திராவிட நாடு சுதந்திரத் தனி அரசு அமையப்பெற்ற நாடாகப் பிரியவேண்டும் என்பதே திராவிடர் கழகத்தின் மூச்சு என்றார் பெரியார் (வே. ஆனைமுத்து 1974: 695-720).

1. *''வடநாட்டுப் பொருள் விற்கும் சந்தையாக்கி*
   *வடிகட்ட வழிசெய்தார் திராவிடத்தை''*

(ஆ. திருவாசகன் 1993: 1475)

என்ற பாரதிதாசன் பாடல் அடிகளிலிருந்து திராவிட இயக்கத்தினரின் ஆரிய எதிர்ப்புக் கொள்கை பற்றி அறியமுடிகிறது.

9. *''தமிழ்நாடு தமிழருக்கே என்னும் கோஷம்*
   *சகமதிர ஒலிப்பதைநாம் இன்று கண்டோம்*
   *அமிழ்தான தமிழ்மொழியின் வளர்ச்சி எண்ணி*
   *ஆர்வமுடன் உழைக்கின்றார் தமிழர் யாரும்*
   *இமைமூடிப் பன்னாளாய்த் துயில் கொண்டுள்ள*
   *இசைத் தமிழர் இந்நாளில் எழுச்சிக் கொண்டே*
   *தமிழ்வாழ்க தமிழர் நலம் ஓங்க சூழ்ச்சிச்*
   *சதிகாரர் தொலைகவெனச் சாற்று கின்றார்.''*

(புதுவைச்சிவம் 1944: 1)

என்று புதுவைச்சிவம் வடித்துள்ள கவிதை மூலம் தனிநாடு கோரிக்கை எழுப்பபப்பட்ட காலச்சூழலையும், அதற்கான காரணம், எழுச்சி ஆகியவற்றையும் அறிய முடிகிறது. இக்கவிதை 1944 ஆம் ஆண்டில் வெளிவந்த பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் 'பெரியார் பெருந்தொண்டு' நூலின் முதல் பாடலாக இடம் பெற்றுள்ளது. எனினும் இது எழுதப்பட்ட காலம் 1939 ஆம் ஆண்டு என்பது இந்நூலின் முன்னுரையில் இருந்து அறிய முடிகிறது. தமிழர்கள், இந்தியை எதிர்த்து, சிறையிலடைக்கப்பட்டு வெற்றியோடு மீண்டு வெளிவந்த நேரம் என்று இந்நூல் எழுதிய காலத்தைப் புதுவைச்சிவம் அம்முன்னுரையில் குறிப்பிடுகிறார். மேலும் அந்நூலில் பெரியார் பேச்சின் கருத்தாக, 'தமிழ்நாடு தமிழருக்கே' எனுந் தலைப்பில் இருபத்தேழு விருத்தப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை யாவும் பெரியாரது சொற்பொழிவின் அல்லது கட்டுரையின் சாராம்சமாக, திராவிட நாடு பற்றிய திராவிட இயக்கத்தினரின் கருத்தோட்டமாகவே அமைந்துள்ளன. பார்ப்பனரின் ஏகபோகவாழ்வு, சூத்திரப் பட்டம், தன் மதிப்பிழந்தோம், நமது மூடநம்பிக்கை, நமது மோசமான நிலை, எதற்கும் பார்ப்பனரா? பார்ப்பனர் சுயராஜ்யம் கேட்பது தமிழர்களை அடக்கியாளவே, பார்ப்பனரை நம்பியது போதும், வெள்ளையரை நம்புவதும் வீண், நமது ஏமாற்றம், தமிழ்நாடு பிரிய வேண்டியதன் அவசியம், தமிழ்நாடு என்றும் தனிநாடே, பிற நாட்டில் தமிழர் நிலை, வடநாட்டார் கொள்ளை, பிரிவினை எதிர்ப்போர் பேதமை, ஐரோப்பாவைப் பார்க்கட்டும், இங்கென்ன வாழ்கிறதோ? தடை செய்வதற்குக் காரணம், நமது கடமை, தமிழர் எழுச்சி என்று தலைப்பிடப்பட்ட மேற்கூறிய இருபத்தேழு விருத்தப் பாடல்களின் தலைப்புகளே அதன் உட்கருத்தைப் புரியவைக்கின்றன.

1945 ஆம் ஆண்டில் வெளியான புதுவைச் சிவத்தின் 'தமிழர் தன்மதிப்புப் பாடல்கள்' நூலில் மொத்தமுள்ள பத்துப்பகுதிகளில் முதல் பகுதி நாட்டுப்பகுதி எனக்

குறிக்கப்பெறுகிறது. அதில் பழந்தமிழ் நாட்டின் பெருமையைப் பற்றிய பாடலும், அந்நாட்டின் மொழியான தமிழ்மொழியின் மாண்பினைக் குறிக்கும் பாடலும், 'எழில்மிகுந்த தமிழ்க்கொடி' குறித்த பாடலும், 'ஆரிய சூழ்ச்சியில் சீரழிந்த தமிழகம்' குறித்த பாடலும், தமிழ்நாடே உன் புகழ் எங்கே, தமிழ்நாடே ஏனிந்த நிலை, தமிழ்நாட்டின் புகழ் வளர்ப்போம் ஆகிய தலைப்பிலான மூன்று பாடல்களும் ஆக ஏழு பாடல்களைக் கொண்டு நாட்டுப்பகுதி விளங்குகிறது. இதில் பழந்தமிழ் நாட்டின் எல்லையை,

> 10. *''வடக்கில் வேங்கடம் தெற்கில்குமரி*
> *வாய்ந்ததுவே தமிழ்நாடு''*
>
> (புதுவைச்சிவம் 1945:3)

என்று புதுவைச்சிவம் குறிப்பிடுவது அன்றிருந்த சென்னை மாகாண எல்லைப் பகுதிகள் என்றே குறிப்பிடலாம். இக் கவிதை நூலின் ஒன்பதாவது பகுதி 'திராவிடப்பகுதி' என்ற பெயருடன் ஐந்து பாடல்களைக் கொண்டிருக்கிறது. அதில் முதல் பாடல் திராவிடக்கொடி குறித்து விளக்குகிறது. ஒரே நூலில் முதல் பகுதியான நாட்டுப் பகுதியில் தமிழ்நாடும், தமிழ்க்கொடி குறித்ததுமான பாடல்களும் மற்றொரு பகுதியில் திராவிடக் கொடி, திராவிட நாடு குறித்ததுமான பாடல்களும் உள்ளன. தமிழ்நாட்டு எல்லையாக முன்னர்ச் சுட்டப்பட்டவை இருக்க, திராவிடக் கொடி குறித்த பாடல்,

> 11. *''ஆந்திர மலையாளந் துளு கன்னடந் தமிழே - உன்*
> *அங்கமென விளங்க நிமிர்ந்தாடிடுங் கொடியே''*
>
> (புதுவைச்சிவம் 1945:41)

என்று குறிப்பிடுவதிலிருந்து திராவிட இயக்கத்தினர் குறிப்பிடும் தமிழ்நாடும், திராவிடநாடும் ஒரே எல்லைப் பகுதிகளைக் கொண்டவை என்று துணியலாம். மேலும் திராவிட நாட்டையே அவர்கள் தமிழ்நாடு என்று குறிப்பிட்டனர் என்ற முடிவுக்கும் வர ஏதுவாகிறது.

புதுவைச் சிவம் 1950 ஆம் ஆண்டில் வெளியிட்ட தமிழிசைப் பாடல்கள் நூலின் முதற்பகுதி நாட்டுப்பகுதி என குறிக்கப்பட்டுள்ளது. இதில் முதல் பாடல் 'புகழோடென்றும் வளமார்ந்த திராவிடத்தை' வாழ்த்த, இரண்டாம் பாடல் 'கமழ்சோலை மலையோடு கடல் சூழ்ந்த தமிழ்நாட்டை' வாழ்த்துகிறது. மேலும் திராவிடம் சிதைந்த காரணத்தைக் கூறி, 'மேனிலை வாழ்வெலாம் நமை வந்து நாட, திராவிடம் வேண்டும்' என்று கூறி, திராவிட நாடு பெறுவோமென்று ஆடுங் கொடியைப் பாடி ஆறு பாடலில் முடிகிறது நாட்டுப்பகுதி.

1951 ஆம் ஆண்டில் வெளியான தன் மதிப்புப்பாடல் நூலில் 'தெற்கில் குமரியும் வடக்கில் வேங்கடம் திகழ் மலையும் தமிழ்நாடு அது எங்கள் திராவிடநாடு' என்று முதல் இரண்டு பாடல்களில் புதுவைச்சிவம் குறிப்பிடுகிறார். அடுத்துவரும் மேலும் இரு பாடல்களைத் திராவிட நாட்டுக் கொடி வணக்கப் பாடலாக அமைத்திருக்கும் புதுவைச்சிவம், அதற்கு அடுத்து வரும் பாடல்களில்,

12. *''சீருறுந் திராவிட வாழ்வினைக் காப்போம்*
*திகழுறு செந்தமிழ் மானத்தை மீட்போம்''*

(புதுவைச்சிவம் 1951:11)

என்றும், திராவிடத்தின் மேன்மைநிலை குறித்தும் பல பாடல்களில் குறிப்பிடுகிறார். அவரது கவிதைத் தொகுதிகள் அனைத்திலும் நாட்டுப் பகுதி முதலில் இடம் பெறுவதுடன் அதில் திராவிட நாடு, தமிழ்நாடு ஆகிய இரண்டு பெயர்களையும் ஒரே நிலப்பரப்புச் சார்ந்த பகுதியாகக் குறிப்பிடுகிறார். பெரியாரிடமிருந்து 1949 ஆம் ஆண்டில் பிரிந்து தனி இயக்கம் கண்டாலும் , 1963 ஆம் ஆண்டில் தி.மு.க. திராவிடநாடு கோரிக்கையைக் கைவிடும் வரையிலும் புதுவைச்சிவம் திராவிட நாடு குறித்து மிக வலிந்து வற்புறுத்தி இக் கொள்கையைப் பிரச்சாரம் செய்திருப்பது நோக்கத்தக்கது. இதன் பிறகான காலக்கட்டங்களில் அவரது கவிதைகள் பெருமளவில் குறைந்து காணப்பட்டாலும், கிடைத்திருக்கின்ற

ஒரு சில கவிதைகளிலும் திராவிடம், தமிழ் ஆகியவற்றின் பெருமையை உயர்த்தியே பாடியிருக்கிறார். சுய மரியாதை இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக்கழகம் ஆகிய இயக்கங்களின் அடிநாதமான கொள்கை திராவிடநாடு பெறுவதாகவே இருந்து வந்தது. இந்நிலையை ஆரம்ப முதலே ஏற்றுக் கொண்ட புதுவைச்சிவம், இறுதிவரை அந்நிலைப் பாட்டிலேயே இருந்து வந்துள்ளார் என்பதை உறுதிப்படுத்தும் வகையிலேயே அவரது கவிதைப் போக்குகள் அமைந்திருக் கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

திராவிடப்பண் என்ற தலைப்பிலேயே ஒரு கவிதைத் தொகுதியை 1946ஆம் ஆண்டில் புதுவைச்சிவம் தனது ஞாயிறு நூற்பதிப்பகம் மூலமாக வெளியிட்டிருக்கிறார். திராவிட இயக்கத்தின் இலட்சியக் கனவான திராவிடநாட்டை இக்கவிதை நூலில் படைத்துக் காட்டும் அவர், அதற்கான நாட்டுப்பாடல், கொடி வணக்கம், கொடியின் நோக்கம் ஆகியவற்றைப் பாடலாக வடித்திருக்கிறார். மேலும், இழிநிலைக்குக் காரணம், விழித்தெழுவாய், இழிவை உணர்வாய், தீண்டாமை ஒழிப்பீர், பெண்ணடிமை ஒழிக, பேதங்கள் ஒழிப்போம், தன்மதிப் படைவோம், கலைகள் செய்வோம், திராவிட ஆட்சி வேண்டுவோம், திராவிடம் பெறுவோம், தேசியத் தோழருக்கு, திராவிடர் கழகத்திற் சேர்வீர், தொண்டர்படையிற் சேர்க, உறுதி கொள்வோம் ஆகிய தலைப்புகளில் மொத்தம் இருபத்தொரு பாடல்களை அவர் இந்நூலில் வெளியிட்டிருக்கிறார். அனைத்தும் தமிழிசையிலேயே அமைக்கப்பட்டுள்ள இப்பாடல் தொகுதிக்குத் 'திராவிடப் பண்' என்று தலைப்பிட்டிருக்கிறார். இந்நூலின் பெரும்பகுதி சிதைவுற்ற நிலையில் உள்ளது.

## கறுப்புச் சட்டைத் தொண்டர்படை

பிற புரட்சி இயக்கங்களைப் போலவே திராவிடர் கழகத்திலும் தீவிரமான செயல்பாடுகளைச் செய்யக் கட்டுப்பாடான இளைஞர்களைக் கொண்ட ஒரு பிரிவு தேவை

என்று உணரப்பட்டதன் விளைவாக 1945 ஆம் ஆண்டு செப்டம்பரில் திருச்சியில் நடைபெற்ற திராவிடர் கழக மாகாண மாநாட்டில், திராவிட நாடு வேண்டும் விடுதலைப் படைப் பிரிவு ஒன்று அமைக்க முடிவு செய்யப்பட்டது. அப்பிரிவு கறுப்புச் சட்டைத் தொண்டர் படை என்று அழைக்கப்பட்டது (வே. ஆனைமுத்து 1974: XLI).

*13. ''தொண்டாற்ற எழுந்ததுபார் கறுப்புச் சட்டைத்*
*தொண்டர்படை திராவிடத்தின் மாசு போக்க''*

(புதுவைச்சிவம் 1946: 58)

என்று 1946ஆம் ஆண்டில் வெளியான மறுமலர்ச்சிக் கவிதைகள் நூலில் புதுவைச்சிவத்தின் பாடல் இடம் பெற்றிருக்கிறது. திராவிடர் கழகத்தின் அனைத்துக் கொள்கைகளையும் செயலாக்கிடக்,

*14. ''கடமையே செய்வோம் - நல்ல*
*கறுப்புடையணிந்து தொண்டாற்ற முன் வாரீர்''*

(புதுவைச்சிவம் 1946: 58)

என்று இயக்கத் தோழர்களுக்கு அழைப்பு விடுக்கும் புதுவைச் சிவம்,

*15. ''வகுத்த உயர் நெறிப்படியே தொண்டு செய்ய*
*வந்ததொரு தொண்டர்படை வாழ்க வாழ்க''*

(புதுவைச்சிவம் 1946: 59)

என்றும் வாழ்த்துக் கூறுகிறார்.

இத்தொண்டர்படை திராவிட நாட்டு விடுதலைப் படையாக மாறிவிடக்கூடும் என்ற அனுமானத்தில் அன்றைய அரசாங்கம் 2.3.1948 அன்று இத்தொண்டர் படைக்குத் தடை விதித்தது. அரசாங்கத்தின் தடையை எதிர்கொண்ட பெரியார், கருஞ்சட்டை என்று தனிப் பிரிவு ஏதுமில்லை; திராவிடர் கழகத்தினர் அனைவருமே கருஞ்சட்டை அணிபவர்கள்தாம் என்று 7.3.1948 அன்று அறிவித்தார் (வே. ஆனைமுத்து 1974: XLIV, 590).

பொதுவாகப் புதுவைச்சிவம் கவிதைகளில் தமிழின விடுதலையும் மேம்பாடும் அதிகமாக வலியுறுத்தப்படுகின்றன. இவ்வாய்விற்கு எடுத்தாளப்பட்ட அவரது பதினொரு கவிதை நூல்களில் மொத்தமுள்ள 491 பாடல்களுள் இனவுணர்வு சார்ந்தவையாக 174 பாடல்கள் உள்ளன (காண்க: பின்னிணைப்பு). இதன் மூலம் புதுவைச்சிவம் தமிழின மேம்பாட்டுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருப்பதை அறிய முடிகிறது.

### ஆரியர் எதிர்ப்பு

வெள்ளையர், ஆரியர் இருவருமே திராவிட இனமாக இல்லை என்பதால் இவ்விரு ஆதிக்க மேலாண்மையையும் ஏற்பதில்லை என்பதே திராவிட இயக்கத்தின் கருதுகோளாகவும், நோக்கமாகவும் இருந்தன. உலகிலுள்ள அனைத்து ஆதிக்க, அரசாங்கங்களும் ஒழிய வேண்டும் என்று பெரியார் விரும்பினார். வெள்ளையரும் அந்நியர் என்பதால் அவர்களிட மிருந்து பூரண சுதந்திரம் பெற வேண்டும் என்று 1939 ஆம் ஆண்டு முதல் வலியுறுத்தி வருவதாகப் பெரியார் கூறினார். அந்நியர் ஆட்சி அழிய வேண்டும் என்கிற பிரச்சினையில் தங்கள் இயக்கத்திற்கு முழு அனுதாபம் உண்டு என்றும், வெள்ளையர் வெளியேற வேண்டும் என்ற கவலை மற்றெல்லோரையும் விடத் தங்களுக்குத்தான் அதிகம் உண்டு என்றும் கருத்துரைத்த பெரியார், நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ளும் வகை ஏற்பட்டுவிட்டால் 6000 மைல்காரனும் (பிரிட்டிஷ் ஆட்சி)வேண்டாம்; அடுத்த வீட்டுக்காரனும் (ஆரியர்) வேண்டாம் என்று மொழிந்தார். 1937 ஆம் ஆண்டு முதல் காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியின் ஆட்சியைப் பார்த்த பிறகு பார்ப்பனர், வடவர் ஆதிக்கத்தையும் ஏற்பதில்லை என்று முடிவு செய்ததாகப் பெரியார் கூறினார்.

வெள்ளையர் ஆட்சியில் பார்ப்பனர்களே பதவிகளில் இருந்து பலன்களை அனுபவிப்பதால் அவ்வாட்சி வெள்ளை ஆரியனுக்கும் மஞ்சள் ஆரியனுக்கும் உள்ள ஒப்பந்தமே

என்றும், இன்றைய சர்க்கார் வெள்ளைக்காரர், பார்ப்பனர், பணக்காரர் ஆகிய மூவர்களுடைய கூட்டு வியாபாரம் என்றும், வெள்ளையருக்கும், ஆரியருக்கும் திராவிட நாட்டுத் தலைவர் களாகவோ காவலர்களாகவோ உரிமையில்லை என்றும் கூறினார் பெரியார். அந்நியன் என்றால் பிரிட்டிஷ், அமெரிக்கா, ரஷ்யாக்காரர்கள் மட்டுமல்ல பனியா, முல்தானி, மார்வாடி, குஜராத்தி, காஷ்மீரி, பார்ப்பனன் அனைவருமே அந்நியர்கள் தான் என்று கருத்துரைத்த பெரியார், இந்த வடநாட்டார் கொள்ளைக்கு ஆதரவாகவே வடநாட்டிலிருந்து ஒரு மார்வாடி மகாராஜா கவர்னராகத் தமிழ்நாட்டுக்கு அனுப்பப்படுவதாகக் குற்றம் சாட்டினார். வெள்ளைக்காரன் ஆதிக்கம் முடிந்த பின்னர் வடவரின் காலடியில் திராவிட நாடு வீழ்ந்து கிடக்கக் கூடாது என்பதற்காக இத்தனை நாள் பாடுபட்டுவந்ததாக 1948 ஆம் ஆண்டில் பெரியார் கூறினார் (வே. ஆனைமுத்து 1974: 66,83, 697-719,1800-1809).

புதுவைச்சிவமும் பிரிட்டிஷ், ஆரியர் ஆதிக்கத்தை எதிர்த்தார். 1935 ஆம் ஆண்டில் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம் முதல் இதழுக்கான வாழ்த்துப்பாவில்,

2. *''விடுதலையுன் எண்ணமதாய் இருத்தல் வேண்டும்*
*வீரர் பாரதியாரின் எண்ணம் வேண்டும்''*
( ஸ்ரீ சுப்ரமணியபாரதி கவிதா மண்டலம் ஆனி 1935)

என்று ஒலிக்கும் அவரது குரல், 1936 புதுவைத் தொழிலாளர் போராட்ட காலத்தில் தொழிலாளர்களுக்கு ஆதரவாக ஒலிக்கும்போதும், அந்நிய ஆதிக்கத்தைச் சாடியே அமைகிறது. இந்தக் காலக்கட்டம் தொடங்கி இதற்குப் பிறகான காலங்களில் அவரது கவிதைகள் திராவிட இயக்க இதழ்களில் வெளிவரத் தொடங்கின. 1937 ஆம் ஆண்டு இந்தித் திணிப்பு எதிர்ப்புக் காலத்திலிருந்து வெள்ளையர் எதிர்ப்பும் ஆரியர் எதிர்ப்பும் புதுவைச்சிவத்தின் கவிதைகளில் தீவிரமாக எதிரொலித்தன.

3. *''ஒரு வகுப்பார்க் கடிமை யுற்றோர்க் குய்வு முண்டாம்*
*ஒருசேர இருவகுப்பார்க் கடிமையுற்றோர்*

*ஒருநாளும் முன்னேற்றம் அடைந்ததாக*
*உலகத்தில் நாமெங்குங் கண்டதில்லை!''*

(புதுவைச்சிவம் 1944: 1)

என்று 1944 ஆம் ஆண்டில் பெரியார் பெருந்தொண்டு நூலின் தொடக்கத்திலேயே தன் கருத்தாகக் கூறுகிறார் புதுவைச்சிவம்.

4. *''பார்ப்பனர்க்குச் சமூகத்தில் அடிமையானோம்*
*பாராளும் ஆங்கிலர்க்கும் அடிமைப்பட்டோம்''*

(புதுவைச்சிவம் 1944 : 43).

என்று இரு வகுப்பாருக்கும் அடிமையான நிலையைக் குறிக்கும் புதுவைச்சிவம், ஆங்கில ஆட்சியால் பார்ப்பனர்களே அதிக நலம் பெறுகின்றனர் என்றும் கூறுகிறார் (புதுவைச்சிவம் 1944: 42). தமிழரின் நிலை குறித்த வேறொரு கவிதையில், 'தன்னுடைய நாட்டை அயலவர் ஆண்டிடக்கண்டும் உணர்வின்றிக் கண்ணிலான் போல் வாழும் அடிமையரைச் சேர்ந்தோன்' (புதுவைச்சிவம் 1946: 11) என்று வெள்ளையர் ஆதிக்கம் குறித்துக் குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம்.

வெள்ளையர்களான அந்நியரை இந்தியாவை விட்டு வெளியேறும்படிக் கொள்கையளவில் கேட்டுக் கொண்ட சுயமரியாதை இயக்கத்தினர், ஆரியர்களும் அந்நியர் என்பதனால் அவர்களும் திராவிட நாட்டை விட்டு வெளியேறத் தீவிரமாகக் குரல் கொடுத்தனர். பெரியார் ஆரியர்களை வன்மையாக எதிர்த்துப் பேசியவை இயக்கக் கவிஞர்களின் படைப்புகளிலும் எதிரொலித்தன. புதுவைச் சிவம், ஆரியர்களைப் பற்றிக் குறிப்பிடும் கவிதையில்,

5. *''பிழைக்க வந்த கூட்டத்திற்கே*
*கொழுப்பு மிகுந்து போச்சு மேலும்''*

(புதுவைச்சிவம் 1951: 23)

என்று குறிப்பிடுகிறார். பெரியார் பேச்சின் கருத்து என்ற குறிப்போடு வரும் விருத்தப் பாக்களில்,

6. ''வடநாட்டுக் குஜராத்தி முல்தான் மார்கள்
மார்வாடி முதலியவர் இங்கு வந்தே
முடமாக்கி நம் நாட்டு வாணிகத்தை
முன்னேற்றத் துறையினில் தம் வியாபாரத்தைத்
திடமாக்கிப் பெரும் பொருளைக் கொள்ளை கொண்டு
செல்கின்றார்....''. (புதுவைச்சிவம் 1944: 46)

என்றும் கூறுகிறார். ஆரியர்களை இந்தியர்களாக ஏற்றுக் கொண்டாலும் திராவிடர்களாக ஏற்றுக் கொள்ளாத திராவிட இயக்கத்தினரின் கருத்தைப் புதுவைச்சிவம்,

7. ''........................ தமிழர் நாட்டில்
கொள்ளைகொள்ளும் வடநாட்டார் ஆதிக்கத்தைக்
கூடாதென்றால் தேசத் துரோகமாமோ?''
(புதுவைச்சிவம் 1944 : 46)

என்றும் குறிப்பிடுவது இயக்கத்தின் கருத்தாகவே எதிரொலிக்கின்றது.

8. ''வன்னெஞ்ச ஆரியரின் ஆதிக்கத்தை
மாய்த்திடவே நாம் முதலில் உழைக்கவேண்டும்
பின்புநமையாண்டு வரும் வெள்ளையர்கள்
பேசாமல் தன்னாட்சி தந்தே செல்வார்''
(புதுவைச் சிவம் 1944: 49)

என்ற புதுவைச்சிவத்தின் நம்பிக்கை அன்றைய இயக்கமான திராவிடர் கழகம் முழுவதும் பரவியிருந்தது என்பதும், அதற்குப் புதுவைச்சிவம் போன்றோரின் கவிதைகள் பெரும் துணை புரிந்திருக்கின்றன என்பதும் மனங் கொள்ளத்தக்கது.

## இந்தித் திணிப்பு எதிர்ப்பு

இந்தி மொழி இந்தியாவின் பொதுமொழி என்றும், தேசிய மொழி என்றும் காங்கிரஸ் கட்சியால் சொல்லப்பட்டு வந்ததைச் சுயமரியாதை இயக்கத்தினர் ஏற்றுக் கொள்ளவில்லை. 1925ஆம் ஆண்டிலிருந்தே இந்தியைத் தான் எதிர்த்து வந்திருப்பதாகவும், 1926ஆம் ஆண்டில் குடிஅரசில் 'இந்தியின் ரகசியம்' என்று தான் எழுதிய தலையங்கமே இந்தி எதிர்ப்புக்காக எழுப்பப்பட்ட முதலாவது குரலாகுமென்றும் பெரியார் குறிப்பிட்டுள்ளார் (வே. ஆனைமுத்து 1974: 989, 1766).

1930ஆம் ஆண்டில் காந்தியடிகள், இந்தியர்கள் அனைவரும் இந்தி கற்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டதை அடுத்து நாடு முழுவதும் பரவலாக விவாதங்கள் எழுந்தன. இந்தி படிக்காதவர்கள் தேசத் துரோகிகள் என்று காங்கிரஸ் கட்சித் தலைவர் ஒருவர் கூறியதைச் சுயமரியாதை இயக்கத்தினர் ஏற்காததுடன் அதனைக் கண்டித்துத் தங்கள் இயக்க இதழ்களில் எழுதினர். அறிவை விசாலப்படுத்தக் கூடிய நூல்களும், இலக்கியச் சுவை அதிகம் நிறைந்துள்ள நூல்களும் இந்தியைவிட மற்ற மொழிகளில்தான் அதிகம் என்றும், அதிகம் பேர் ஒரு காரியத்தைச் செய்கிறார்கள் என்பதற்காக, மற்றவர்களும் அதைக் கண்மூடித்தனமாகப் பின்பற்ற வேண்டும் என்பது வடிகட்டின முட்டாள் தனம் என்றும், வெளிநாடுகளோடு வியாபாரப் போட்டியில் ஈடுபட்டு, வெளிநாட்டுக் கல்விகளைக் கற்று, மற்ற நாடுகளோடு அறிவு ஆராய்ச்சியில் போட்டி போட வேண்டுமானால் இந்தி பயன்தராது என்றும், இந்திப் பரப்பல் என்பது பாமர மக்களை மிரட்டுவதற்குச் செய்யப்பட்ட சூழ்ச்சி என்றும், இந்தியாவிற்குப்

பொதுமொழி தேவை என்றால் அது ஆங்கில மொழியாக இருக்கவேண்டும் என்றும், இந்திப் புகுத்தலைத் தடுக்கக் கிளர்ச்சிகளும், கண்டித்துப் பிரச்சாரமும் செய்ய வேண்டு மென்றும், சுயமரியாதை இயக்கத்தினர் 'ஹிந்தி புரட்டு' எனும் தலையங்கத்தின் மூலமாக வலியுறுத்தினர் (புதுவைமுரசு 18. 05. 1931).

> *''....தேசியத்தின் பெயரால் ஹிந்தி பாஷையைக் கற்று ஆக வேண்டுமென்பது வருணாசிரமத்திற்கு ஆதரவு கொடுப்பதாய் இருப்பதால் இந்தக் கொள்கையைக் கண்டிக்கிறது''*

என்று விருதுநகர் சுயமரியாதை மாநாட்டுத் தீர்மானத்தைப் புதுவை முரசு வெளியிட்டது (புதுவை முரசு 17.08.1931).

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகச் செனட் கூட்டத்தில் இந்தியையும் ஒரு மொழிப்பாடமாக்கக் கொண்டு வரப்பட்ட தீர்மானம் தோல்வியடைந்ததற்குப் புதுவைச் சுயமரியாதை இயக்கத்தினர் மகிழ்ந்து செய்தி வெளியிட்டனர். 'ஹிந்தியின் தோல்வி' என்ற தலைப்பிலான அக்கட்டுரையில், பொதுமொழி என்று வற்புறுத்தப் படுமானால் அது ஆங்கிலமும், பிரெஞ்சுமாக இருக்க வேண்டும் என்ற தங்களின் முடிவைப் புதுவைச் சுயமரியாதை இயக்கத்தினர் புதுவை முரசில் வெளியிட்டனர் (புதுவை முரசு 2.1.1931).

1937 ஆம் ஆண்டில் சென்னை மாகாண முதலாம் அமைச்சராக இருந்த இராஜகோபாலாச்சாரி, பள்ளிகளில் இந்தி மொழியைக் கட்டாயப் பாடமாக்கினார். அரசாங்கத்தின் இந்த ஆணையை எதிர்த்துத் 'தமிழ்ப்பாதுகாப்புக் கழகம்' என்ற பெயரில் சென்னை மாகாணத்தில் 1937ஆம் ஆண்டில் 'இந்தித் திணிப்பு எதிர்ப்பு இயக்கம்' தொடங்கப்பட்டது. சென்னை மாகாணத்தில் கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்து, முதல் இந்தி எதிர்ப்புத் தீர்மானம், 1937 ஆம் ஆண்டில் திருச்சியில் கூடிய இந்தி எதிர்ப்பு மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டது.

*"இந்தி மொழியானது, மூடப்பழக்க வழக்கங்கள் நிறைந்த ஆரிய மொழி: அது தமிழ் மக்களுக்கு விரோதமானது; அறிவுப்பூர்வமான மொழியாக இந்தி இல்லை; தமிழில் இல்லாத எதுவும் புதிதாக அதில் இல்லை; 19 ஆவது நூற்றாண்டுக்கு முன்பு இந்தி இல்லை; கல்கத்தாவிலுள்ள போர்ட் வில்லியம் கல்லூரியைத் தொடங்கியவர்கள் உருதுமொழிக்கு எதிராக உண்டாக்கிய மொழியே இந்தி; தமிழை அழிக்கவும் ஆரிய நாகரிகத்தை நிலைநிறுத்தவுமே இந்தி புகுத்தப்படுகிறது; நாட்டை மனு ஆட்சிக்குக் கீழ் கொண்டு வரும் முயற்சியே இந்தித் திணிப்பு; இந்தியாவில் நமது கலாச்சாரம் அடியோடு அழிந்து விடும்; இந்தி எதிர்ப்புப் போராட்டம் என்பது வடநாட்டான் ஆதிக்க ஒழிப்பு மற்றும் வட நாட்டுச் சுரண்டல் ஒழிப்பு; இந்தித் திணிப்பால் தமிழின் தன்மை, உரிமை, நேர்மை எல்லாம் கெட்டு ஆரியருக்குத் தமிழன் அடிமை என்பதுதான் மிஞ்சும்"*

என்றெல்லாம் கருத்துரைத்த பெரியார், இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் தமிழர்கள் அனைவரும் பங்கு பெற வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். 1938 ஆகஸ்ட் முதல் நாள் திருச்சியிலிருந்து சென்னை நோக்கிக் கிளம்பிய இந்தி எதிர்ப்புப் படையை அவர் வாழ்த்தி வழியனுப்பி வைத்தார். இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் பங்கு கொள்வது தமிழ் மக்களுக்குக் கிடைத்தற்கரிய ஒரு பாக்கியம் என்றார் பெரியார். இந்தி எதிர்ப்புப்படை கிளம்பிய ஆகஸ்ட் முதல் நாளை மனதில் கொண்டு பின்னாட்களில் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை, (பொது வுடைமை இயக்கம் அக்டோபர் புரட்சி என்று குறிப்பிடுவது போல) 'ஆகஸ்ட் கிளர்ச்சி' என்று பெரியார் குறிப்பிட்டார் (வே. ஆனைமுத்து 1974 : 1763-1787).

இந்தித் திணிப்பை விரும்பாத பல்வேறு அமைப்பினரும், இந்தக் காலக்கட்டத்தில் ஒன்றிணைந்து செயல்படும் ஒரு

நிலைமை உருவானது. கடவுள், மதம் மற்றும் புராண எதிர்ப்புகளால் பெரியாரிடமிருந்து விலகி இருந்தவர்கள் கூட, இந்தித்திணிப்பு எதிர்ப்பு இயக்கம் மூலமாக ஒன்றிணைந்து செயல்பட ஆரம்பித்தனர். ராஜாஜி தலைமையிலான அன்றைய சென்னை மாகாண அமைச்சரவை, இந்தி மொழியைக் கட்டாயப்பாடம் என்று செய்த தீர்மானமே சிதறிக்கிடந்த தமிழுணர்வாளர்களையெல்லாம் ஒன்று சேர்த்தது என்று சொல்வது சரியாகவே இருக்கும். இந்த வகையில்தான் கடவுள், மதம், புராணம், வைதீகம் ஆகியவற்றில் சுயமரியாதை இயக்கத்தினருடன் தங்களுக்கு இருந்த கருத்து வேறுபாடு களைத் தள்ளி வைத்துவிட்டுத் தமிழ் அறிஞர்களும், தமிழ் அன்பர்களும், பல்வேறு சமுதாய அரசியல் இயக்கத்தினரும், இவை சாராத தனிப்பட்ட பிரமுகர்களும், மேற்குறித்த பிரிவல்லாது வெறும் தமிழன் என்ற உணர்வு கொண்ட தமிழ்நாட்டு மக்கள் எனப் பல வகையினரும் இவ்வியக்கத்திற்கு ஆதரவாகச் செயல்பட்டனர். உண்மையில் திராவிட இயக்கத்தை உருப்பெற வைத்த ஒரு மாபெரும் நிகழ்வாக இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைக் கொள்ளுதல் சரியான கருத்தாகவே அமையும். இந்தித்திணிப்பை வன்மையாக எதிர்த்த சுய மரியாதை இயக்கம் இதனால் கிளர்ந்தெழுந்த உணர்வுகளால் ஆரியர் எதிர்ப்பையும் மேற்கொண்டது. இதன் விளைவாகத் ‘திராவிட நாடு திராவிடர்க்கே’ கொள்கை முன்வைக்கப்பட்டது. திராவிட இயக்கத்தின் அனைத்து வகையான பிரச்சார உத்திகளிலும் திராவிட நாடு கோரிக்கை உள் நுழைக்கப்பட்டது. பாரதிதாசனும், புதுவைச்சிவமும் இந்தக் காலக்கட்டத்தில் எழுதிய அனைத்துக் கலைவடிவங்களிலும் இக்கொள்கை முதன்மைத்தன்மை பெற்றிருந்தது.

மூடநம்பிக்கைகளை ஒழிப்பதையும், சமதர்மச் சமுதாயம் அமைப்பதையும் தங்கள் இலட்சியம் என்று சுயமரியாதை இயக்கத்தினர் கூறினர். இம்மூட நம்பிக்கைகள் ஆரியர்களால் உண்டாக்கப்பட்டவை என்ற எண்ணம், தங்கள் இனத்தைத் தனிமைப்படுத்திக் காட்டுமோர் இன்றியமையாமையை

அவர்களுக்கு உண்டாக்கிற்று. பார்ப்பனர்கள் ஆரியர்களாகப் பார்க்கப்பட்டதால், பார்ப்பன ஆதிக்க எதிர்ப்பு திராவிட இயக்கத்தில் மேலோங்கியது. எனவே, பார்ப்பன ஆதிக்க இயக்கம் என்று பெரியாரால் வருணிக்கப்பட்ட காங்கிரசுக் கட்சியால் கொண்டு வரப்பட்ட இந்தித் திணிப்பு முயற்சி திராவிட இயக்கத்தினரின் கடுங்கண்டனத்திற்கு ஆளானது.

சமுதாயத்தில் தமிழர்களின் இழிவு அகற்றப்பட வேண்டுமென்று பேசியும் எழுதியும் வந்தவர்களுக்குத் தமிழும், தமிழரும் அழியும் நிலை இந்தித் திணிப்பால் வந்ததெனச் சொல்வதற்கும், அவர்களது இயக்கம் இத்தனை நாள், எந்த இலட்சியத்திற்காகப் பாடுபட்டுவந்ததோ அதை மேலும் வலியுறுத்துவதற்கும் இந்தித் திணிப்பு நிகழ்வு வகை செய்தது. தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மையான வரலாறும், திராவிட - ஆரியப் பிரச்சினையும் அவர்களுக்கு இட்டுக்கட்டிச் சொல்ல வேண்டிய அவசியமின்றிக் கைகொடுத்தன. இவற்றின் விளைவாக உணர்வு பொங்க இனம், மொழி என்று அழுத்தம் திருத்த மாகவும், வெளிப்படையாகவும் சொல்லும் நிலை உருவானது.

18. *''அன்று தமிழ்நூல் அழித்தார்கள் ஆரியர்கள்*
*இன்று தமிழ் வேரறுக்க எண்ணிவிட்டார் என்*
*தமிழா''*

(பாரதிதாசன் ஆண்டு இல்லை: பக்கம் இல்லை)

என்று வரலாறு முதற்கொண்டு அன்றைய பிரச்சினை வரை ஆரியர்களை அடிப்படை எதிரி என்று நிரூபிக்கவும், அதனால் தமிழர்களை ஒருங்கிணைக்கவுமான முயற்சியைச் சுயமரியாதை இயக்கத்தினர் மேற்கொண்டனர்.

இந்தித் திணிப்பு எதிர்ப்பு இயக்கத்தில் புதுவைச்சிவத்தின் பங்கும் கணிசமாகவே இருந்தது. 1937, 1938 ஆகிய ஆண்டுகளில் பல கவிதைகளை இப்பிரச்சினையை மையப் படுத்தியே இயற்றியிருக்கிறார் புதுவைச்சிவம். மேலும், இக்காலப்பகுதியில் எழுதப்பட்ட அனைத்துக் கவிதைகளிலும் இதன் தாக்கம் திராவிடர்- ஆரியர் பிரச்சினையாகவோ,

ஆண்டான்-அடிமைப் பிரச்சினையாகவோ உள் நுழைந்திருப்பதைக் காணமுடிகிறது. பாடுபொருட்கள் அனைத்திலுமே இந்த நிலையைத் தான் புதுவைச்சிவம் மேற்கொண்டிருக்கிறார் என்பதும், அவரது இயக்க உணர்வையும், தீவிரத்தையும் வெளிப்படுத்துவதாகவே அவை அமைகின்றன என்பதும், பாடுபொருட்களில் மொழி, இயற்கை, காதல் ஆகியவற்றில் அவரது படைப்புகள் குறைவான எண்ணிக்கை கொண்டிருப் பதையும், அப்படி உருவான படைப்புகளிலும் அதாவது காதல், மொழி இவற்றிலும் கூட இயக்கக் கருத்துக்களையே இயல்பாகவும் வலிந்தும் புகுத்தியிருக்கிறார் என்பதையும் அவரது படைப்புகளில் காணமுடிகிறது.

நிலவு, காதல், இயற்கை போன்ற கவிஞர்களின் இயல்பான பாடு பொருட்களையே புதுவைச்சிவத்தின் இயக்கச் சிந்தனை பின்னுக்குத் தள்ளிவிடும்போது இயக்கம் முன்னெடுத்த முதல் கிளர்ச்சி அவருடைய படைப்புகளில் எத்தனை வேகம் பெற்றிருக்கும் என்பதை அனுமானிக்கலாம். இந்தித் திணிப்பை, இந்தி மொழியைப் பரப்பும் சூழ்ச்சி எனக் கூறும் புதுவைச்சிவம்,

*19. ''சாரமற்ற ஹிந்தியால் தமிழ் நாட்டிற்கேது பயன்?*
*அமுதமொழி யழிந்திட்டால் ஆரியர்க்கு நாமடிமை''*

(எஸ். சிவப்பிரகாசம் ஆண்டு இல்லை: பக்கம் இல்லை)[2]

என்று இயக்கத்தின் கொள்கையை, இந்தி பற்றிய தன் எண்ணங்களை இயக்கத்தினரிடையும் மக்களிடையும் கொண்டு சேர்க்கும் முயற்சியை மேற்கொள்கிறார்.

இந்தித் திணிப்பு முயற்சியை அரசாங்கம் மேற்கொண்ட தால்தான் தமிழர்களிடையே இந்த அளவிற்கு எழுச்சியும், உணர்வும், ஒற்றுமையும் ஏற்பட்டிருக்கின்றது என்றும், அரசாங்கம் இந்தித் திணிப்பைத் தீவிரப் படுத்தினால் தமிழ் மக்களிடையே இன்னும் தன்மானமும் தீவிரமும் வளரும் என்று தான் மகிழ்வதாகவும் பெரியார் கூறினார். புதுவைச்சிவம் தனது கவிதையில்,

*20. ''எங்கும் மனக் கொதிப்பே - அடடா*
*இன்பத் தமிழ் நாட்டில்*
*பொங்கும் உணர்ச்சியெலாம் - இங்கே*
*புத்துயிர் பெற்றதடா''*

(எஸ்.சிவப்பிரகாசம் ஆண்டு இல்லை: பக்கம் இல்லை)

என்று உணர்வு பொங்குகின்ற, மனக்கொதிப்பைக் கொள்ளுகின்ற போது அதை இன்பத் தமிழ்நாடு என்று கூறுவது நோக்கத்தக்கது.

*21. ''வெஞ்சுடர்த் தீயை இன்று - தமிழர்*
*வீடெங்கும் மூட்டி விட்டார்*
*மிஞ்சி எரியுதடா - தமிழர்*
*மேன்மையெலா மதிலே''*

(எஸ்.சிவப்பிரகாசம் ஆண்டு இல்லை: பக்கம் இல்லை)

என்று தமிழர் தங்கள் மேன்மையைப்பற்றி அறியும் நிலை தற்போதுதான் ஏற்பட்டது என்ற ஆதங்கம் மேலிடுவதைக் காண முடிகிறது. 'இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி என்பது தமிழர்களின் தன்மானப்போர்; எல்லோரும் போராடவும், இன்னல்படவும், தேவைப்பட்டால் உயிர் விடவும் தயாராக முன்வரவேண்டும்; இரண்டில் ஒன்று பார்த்துவிட வேண்டும்' என்றெல்லாம் பெரியார் தமிழர்களுக்கு அழைப்பு விடுத்தார் (வே.ஆனைமுத்து 1974:1794).

*22. ''ஒன்று தமிழ்தழைய - வேண்டும்*
*உற்றதோர் இந்நாட்டில்*
*அன்றேல் தமிழர்களின் - ஆவி*
*அழிந்திட வேண்டும்''*

(எஸ்.சிவப்பிரகாசம் ஆண்டு இல்லை:பக்கம் இல்லை)[2]

என்ற புதுவைச்சிவத்தின் அடிகள், பெரியாரின் வேகத்திற்கு இணையான இயக்கவாதிகளைக் கவிஞர்களாகச் சுயமரியாதை இயக்கம் பெற்றிருந்தது என்பதை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்திருப்பதைக் காணலாம்.

இக்காலக்கட்டத்தில் புதுவைச்சிவம் எழுதிய பல கவிதைகளும் சுயமரியாதை இயக்க இதழ்களில் வெளிவந்தன. அதில் சில கவிதைகள் 1946 ஆம் ஆண்டில் வெளியான அவரது மறுமலர்ச்சிக் கவிதைகள் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

இப்பாடல்களில் இந்தியை வலிந்து புகுத்துவோரைச் சண்டாளர் என்றும் பகற்கொள்ளைக் கூட்டத்தார் என்றும் வஞ்சகர், வாயாடி, வம்பர், ஈனம் சகிப்போர், ஈரமற்ற நெஞ்சினர் என்றும் பலவாறான சொல்லாட்சியைப் புதுவைச் சிவம் பயன்படுத்தியிருப்பது பெரியாரது சொற்பொழிவின் நேரடித் தாக்கங்கள் படர்ந்திருப்பதைக் காட்டுகிறது.

இந்தித் திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சிகளில் சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்த பெண்களும் கலந்து கொண்டனர். இதில் தண்டனை பெற்ற பெண்கள் குழந்தைகளுடன் சிறைச் சாலையில் அடைக்கப்பட்ட நிகழ்வு அன்றைய நிலையில் அனைவரது கவனத்தையும் ஈர்த்தது. இந்நிகழ்வால் தமிழ்நாடு உய்யும் நிலை பெற்றதாகப் புதுவைச்சிவம் களி கொள்கிறார்.

23. *''தமிழர் நலங்காக்கத் தன்மதிப்புக் காக்க*
*அமுத மொழிகாக்க அன்னையீர் நீங்களெலாம்*
*வஞ்சனையாலிங்கு வந்த இந்திதனை மாய்த்திடவே*
*வெஞ்சிறையை நாடி விருந்தானீர் என்ற தொரு*
*செய்தியினைக் கேட்டேன். செயல்மறந்து*
*வாழ்த்துரைத்தேன்*
*உய்ந்ததினித் தமிழர் நாடென்றுள மகிழ்ந்தேன்''*
(புதுவைச் சிவம் 1946:18)

என்று போராட்டத்தில் மகளிரின் பங்கை வரவேற்று மகிழும் புதுவைச்சிவம்,

24. *''பாழ்துயிலே கொண்டு பழியேற்றுப் பல்லாண்டாய்*
*வீழ்நிலையைப் பெற்றுவிட்ட மேன்மைத் தமிழகத்தில்*
*தன் மதிப்பு மிக்க தனிப்பெரியார் பேரெதிர்ப்பின்*
*முன்நின்றே நல்லறிவை மூட்டிவிட்டார் மக்களிடம்*
*உத்தமிகாள் நீங்கள் உறுதுணையாய் ஒத்துழைத்தே*

*புத்துணர்ச்சி தந்தீர் புகழ்தந்தீர் போற்றுகின்றேன்*
*உங்கள் பெருங்குணத்தை ஒப்பில் தியாகத்தைப்*
*பொங்கு தமிழ் நாடும் பிற நாடும் போற்றினவே''*
(புதுவைச்சிவம் 1946:18)

என்று பெரிதும் வாழ்த்துகிறார். மேலும்,

25. *''சிறைச்சாலை யேகவில்லை தீமையெலாம் வீழ்த்த*
*அறச்சாலை தான் ஏகினீர்''*
(புதுவைச்சிவம் 1946: 18)

என்று மகளிரின் போராட்டத்தை அறப்போராட்டமாகவும் மதிப்பிடுகிறார். இக்கவிதையில் 'மாதர் மனம் வைத்தால் மாமலையும் ஓர் கடுகாம்' என்னும் ஒரு தொடரை வடிவமைத் திருக்கிறார் புதுவைச்சிவம். 'கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டி விட்டால் மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர் கடுகாம்' என்று பாரதிதாசன் காதலைச் சிறப்பித்துப் பாடிய கருத்தையும் அடிகளையும் புதுவைச்சிவம் இயக்கக் கொள்கை வளர்ச்சிக்குப் பயன்படுத்தியிருக்கும் உத்தியும் பாங்கும் நோக்கத்தக்கன.

பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை முதன்முதலாகக் கவிதை வடிவில் இயற்றினார் புதுவைச்சிவம். 1944 ஆம் ஆண்டில் அது நூலாக வெளிவந்தது. அதில் இந்தித்திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சியின் போது பெரியார் கைக்கொண்ட அணுகுமுறைகளையும், அதற்குப் பெண்கள் உட்படத் திரண்டெழுந்த ஆதரவு குறித்தும் , அரசாங்க நடவடிக்கைகள் குறித்தும், இறுதியாகப் பெரியாரின் முயற்சியால் இந்தி மெய்நடுக்கம் கொண்டு அலறி ஓடியதாகவும் குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம். இதற்காக 1500 பேர் சிறையில் அடைக்கப் பட்டுப் பல குடும்பங்கள் இன்னலடைந்தன என்றும்; இருவர் தங்கள் உயிரைத் தியாகம் செய்ய நேர்ந்தது என்றும் பெரியார் குறிப்பிட்டார் (வே. ஆனைமுத்து 1974: 1813). இந்நிகழ்வுகளை,

26. *''ஆயிரத்தைந் நூற்றுவரைச் சிறையி லிட்டும்*
*அகச் சீற்றந் தணியாத குருட்டுக் கண்ணர்,*
*தூயதமிழ் காக்கவந்த தால முத்தைச்*
*சுகுண நடராஜனை வெஞ்சிறையில் தள்ளி,*
*நேயமிகும் அன்னவரின் மனைவி மக்கள்*
*நிறையன்புப் பெற்றோர்கள் கதறிச் சோர*
*ஆய உயிர் குடித்துள்ளம் மகிழ்ந்தா ரென்றால்*
*அந்தோ அவ் வநியாயம் சகிப்ப துண்டோ?''*
(புதுவைச்சிவம் 1944:32)

என்று குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம்.

1937 ஆம் ஆண்டில் உருப்பெற்று 1940 ஆம் ஆண்டில் அரசாங்கம் இந்தி கட்டாயப்பாடம் அன்று என்று அறிவித்ததால் விலக்கிக் கொள்ளப்பட்ட இந்தித்திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சி, மீண்டும் 17.7.1948 அன்று தலைதூக்கியது. மறைமலை அடிகள் தலைமையில் சென்னை தூய மேரி மண்டபத்தில் இரண்டாம் முறையாக இந்தித் திணிப்பு எதிர்ப்புப்போராட்ட மாநாடு நடைபெற்றது (வே. ஆனைமுத்து 1974:1814, 1788). இந்தித் திணிப்பைக் கண்டனம் செய்யும் வகையில் சென்னையில் 17.7.1948 அன்று நடைபெற்ற கூட்டத்தில் திராவிடர் கழகத்தின் முன்னணித் தலைவர்கள் கலந்து கொண்டு பேசினார்கள். (அ. இராமசாமி 1994:7). இந்தக் காலக் கட்டத்திலும், இந்தித் திணிப்பை எதிர்க்கும் பல பாடல்களைப் பாரதிதாசனும், புதுவைச்சிவமும் எழுதினர். அவை இயக்கத்தின் பல இதழ்களிலும் வெளியிடப்பட்டன. அப்பாடல்கள் தமிழர்களை ஒன்றிணைக்கும் உணர்வு வேகம் பெற்றிருந்தன (புதுவைச் சிவம் 1948: 1).

இந்தித் திணிப்பால் தூண்டப்பட்ட இயக்கத்தின் உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில், புதுவைச்சிவம் இயற்றி 1948 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட 'இந்தி மறுப்புப் பாடல்கள்' என்னும் நூல் குறிப்பிடத்தக்கது. இசை மெட்டில் அமைந்த பதின்மூன்று பாடல்களையும் ஒரு விருத்தப்

பாடலையும் கொண்ட இந்நூல் இந்தித்திணிப்பு எதிர்ப்புப் போர் வீரர்கட்கும், பொதுமக்களுக்கும் மேலும் மேலும் ஊக்கமும் உணர்ச்சியும் மிக வேண்டும் என்பதற்காக வெளியிடப்படுவதாக அந்நூல் பதிப்புரையில் புதுவைச்சிவம் குறிப்பிடுகிறார். 1937 ஆம் ஆண்டு இந்தித் திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சியின் போது நடைபெற்ற அடக்கு முறையைவிட 1948 ஆம் ஆண்டுக் கிளர்ச்சியின் போது சுயராஜ்ய ஆட்சியின் அடக்குமுறை அதிக அளவில் இருக்கும் என்று பெரியார் குறிப்பிட்டதையே (வே. ஆனைமுத்து 1974: 1971-1996) புதுவைச்சிவம் அந்நூல் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். மேலும் திராவிடர் மேற்கொண்ட வீரப்போர் வெற்றியின் எல்லையை நாடி அடிவைத்து விட்டதாகவும் அம்முன்னுரையில் குறிப்பிடுவது, பொது மக்களின் பெருகிய ஆதரவைக் குறித்ததேயாகும் என்று அக்காலச் சூழ்நிலையையும் அதில் குறிப்பிட்டுள்ளார்.

தலைப்பிடப்படாத ஒரு விருத்தப்பாடல் தவிர ஏனைய இசை மெட்டில் அமைக்கப்பட்டுள்ள பாடல்களின் தலைப்பே இந்நூலின் தன்மையையும் இந்தித்திணிப்பு எதிர்ப்பின் இரண்டாம் கட்டக் கிளர்ச்சியின் நிலையையும் ஓரளவு தெரிவிப்பதாக அமைந்துள்ளது. தமிழ் காக்க வாரீர், தலை தாழ்வதா, தயங்காதே தமிழா, போர்க்களம் புகுவீர், இந்தி எதிர்ப்புப் படை நடத்தல், இந்திப் பெண்ணே கேள் -1, இந்திப் பெண்ணே கேள்-2, மொழியா ஒற்றுமை தரும்? மாணவருக்கு, தமிழனுக்கு, வடவருக்கு, ஆளவந்தார் போக்கு, இன்றைய சுயராஜ்ய ஆட்சி ஆகிய தலைப்பிலான இசைப்பாடல்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. இவற்றுடன் மறுமலர்ச்சிக் கவிதைகள் நூலில் இடம் பெற்றுள்ள ஐந்து பாடல்களையும் சேர்த்து மொத்தம் பத்தொன்பது பாடல்களையும் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் பாடல்களாகப் புதுவைச்சிவம் இயற்றியுள்ளார்.

இந்தித் திணிப்பு எதிர்ப்பு என்பதைத் திராவிடர் - ஆரியர் பிரச்சினையாகவும், பார்ப்பன ஆதிக்க எதிர்ப்பின் திரிந்த வடிவ

மாகவுமே திராவிட இயக்கத்தினர் கொண்டிருந்தனர். புதுவைச் சிவத்தின் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் பிரச்சாரப் பாடல்கள் பெருமளவில் திராவிடநாடு, விடுதலை போன்ற முன்னணித் திராவிட இயக்க இதழ்களில் வெளிவந்தன. இந்தித் திணிப்பு எதிர்ப்பு இயக்கத்திற்காகப் பிரச்சாரப் பாடல்கள் அடங்கிய நூலை வெளியிட்ட திராவிட இயக்கக் கவிஞர்கள் பாரதிதாசனும் புதுவைச்சிவமும் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தி எதிர்ப்பு என்ற தொடரே திராவிட இயக்கத்தினரின் பேச்சுகளிலும் எழுத்துக்களிலும் பயன்படுத்தப்பட்டிருக்க, புதுவைச்சிவம் இந்தி மறுப்புப் பாடல்கள் என்று தன் நூலுக்குத் தலைப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. மொழியை எதிரியாகக் கருதவில்லை என்றும், திராவிடர்- ஆரியர் பிரச்சினையின் கண்காணா வடிவமாக இந்தித் திணிப்பு இருப்பதால், அத்திணிப்பை எதிர்க்க நேர்கிறது என்றும் பெரியார் சொன்ன கருத்தோட்டத்தை முழுவதுமாக உள்வாங்கியிருக்கிறார் புதுவைச்சிவம் என்பதும், அதனாலேயே ஈரோடு உண்மை விளக்கம் பிரஸ் 'ஹிந்தி எதிர்ப்புப் பாடல்கள்' என்ற தலைப்பில் நூல் வெளியிட்டாலும், 'இந்தி மறுப்புப் பாடல்கள்' என்ற தலைப்பில் தனது நூலை வெளியிட்டிருக்கிறார் புதுவைச்சிவம் என்ற முடிவுக்கு வரலாம்.

சென்னை மாகாணத்தில் முகிழ்த்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் புதுவைத் திராவிட இயக்கத்தினரின் பங்கும் இருந்தது. பிரெஞ்சிந்தியாவின் பூர்வ குடியினர் தாங்களும் தமிழர்களே என்று உணர்ந்து, இன அடிப்படையிலான தனிநாடு கோரும் போராட்டத்திற்குத் தங்களை உட்படுத்திக் கொள்ளவும் இந்திய அளவில் ஏற்படும் மொழிக் கொள்கை தங்களையும் பாதிக்கும் என்ற அளவில் தங்களது பார்வையை இந்தியத் தேச அளவில் செலுத்தவும் இந்தித் திணிப்பு அவர்களைத் தூண்டியது. அதே நேரத்தில் பிரெஞ்சிந்தியாவில் உள்ள பிரச்சினைகள் மட்டுமின்றித் தமிழகப் பிரச்சினைகளிலும் தலையிட்டுத் தங்கள் கருத்தை எடுத்துரைக்கவும் புதுவைச்

சுயமரியாதை இயக்கத்தினர்க்கு இது ஒரு வாய்ப்பாக அமைந்தது. பிரெஞ்சிந்தியாவில் இந்தித் திணிப்பு என்ற நிலை இல்லாததால், சென்னை மாநிலத்தில் திராவிடர் கழகத்தினர் நடத்தும் போராட்டங்களில், புதுவைத் திராவிட இயக்கத்தினர் கலந்து கொண்டனர் (சிவ. இளங்கோ 2000: 131).

## இனவுணர்வு

1938ஆம் ஆண்டில் முகிழ்த்த இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டத்தின் விளைவாகத் திராவிடர் - ஆரியர் இனப் பிரச்சினை தமிழ்நாட்டில் பெரும் விவாதப் பொருளாக ஆனது. இதனைத் தொடர்ந்து திராவிட நாடு கோரிக்கையும் முன் வைக்கப்பட்டது. தமிழர்கள் வாழும் திராவிட நாடு ஆரியர் களாலும், ஆங்கிலேயர்களாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறது என்ற கருத்தைத் திராவிட இயக்கம் முன்வைத்து இவ்விரண்டு ஆதிக்கத்திலிருந்தும் விடுதலை பெறுவதே திராவிட நாடு கோரிக்கை என விளக்கமளிக்கப்பட்டதையும் முதல் இயலில் விரிவாகக் கண்டோம். திராவிடர் - ஆரியர் குறித்த பெரியாரின் கருத்துரைகளெல்லாம் பொதுக்கூட்டச் சொற்பொழிவு வாயிலாகவும் இயக்க இதழ்களின் தலையங்கம், கட்டுரை வாயிலாகவும் வெளிப்படுத்தப்பட்டு வந்தன. சுயமரியாதை இயக்கத்திலும், திராவிடர் கழகத்திலும் முக்கியப் பங்கு வகித்து வந்த பாரதிதாசன், புதுவைச்சிவம் ஆகியோரின் கவிதைகளில் இயக்கத்தின் இக்கொள்கைகள் முக்கியப் பங்கு வகித்தன.

## மொழி உணர்வு

தமிழ் மொழியைச் செவ்வியல் மொழியாக இந்திய அரசு அறிவிக்க வேண்டுமென்று பன்முனைக் கோரிக்கை முன்வைக்கப்பட்டு, அது இந்திய அரசாங்கத்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. ஒரு செவ்வியல் மொழிக்கான தகுதிகளாக என்னென்ன முன்வைக்கப் பட்டுள்ளனவோ, அத்தனைச் சிறப்பும் தமிழ் மொழிக்கு இருப்பதைத் தமிழர்களும் ஆர்வலர்களும் சுட்டிக்காட்டியுள்ளனர். இத்தனைச் சிறப்புகள் பெற்றிருந்தும் இருபதாம் நூற்றாண்டு வரையில்

ஒருசில காலங்களில் மட்டுமே தமிழ்மொழி தனக்குரிய சிறப்பிடத்தைப் பெற்றிருந்ததும், ஆட்சிமொழியாக இருந்ததும் வரலாறு மூலம் தெரியவருகின்றது. தமிழ் மக்களுக்கே தம் மொழியின் சிறப்பு சரிவரத் தெரியாமல் பண்டிதர்களின் வரம்போடு அதன் சிறப்பு வரையறுக்கப்பட்டு இருந்தது என்பதை இருபதாம் நூற்றாண்டின் முற்பாதியில்தான் தமிழர்களில் சிலர் உணர்ந்து, அந்த எண்ணத்தை வெளிப் படுத்தவும் ஆரம்பித்தனர். இப்பணியிலும் சுயமரியாதை இயக்கமே தலையாய பங்கு வகித்தது.

செந்நாப் புலவர்களால் செழுமைப்பட்டிருந்த இலக்கியத் தமிழ், மக்கள் இலக்கியமாக மாறுபட்ட எளிமையான வடிவத்தில் மக்களைச் சென்றடையப் பெரிதும் காரணமாக இருந்தவர் சுப்பிரமணியபாரதி.

> *''.... கவிதையுலகுக்குப் பாரதியார் ஒரு வழி காட்டியாவார். இடர் செறிந்த திரிசொல் என்னும் பாதையைத் தூர்த்து, இயற்சொல் என்னும் நேரிய பாதையை அமைத்துத் தந்தவர் அவரே. பழமை - இலக்கணவிதி ஆகியவற்றிற்குப் பாரதியார் அஞ்சியிருப்பரேல், நாதியற்றுப் போன பல்லாயிரம் கவிஞர்களைப்போல், பாரதியாரும் ஆகியிருப்பர் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை....''*
>
> (புதுவைச்சிவம் 1948: 4-5)

என்கிறார் புதுவைச்சிவம்.

பாரதி காட்டிய புதுநடையில் தடம் பதித்த பாரதிதாசன், தமிழரின் வாழ்வையும் தமிழ் மொழியையும் இரண்டற நோக்கினார். பாரதிக்கு முன் எந்தத் தமிழ்ப் புலவரும் வீறார்ந்த துணிவுடன் தமிழின் அருமை பெருமைகளை உலகிற்கு எடுத்துரைக்கவில்லை என்றும், கவிதையுலகில் தமிழைப் பாரதிதாசன் சிகரத்திற்கு ஏற்றி வைத்த செயலை வேறு யாரும் இதுவரை எட்டவில்லை என்றும் ஆய்வுகள் கூறுகின்றன. (சே. இராசேந்திரன் 1985: 161). வேற்றுமொழித்

திணிப்பிலிருந்து தமது சொந்த மொழியைக் காக்க வேண்டும் என்ற உணர்விலும், தமிழின் வரலாற்றுப் பெருமையை உணர்த்தும் வகையிலும் புதுவைச்சிவத்தின் கவிதைகளில் மொழி உணர்வு நிலவி யிருந்தது. பாரதிதாசன் தமிழியக்கம் இயற்றியதைப் போல,தமிழ் உணர்வைப் பெரிதும் வலியுறுத்திப் புதுவைச்சிவம் தனிக்காவியம் இயற்றவில்லை என்றாலும், இயக்கக் கொள்கை என்ற அளவில் மட்டும் இல்லாமல் உணர்வுப்பூர்வமாகவும் அவரிடம் மொழியுணர்வு வெளிப் பட்டிருப்பதைப் பல கவிதைகளில் காணமுடிகிறது. அவருடைய கவிதைகளும் படைப்புகளும் மிகுதியும் சமுதாயம் சார்ந்ததாகவும், இயக்கம் சார்ந்ததாகவுமே அமைந்திருக்கின்றன என்பதால் சமுதாயப் பிரச்சினையாக மொழி ஆக்கப்பட்ட காலத்தில் தமிழ் மொழியின் பக்கம் நின்று அவர் தனது கருத்துக்களை இயக்கக் கருத்துக்களிலிருந்து இம்மியும் விலகாமல் கவிதைகளில் பதித்திருக்கிறார் என்றும் கொள்ள இடமிருக்கிறது.

தமிழ்மொழியைப் பற்றிக் கூற வந்த பெரியார், இந்திய மொழிகளுள் தமிழ் நாகரிகம் பெற்ற மொழி என்றும், வேற்று மொழிச்சொற்களை நீக்கித் தூய தமிழில் பேசுதல் என்பது தமிழரின் இழிவுகளைப் போக்கும், தமிழரின் நலன்கெடாமல் காக்கும் என்றும் கூறினார் (வே.ஆனைமுத்து 1974: 968, 969). 1937ஆம் ஆண்டில் இந்தித் திணிப்பை எதிர்த்துத் தமிழ் நாட்டில் நடத்தப்பட்ட கிளர்ச்சியின் போது, தமிழ்மொழியின் மீதான பற்றுதலின் வெளிப்பாடு இயல்பாகவே பரவலாக எழுந் திருந்தது. பெரியார் ஒரு பகுத்தறிவுவாதி மற்றும் சமூகச் சிந்தனையாளர் என்ற முறையில் மொழிப் பிரச்சினை ஏற்பட்ட போது மற்ற மொழிகளைவிடத் தமிழ் நாகரிக மொழி என்ற அளவில் இந்தி மொழித் திணிப்பை எதிர்த்தார். அதேநேரம் தமிழைத் தேவமொழி என்றோ ஒப்புயர்வற்ற மொழி என்றோ மொழிவதையெல்லாம் அவர் விரும்பவில்லை. ஆனாலும் பெரியாரின் பிரச்சாரத்தையும் மீறிய தமிழ் மொழிப்பற்று இந்தித் திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சியின் விளைவாகச் சுய

மரியாதை இயக்கத்தினரிடம் பெருகிற்று. அது, இந்தித் திணிப்பு எதிர்ப்பை விடவும் தமிழ்மொழியின் காவலனாகச் சுயமரியாதை இயக்கத்தைத் திட்டமிடாமலேயே ஆக்கி வைத்து விட்டது.

### தமிழ் மொழியின் உயர்வு

மக்களிடையே பிரச்சாரத்திற்காக இந்தித் திணிப்பை எதிர்ப்பதற்கான காரணத்தைச் சொல்லும் போது தமிழ் மொழியின் மேன்மையையும் சுட்டிக்காட்ட வேண்டியது இயல்பான அவசியமாகவும் ஆகிப்போனது. அறிவுப் பூர்வமான நிலையில் தமிழை ஒரு மொழியாக மட்டுமே பார்த்த பெரியார், அதை உயிருக்கு நிகராகப் போற்றுவதை விரும்ப வில்லை. சுயமரியாதை இயக்கத்தில் பெரியார் தவிர்த்த இரண்டாம் நிலைத் தலைவர்களெல்லாம் பெரியாரின் வரம்பை மீறித் தமிழின் சிறப்புகளை மக்களிடம் பட்டியலிட்டுக் காட்டினர். இந்தச் சூழ்நிலையில், தமிழை உயிருக்கு நேர் என்று மொழிந்த பாரதிதாசன்,

16. *''நல்லுயிர் உடம்பு செந்தமிழ் மூன்றும்*
*நான் நான் நான்''* (ஆ. திருவாசகன் 1993: 1084)

என்று உணர்வுப்பூர்வமான நிலையில் நின்று தமிழைப் போற்றினார். 'அமுதென்று சொல்வாரடி' என்று தமிழைப் போற்றும் புதுவைச்சிவம், 'இன்னுயிர் போற்றி வளர்த்திடும் இன்பத்தமிழ்' என்று பலவாறாகத் தமிழைக் குறிப்பிட்டு,

17. *''மென்மைத் தமிழ்தான் - எம்மை*
*மேனிலை தன்னிற் செலுத்திடுங் கண்டீர்*
*தொன்மைத் தமிழ்தான் - இங்குத்*
*தூயசுதந்தர மளித்திடுங் கண்டீர் ''*
(புதுவைச்சிவம் 1946: 13)

என்று குறிப்பிடுவதன் மூலம், தமிழர்களது இழிநிலைமையைப் போக்கவே தமிழ்மொழியைப் பாதுகாக்க வேண்டியது அவசியம் என்னும் பெரியாரின் போதனைகளைக் காண முடிகிறது. புதுவைச்சிவத்தின் நான்கு கவிதைத் தொகுதிகளில்

முதல் தொகுதியான 1945 ஆம் ஆண்டில் வெளியான 'தமிழர் தன்மதிப்புப் பாடல்' நூலில் தமிழ் மொழிக்கென்று தனிப்பிரிவு ஏதுமில்லாமல் நாட்டுப் பகுதி எனும் பிரிவில் 'தமிழ்மொழி' எனும் தலைப்பில் ஒரே ஒரு பாடலே தமிழ் மொழியின் சிறப்பைக் கூறுகிறது. 1946 ஆம் ஆண்டில் வெளியான இன்னொரு கவிதைத் தொகுதியான மறுமலர்ச்சிக் கவிதைகள் நூலில் மொழி நிலை எனும் பகுதியில், 'எங்கள் தமிழ்' என்னும் தலைப்பிலான ஒரேயொரு கவிதை மட்டுமே தமிழ்மொழியின் சிறப்பைக் கூறுகிறது. ஏனைய ஆறு கவிதைகளில் 'கல்வி' எனும் தலைப்பிலான கவிதை, கல்வியின் சிறப்பைக் குறித்தும், 'தமிழுக்குச் சதி', 'அன்னையின் அலமரல்', 'தமிழர் சீற்றம்', 'தமிழ் காத்த தாய்மார்', 'தமிழ்த் தாயின் சிரிப்பு' எனும் தலைப்பிலமைந்த கவிதைகளும், முழுமையான இந்தித் திணிப்பு எதிர்ப்பை வலியுறுத்தும் நோக்கிலேயே அமைக்கப் பட்டிருக்கின்றன. 1950 ஆம் ஆண்டில் வெளியான தமிழிசைப் பாடல்கள் நூலில் தமிழ் மொழிப்பகுதியில் தமிழின் சிறப்பைக் கூறும் மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. 1951 ஆம் ஆண்டில் வெளியான தன்மதிப்புப் பாடல் எனும் கவிதைத் தொகுதியில் மொத்தமுள்ள நாற்பத்தொரு பாடல்களில் தமிழ் மொழியைப் பற்றி ஒரு பாடல் கூட இடம்பெறவில்லை. மொத்தம் புதுவைச்சிவத்தின் பதினொரு கவிதை நூல்களில் ஐந்து பாடல்கள் தமிழ் மொழியின் சிறப்பைப் போற்றுகின்றன.

பாரதி, பாரதிதாசன் ஆகியோரின் தாக்கம் பெரிதும் உள்ளவராகக் காணப்படும் புதுவைச்சிவம், தமிழ்மொழிப் பற்றாளராக விளங்கிய போதிலும், மொழியைப் பொறுத்து, சமுதாயச் சிந்தனையுடனும் பகுத்தறிவுடனும் உணர்வுப் பூர்வமான நிலையினின்று விடுபட்டுப் பெரியாரைப்போல் அறிவுப்பூர்வமான நிலையில் நின்று நோக்கியிருக்கிறார் என்பதைக் காணமுடிகிறது. சுயமரியாதை இயக்கம், இந்தித் திணிப்பு எதிர்ப்பின் போது தமிழுக்கு அரணாக நின்ற காலத்தில் அதற்கு முழு ஒத்துழைப்புக் கொடுத்துப் பிரச்சாரம் செய்த

புதுவைச்சிவம், பெரியாரின் சிந்தனைகளையும் மனத்தினில் தேக்கிச் சமுதாயச் சிந்தனையுடனும் மொழிப் பிரச்சினையை நோக்கியதாலேயே அவருடைய பாடுபொருள்களில் பாரதிதாசன் கவிதைகளில் இடம்பெற்றதைப்போல் தமிழ் மொழி மிகப் பரவலான, ஆழமான இடத்தைப் பெற முடியவில்லை என்றும் துணியலாம்.

# பெண்ணுரிமை

பெண்ணுரிமை குறித்த விரிவான கோட்பாடுகளும் அதற்கான இயக்கங்களும் உலக அளவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொடங்கி இருபதாம் நூற்றாண்டில் பெருமளவில் வளர்ச்சியடைந்தன. பெண்ணிய உரிமைப் போராட்டங்களின் தோற்றுவாயாக மேற்கத்திய நாடுகள் இருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிகளில் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் பெண்ணுரிமை இயக்கங்கள் வலுப்பெற ஆரம்பித்தன. ஆண்களைப் போல உடை அணிவதும் அன்றைய உரிமை யாகவும் புரட்சியாகவும் கருதப்பட்டது. அந்நூற்றாண்டின் இறுதியில் பெண்களுக்கு ஓட்டுரிமை கோரும் இயக்கங்கள் தோன்றின. இவற்றின் விளைவாக 1918 ஆம் ஆண்டில் இங்கிலாந்திலும் 1920 ஆம் ஆண்டில் அமெரிக்காவிலும் பெண்கள் ஓட்டுரிமை பெற்றனர். 1930 ஆம் ஆண்டுகளில் ஆணுக்கு நிகரான உரிமை கோரிய போராட்டங்கள் பல நாடுகளிலும் பரவின. முடிவெட்டிக் கொள்ளவும், பொது இடங்களில் புகைக்கவும், வாகனங்கள் ஓட்டவும் உரிமைகளைப் பெண்கள் போராடியே பெற நேர்ந்தது. இதன் அடுத்த கட்டமாகத் திருமணமும், ஆண் துணையும் தேவையில்லை என்று அறிவிக்கக்கூடிய துணிவையும் பெண்ணிய இயக்கங்கள் பெற்றன. இந்நிலையை மேற்கத்திய நாடுகளின் கட்டுப்பாட்டில் இருந்த, குறிப்பாக இங்கிலாந்தின் காலனி ஆதிக்கத்தில் இருந்த நாடுகளும் மெல்ல மேற்கொள்ள ஆரம்பித்தன. செய்திகளை உலகமெங்கும், பரிமாறிய இதழியல் இதற்கு ஒரு முக்கியக் காரணமாக அமைந்தது.

இந்தியாவில் முதன் முதலில் 1886 ஆம் ஆண்டில் கல்கத்தாவிலும், 1917 ஆம் ஆண்டில் சென்னையிலும் இந்தியப் பெண்கள் கூட்டமைப்புகள் தொடங்கப்பட்டன. தொடர்ந்து,

1925 ஆம் ஆண்டில் இந்தியத் தேசியப் பெண்கள் குழு, 1926 ஆம் ஆண்டில் அகில இந்தியப் பெண்கள் மாநாடு ஆகிய அமைப்புகள் உருவாயின. இந்தியப் பண்பாடு, மிகப் பழமையான தொன்மங்களோடு பிணைக்கப்பட்ட மரபு வழியாக இருந்தது. மதமும் சாதியும் அவற்றின் வழி நிற்கும் சமூக அமைப்பும் பெண்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதை இயல்பாகவும் நியாயமாகவும் ஏற்றுக் கொண்டன. இதனால் பெண்களே தங்களின் உரிமைகளை மறுக்கும் நிலை, உலக நாடுகளில் பெண்கள் இயக்கம் பெரியதாக வளர்ந்த பின்னும் கூட, இந்தியாவில் நீடித்து வந்தது. இந்தக் கடுமையான சூழலில்தான் பெண்ணுரிமை குறித்தான விழிப்புணர்வையும், அதற்காகப் போராடும் சமூகச் சூழலையும் ஏற்படுத்தும் மிகப் பெரிய பணியைத் திராவிட இயக்கம் கைக்கொள்ள நேர்ந்தது.

சுயமரியாதை இயக்கத்தின் தொடக்கக் காலத்திலேயே, 1929 ஆம் ஆண்டில் செங்கல்பட்டில் நடைபெற்ற சென்னை மாகாண சுயமரியாதை முதல் மாநாட்டில் பெண்ணுரிமை கோரி, ‘பதினாறு வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கே மணம் செய்விக்கப்பட வேண்டும்; பெண்களுக்கு மணவிலக்கு உரிமை, விதவைகளுக்கு மறுமண உரிமை வேண்டும்; அவர்களுக்குச் சொத்துரிமை அளிக்க வேண்டும்; கல்வி அளிக்க வேண்டும்; அனைத்துத் தொழிலையும் செய்யவும் சமஉரிமை அளிக்கப்படவேண்டும்; ஆசிரியர் வேலைக்குப் பெண்களையே அதிகமாக நியமிப்பதுடன் ஆரம்பக்கல்வி ஆசிரியர் வேலை முழுவதும் பெண்களுக்கே கிடைக்கும்படிச் செய்யவேண்டும்’ என்று பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன (வே. ஆனைமுத்து 1974: XXXII).

பெண்ணிய அமைப்பாளர்களின் நெடிய போராட்டம் பல தடைகளையும் உடைத்தெறிந்து பெண்ணுரிமையை நிலைநாட்டிக் கொண்டிருந்த பொழுதில், இந்தியச் சூழலில் காணப்பட்ட தடை, மற்ற நாடுகளிலிருந்து வேறுபட்டிருந்தது. கற்பு என்பதை ஒரு வாழ்க்கை நெறியாகப் பொதுவாக இந்தியச்

சூழலும், குறிப்பாகத் தமிழினச் சூழலும் ஏற்றுக் கொண்டு ஆணாதிக்கத்தை அசையவிடாமல் பார்த்துக் கொண்டன. விதவை மறுமணங்களும், வாழாமல் இருந்த பெண்களின் மறுமணங்களும் கூட, கற்பு என்ற கட்டுப்பாட்டால் மறுக்கப் பட்டன. கற்பு என்பது கடவுள் தன்மையாகவும் கூறப்பட்டுச் சமுதாயத்தின் அனைத்து அமைப்புகளும் இதை ஏற்ற நிலையில், பெண்ணடிமைத் தனத்தை எதிர்ப்பதுகூடப் பாவமான செயலாகவும், அது கடவுள் தன்மையை ஏற்காத செயலாகவும் கருதப்பட்டது. இந்நிலையில்தான் திராவிட இயக்கத்தினர் கற்பு நெறியையும் அதற்குப் பாதுகாப்பாக இருந்த கடவுள் தன்மையையும் மதிப்பீடு செய்யத் தலைப்பட்டனர். பெண்களுக்கு ஆண்களைப் போலவே வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறன் ஆகிய உணர்வுகளும் ஆளுமைகளும் இருப்பதால் பெண்கள் அனைத்து வகையிலும் ஆண்களுக்கு நிகராக மதிக்கப் படவேண்டும் என்றும், இக்கருத்தை ஆண்மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் பெரியார் கூறியதைப் பரப்புவதற்கு அவ்வியக்கக் கவிஞர்கள் பெரிதும் முயன்றனர்.

இக்காலக்கட்டத்தில் திராவிட இயக்கத்தினர் ஏற்படுத்திய தொடர் விளைவுகளிலும் அதனால் அவ்வியக்கம் அடைந்த வளர்ச்சியிலும் கவிஞர் புதுவைச்சிவத்தின் பங்களிப்பானது பெண்ணடிமை ஒழிப்பு, பெண்ணுரிமைப் போராட்டம், பொது வாழ்வில் பெண்கள், பெண் கல்வி, குழந்தை மண எதிர்ப்பு, பொருந்தாமணக் கண்டனம், விதவை மறுமணம், கலப்புத் திருமணம் என்று பல நிலைகளில் அமைந்தது.

உலக அளவில் பெண்ணிய அமைப்புகளின் போராட்டங்கள், இந்திய, தமிழகச் சூழல்களில் பெண்களின் நிலை ஆகியவற்றின் பின்னணியில் திராவிட இயக்கத்தின் பெண்ணுரிமைக் கோட்பாடுகளை உள்வாங்கி அவற்றைப் பரப்புவதில் புதுவைச்சிவம் பெரும் முனைப்புக் காட்டியுள்ளார். புதுவைச் சிவம் பெண்ணுரிமைக்குத் தனது படைப்புகளில் விரிவான

இடம் தந்திருக்கிறார். கவிதைகளைப் பொறுத்த வரையில் விதவை நிலையைக் கடிந்து விளக்கும் குறுங்காவியம் (கைம்மை வெறுத்த காரிகை) ஒன்றும், பெண்கள் வீரத்துடன் நாட்டு, சமுதாயப் பிரச்சினைகளில் தலையிடக்கோரும் மூன்று பகுதிகளடங்கிய குறுங்காவியம் (மறக்குடி மகளிர்) ஒன்றும், பெண்களின் மணவுரிமையை வலியுறுத்தும் குறுங்காவியம் (காதலும் கற்பும்) ஒன்றும் அவரால் இயற்றப்பட்டுள்ளன. அவற்றுடன் பெண்ணுரிமையை வலியுறுத்தும் மூன்று கவிதைக் கதைகளும் அவரது கவிதைத் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ளன. பெண் விடுதலை கோரும் ஆய்ந்து பார்ப்பீர் என்ற தலைப்பிலான பாடல், பொருந்தா மணத்தைக் கண்டனம் செய்யும் 'அவர்கள் வாழ்வு' என்ற தலைப்பிலான பாடல், பெண்களுக்கு மணவுரிமையை வற்புறுத்தும், 'உண்மைக் காதல்' என்ற தலைப்பிலான பாடல் ஆகியவை அவை.

அவைதவிர, பெண்ணுரிமையை வற்புறுத்தும் இருபத்தி யேழு பாடல்கள் அவரது கவிதைத் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ளன. காவியங்களில் உள்ள விருத்தப்பாக்கள், கவிதைக்கதைகள், பிற கவிதைகள் அனைத்தையும் சேர்த்தால் புதுவைச்சிவம் கவிதை நூல்களில் அடங்கும் 491 பாடல்களுள் 177 பாடல்கள் பெண்ணுரிமையின் அவசியத்தை வலியுறுத்து கின்றன. இதன் மூலம் புதுவைச் சிவம் கையாண்ட பாடு பொருள்களுள் பெண்ணுரிமையே முதலிடத்தைப் பெறுவதை அறிய முடிகிறது. பெண்ணுரிமைக் கோட்பாட்டின் பல்வேறு நிலைகளை வற்புறுத்தி இயற்றப்பட்டுள்ள இப்பாடல்கள் இங்குப் பெண்கல்வி, வீரம், சமவுரிமை, குழந்தைமண எதிர்ப்பு, விதவைமறுமணம், பொருந்தாமணக் கண்டனம் ஆகிய உட்கூறுகளில் பகுக்கப்பட்டுள்ளன. முன்பத்தியில் குறிப்பிடப் பட்ட குறுங்காவியங்களும், கவிதைக்கதைகளும் தனித்தனியே இவ்வியலில் கையாளப்படுவதால், புதுவைச்சிவம் கவிதைத் தொகுதிகளில் இடம்பெற்றுள்ள பெண்ணுரிமை குறித்தான இருபத்தேழு பாடல்கள் மட்டுமே இங்கு எடுத்தாளப்படுகின்றன.

**பெண்கல்வி**

கல்வியின் அவசியத்தைத் திராவிட இயக்கத்தினர் உணர்ந்திருந்ததாலேயே 'அனைவருக்கும் கல்வி' என்பது அவர்களின் கல்விக் கொள்கையாக இருந்தது. பல சுயமரியாதை மாநாடுகளில் இதற்கான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு அவை குடி அரசு, புதுவை முரசு ஆகிய இதழ்களில் வெளி வந்தன (புதுவை முரசு 8. 6. 1931).

ஆனால் கல்வி அனைவருக்குமாக இல்லாமல் ஒரு சில வகுப்பினருக்கே இருந்த சமுதாய அமைப்பைத் திராவிட இயக்கத்தினர் குறை கூறினர். குறிப்பாகத் தாழ்த்தப்பட்டவர் களுக்கும், பெண்களுக்கும் கல்வி அளிக்கப்பட்டே ஆக வேண்டும் என்ற அவர்களின் பிரச்சாரம் வெளிப்படையாகவே இருந்தது. பெண்களுக்குக் கல்வி அறிவளிப்பது நாட்டு விடுதலையைவிட மிகமிக அவசியமானதாகும் என்பதே பெரியாரின் கருத்தாக இருந்தது (வே. ஆனைமுத்து 1974:109). இந்தக் கருத்தையே சுயமரியாதை இயக்கக் கொள்கைப் பரப்பாளர்களும், கவிஞர்களும் தங்கள் படைப்பு களில் வலியுறுத்தி வந்தனர். பெண்களுக்குக் கல்வி மறுக்கப் பட்ட நிலையைப் புதுவைச்சிவமும், தனது கவிதைகளில் கடுமையாகக் கண்டனம் செய்துள்ளார். கல்வியை ஏற்காத பெண்களை,

*27.''அடுப்பங்கரை மோட்சமென்றே அதிலொடுங்கிக் கிடப்பார்! - நாளும்*
*ஆடவரைத் தெருவில் கண்டால் அறையிலோடி ஒளிப்பார்!*
*படிப்பறியாவிடினும், பல கனவுப் பலன் அறிவார்! - பல பாங்குடனே*
*சடங்கியற்றும் வகைகள் யாவும் மறவார்! ''*

(புதுவைச்சிவம் 1945 : 12)

என்கிறார். மேற்கத்திய நாடுகளில் பெண்கள் பல வகையிலும் முன்னேறி ஆண்களுக்கு நிகரான உரிமை பெற்று வாழ்வதற்குக் கல்வியே அடிப்படை என்றார் பெரியார். உலகத்தின் பிற நாடுகளில் உள்ள மாதர்களைச் சுட்டிக்காட்டும் புதுவைச்சிவம்,

28. ''*கல்வி யறிவினை நாளும் கற்றே*
*கடுமூட எண்ணத்தைச் சாடி விட்டே,*
*எல்லா உரிமையும் அன்னார் பெற்றே*
*இன்ப நல் வாழ்வினில் வாழுகின்றார்* ''
(புதுவைச்சிவம் 1945 : 13)

என்று தமிழ்நாட்டுப் பெண்கள் கல்வியில் ஆர்வம் பெறத் தூண்டுகிறார். பெண்கள் கல்வி கற்றால்தான் சமுதாயம் முன்னேறும் என்ற கருத்தினில், புதுவைச்சிவம் பொறுப்பாசிரியராக இருந்த 'புதுவை முரசு' இதழில் பல செய்திகளும் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன (புதுவை முரசு 8.6.1931).

**வீரம்**

ஆணாதிக்கம் பெண்களை அடக்கி ஒடுக்குவதில் கவனம் செலுத்தியதால் பெண்கள் வீரமற்றவர்களாகச் சித்திரிக்கப்பட்டனர். பெண்களைச் சமுதாயப் பிரச்சினைகளில் தலையிட முடியாமல் ஒதுக்கி வைத்தும், ஆண்களைப்போல் தைரியமான சூழ்நிலைகளில் பழகாமல் செய்தும் ஆணாதிக்கம் நிலைநாட்டப்பட்டது. பெண்ணடிமைக்கு அவர்களைக் கோழை என்று குறிப்பிடுவதும் ஒரு காரணமாயிருந்தது. இந்நிலையில் பெண் கள் வீரமான காரியங்களில் ஈடுபட வேண்டும் என்பதும், அச்சத்தை மனத்திலிருந்து நீக்க வேண்டும் என்பதும் பெரியாரின் போதனைகளில் தீவிர இடத் தைப் பிடித்தன. பெண்டிரின் கோழைத் தனத்தைச் சுட்டும் புதுவைச்சிவம்,

29. ''*வீரத்திலோ வீட்டைத்தேடிச் சிப்பாய் வந்து*
*நின்றால்- ஒரு*
*மெய்விதிர்த்தே நடுநடுங்கி மிரண்டு விழிக்கத் தெரியும்*''
(புதுவைச்சிவம் 1945:12)

என்று பெண்களின் பலவீனங்களைச் சுட்டிக்காட்டி அவர்கள் இந்நிலையிலிருந்து மாறவேண்டும் என்றும் வலியுறுத்துகிறார். அவரது குறுங்காவியமான மறக்குடி மகளிர், முழுமையாகவும் பெண்களின் வீரத்தை வலியுறுத்தியே இயற்றப்பட்டுள்ளது. (சிறுகாவியப் படைப்புகள் என்ற தலைப்பில் 'மறக்குடி மகளிர்' நூல் குறித்து விவரிக்கப்பட்டுள்ளது).

**சமவுரிமை**

பெரியாரின் பெண்ணியம் குறித்தான கருத்துக்கள் மிகப் புரட்சிகரமாக இருந்தன. திராவிட இயக்கத்தில் பெரியாரின் கருத்துக்களை வெளிப்படுத்திய பேச்சாளர்களும் எழுத்தாளர் களும் கவிஞர்களும் பெரியாரின் பெண்ணியக் கருத்துக்களை முழுமையாகப் பிரதிபலிக்க முடியாமல் தடுமாறினர். அன்றைய சமூகச் சூழலில் குடும்பம் என்பதும், கற்பு என்பதும், ஆண்களுக்குப் பாதுகாப்பான ஆயுதமாகவே விளங்குவதைத் திராவிட இயக்க ஆண்களும் அனுபவித்துக் கொண்டே அவற்றைத் தேவையில்லை என்று கூற முடியாமல் தவித்தனர். இந்த ஒரு கொள்கையில் பெரியாரின் கருத்துக்களைத் திராவிட இயக்கத்தினர் முழுமையாக ஏற்கவில்லை என்று கூடக் கூறலாம். பெண்கல்வி, விதவைமணம், பெண்களுக்கு மண வுரிமை, சீர்திருத்தத் திருமணம் போன்ற திராவிட இயக்கக் கொள்கையைக் கடைப்பிடித்தவர்களுக்கு, 'குடும்பம் ஒரு ஆணாதிக்க நிறுவனம்; பெண்கள் பிள்ளைபெறும் தொல்லையை விடவேண்டும்' (வே. ஆனைமுத்து 1974:106) என்று பெரியார் கூறியதைத் தங்கள் குடும்பத்தில் கடைப்பிடிக்க முடியவில்லை. குடும்ப அமைப்பை விட்டு வெளிவரக்கூடிய புரட்சிகரமான சிந்தனைகளைத் திராவிட இயக்கத்தினரே விரும்பவில்லை என்றும் கூறலாம். இதற்குப் பாரதிதாசனின் 'குடும்ப விளக்கு' காவியத்தை எடுத்துக்காட்டாகக் கூறலாம். பெண்ணுரிமையைப் பொறுத்தவரையில் பெரியார் அளவிற்குத் தீவிரச் செயல்பாட்டை விரும்பாத திராவிட இயக்கத்தினர் வற்புறுத்திய பெண்ணுரிமை, குடும்ப அமைப்பு சார்ந்ததாக இருப்பினும், அக்காலக்கட்டத்தில் பெண்ணுரிமையை வலியுறுத்தி அதற்காகக் குரல் கொடுத்த முதல் இயக்கமாகத் திராவிட இயக்கமே அமைகிறது. இந்நிலையில் பெரியாரின் கருத்துக்களை உள்வாங்கிய புதுவைச்சிவத்தின் கவிதைகள் திராவிட இயக்கத்தின் பெண்ணுரிமைப் போராட்டத்திற்குப் பெரிதும் துணை நின்றன.

பெண்ணடிமை என்பது மனித சமுதாயத்தின் அழிவுக்குக் காரணமாகி விடும்; பெண்களுக்குச் சமவுரிமை அளிக்கும் சமுதாயமே வளமான வாழ்வு பெறும் என்று பெரியார் கருதினார் (வே. ஆனைமுத்து 1974 : 170). இந்தக் கருத்தினை உள்வாங்கிய புதுவைச்சிவம்,

30. *''வாழ்வின்பம் யாவருக்கும் பொதுவாகுமன்றோ?*
*பாழ்நிலையில் வீழ்வதுவோ பெண்பிறவி?''*
(புதுவைச் சிவம் 1946 : 22)

என்று சமுதாயத்தை நோக்கி எழுப்பும் கேள்வியும்,

31. *''வெவ்வியதாம் இருட்டறையில் - சமையற் கட்டில்*
*விளையாட விட்டுவைத்தே மகிழ்வார் ஆண்கள்!*
*கொவ்வையிதழ் மாதர்களின் இந்த வாழ்வு*
*கூண்டிலுறும் கிளி வாழ்வுக் குயர்ந்த தாமோ?''*
(புதுவைச் சிவம் 1946: 20)

என்று குறிப்பாக ஆணாதிக்கத்திற்கு எழுப்பும் கேள்வியும் பெண்ணடிமை எதிர்ப்பின் தீவிரத்தைக் காட்டுமாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

32. *''என்ன நலங்கண்டீர்? - உரிமை யாது பெற்றுள்ளீர்?''*
*''விந்தையொன்று கேட்பீர் - உம்மை வீழ்ந்த பிறப்பென்றும்*
*நிந்தைக் குரியரென்றும் - புகல்வார் நீரும் அதையொப்புவீர்!*
*எந்த உலகினிலே - இதுபோல் ஏழை மதி கண்டீர்!''*
*''ஆணுக்குப் பெண்ணடிமை உண்டோ? - அதை நீர் ஏற்றதனால்*
*மாணுற்ற பெண்ணுலகுக் - கழியா மாசினை யுண்டு பண்ணீர்!''*
(புதுவைச்சிவம் 1946: 27).

என்று பெண்களுக்குப் பறவைகள் வாயிலாக அறிவுறுத்தும் புதிய உத்தியையும், பெண்ணுரிமைக் கருத்துப் பரவலுக்குப் புதுவைச்சிவம் பயன்படுத்தியிருப்பதும் நோக்கத்தக்கது.

**சொத்துரிமை**

பெண்ணடிமை நீடிப்பதற்கு அவர்களுக்குச் சொத்துரிமை இல்லாதிருப்பது ஒரு முக்கியக் காரணம் என்று குறிப்பிட்டார் பெரியார் (வே. ஆனைமுத்து 1974: 129).

*33. ''என்ன குறையுடையாள்? - அவள் என்ன*
*தவறுடையாள்?*
*மன்னு சொத்துரிமை ஒன்றிழந்தாள்! வந்த மானக்கே*
*டீதன்றோ?''*

(புதுவைச்சிவம் 1946: 21)

என்பது பெண்களின் சொத்துரிமை கோரும் புதுவைச்சிவத்தின் வாதமாக அமைகிறது. ஆண்கள் இதுவரை அனுபவித்தது போதும். இனியாவது பெண்களுக்குச் சொத்துரிமை அளிக்க வேண்டும் என்றும் கோரிக்கை விடுக்கிறார் புதுவைச்சிவம்.

*34. ''ஆணும் பெண்ணும் சமமாகும் - இனிச்*
*சோதனையே வேண்டாம் போதும் - சம*
*சொத்துரிமை அளிப்பீர் நன்றே''*

(புதுவைச்சிவம் 1951: 14)

**மணவுரிமை**

திருமணத்தைப் பற்றி மிகப் புரட்சிகரமான கருத்துக்களை வெளிப்படுத்தினார் பெரியார். திருமணமே தேவையில்லை என்பது அவரது கருத்தாக இருந்தாலும் உரிமை என்று வரும்போது திருமணம் செய்து கொள்ளவும், கணவனைத் தேர்ந்தெடுக்கவும் பெண்களுக்கு வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும் என்று பெரியார் கருதினார்.

*35. ''கல்யாணம் ஆகாத பெண்ணே - உன்*
*கதிதன்னை நீநிச்சயம் செய்க கண்ணே''*

(பாரதிதாசன் 1938: 140)

என்று வற்புறுத்தியது பாரதிதாசன் பாடல்.

36. *''மாதர்க்கு மணவுரிமை யளிப்பதில்லை!*
*வாழ்விலவர் படுந்துயர்க்கே மாற்றுமில்லை!''*
(புதுவைச்சிவம் 1945: 25)

என்று கூறும் புதுவைச்சிவம்,

37. *''நாட்டினிலே வைதிகத்தைப் புனித மென*
*வெண்ணிக் கடைப்பிடித்த பயனிதுவோ?''*
(புதுவைச் சிவம் 1945: 22)

என்று எழுப்பும் கேள்வியில் பெண்களின் முன்னேற்றம் தடைப் படுவதற்கு வைதிகர்களும், சடங்குகளும், மூடநம்பிக்கை களும், பகுத்தறிவற்ற நிலையுமே காரணம் என்று கூறுவது நோக்கத்தக்கது.

**குழந்தை மண எதிர்ப்பு**

குழந்தைகளுக்குத் திருமணம் செய்விப்பதையும் பெண்கள் உரிய வயதும் பருவமும் அடைவதற்கு முன்பாகவே அவர்களுக்குத் திருமணம் செய்து வைப்பதையும் சுயமரியாதை இயக்கக் காலந்தொட்டே திராவிட இயக்கத்தினர் எதிர்த்து வந்தனர். இப்படிப்பட்ட திருமணங்களால், சமுதாய வளர்ச்சி கேடடைகின்றது என்றும், இதைத் தடுக்கும் முயற்சியைத் தமதியக்கம் மேற்கொண்டிருப்பதாகவும் பெரியார் கூறினார். பால்ய விதவைகளைக் கட்டாயப்படுத்தி வைத்திருப்பதைப் போன்று இயற்கைக்கு விரோதமான செயல் உலகில் வேறெதுவும் இல்லை என்று காந்தி சொன்ன கருத்தைப் பெரியார் ஆதரித்துப் பிரச்சாரமும் செய்தார். 1921 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்குப்படி ஒன்று முதல் பத்து வயதுள்ள விதவைகள் 96,929 பேர் இந்தியாவில் இருப்பதாகக் காந்தி நவஜீவன் இதழில் எழுதி இருந்ததைப் பெரியார் சுட்டிக் காட்டி, இதற்குக் காரணமான குழந்தை மணங்கள் ஒழிக்கப்பட வேண்டும்; அப்படியும் பால்ய விவாகம் நடத்தி வைக்கப்பட்டு விதவையாகிவிட்ட பெண் குழந்தைகளுக்குப் பருவமடைந்த பின் மறுமணம் செய்விக்கப்பட வேண்டும் என்றும் பெரியார் வற்புறுத்தினார். தன் தங்கை மகளான இளம் விதவைக்குத் தான்

1935 ஆம் ஆண்டில் மறுமணம் செய்து வைத்ததையும் பெரியார் சுட்டிக்காட்டினார் (வே.ஆனைமுத்து 1974: 130-138).

குழந்தை மணம் செய்விக்கப்பட்டு இளமையிலேயே விதவையாகிச் சமூகத்தில் விதவைக் கொடுமைகளை அனுபவிக்கும் இளம் பெண்களின் அவல நிலையைத் திராவிட இயக்கப் படைப்பாளர்கள் பெருமளவில் வெளிப்படுத்தினர். சிறு வயதில் மணம் செய்விக்கப்பட்டு மணாளனை இழந்த இளம் வயதுப்பெண், வாழ்வின்பம் இழந்து துயருற்று இறுதியில் தன் உயிரை மாய்த்துக் கொள்ள முடிவு செய்வதாகப் புதுவைச்சிவம் கவிதை வடிக்கிறார்.

38. *''என்தாயும் தந்தையரும் சிறுவயதி லென்னை*
*யாருக்கோ மணஞ்செய்தார்; இறந்தார்கள் பின்பு*
*நன்மாலை சூட்டிய அந் நாயகனும் மாண்டான்;*
*நங்கையெனை விதவையென்றார்! அன்றுமுத லென்னைத்*
*துன்பமெனும் நெடுங்கடலில் ஆழ்த்தியது சுற்றம்!*
*தூயவொரு மங்கையெனும் நற்பருவந் தன்னில்,*
*பன்னலமும் யானிழந்தேன்! பாவியேனென் வாழ்வு*
*பாழான முடிவினுக்கே வந்ததுதான் கண்டேன்!''*
(புதுவைச் சிவம் 1946: 22)

இப்படி விதவையாக்கப்பட்ட சிறுபெண்கள் பருவ மடைந்தவுடன், வைதீகம் பேசுவோரே அப்பெண்களைத் தங்கள் காம இச்சைக்குப் பயன்படுத்தியும் விடுகின்றனர்; ஆனால் வைதிக, சமூகக் கட்டுப்பாடு காரணமாக இப்படிப்பட்ட தகாத உறவினால் பிறக்கும் குழந்தைகளைக் குளங்களிலும் குப்பைத் தொட்டிகளிலும் வீசி விடுகின்றனர்; வைதீகத்தில் அதிகம் ஊறிய குப்பைத் தொட்டிகள் தான் அன்றாடம் பிள்ளை பெறுகின்றன என்று பெரியார் நொந்த உள்ளத்தோடு குறிப்பிடுகிறார். இந்நிகழ்வுகளைக் கண்டும் கேட்டும் பொறாத மனத்தோடு புதுவைச்சிவமும் கவிதையில் சாடுகிறார்.

39. ''படமுடியாத் துயர்க் கடலில் நீந்தும் அந்தப்
பதியிழந்தோர் கரையேற மார்க்கஞ்சொன்னால்
குடிமுழுகிப் போச்சென்றே வைதீகத்தின்
குடுக்கையெலாம் ஆர்ப்பாட்டம் செய்யு மிங்கே!
அடர்புதரில் சாய்க்கடையில் நித்த நித்தம்
அனாதையைப் போல் சிசுவிறந்து கிடக்குதென்றே
படிக்கின்றோம், பார்க்கின்றோம் இதனால் மானம்
பறப்பதில்லை எனிலிதுவும் விந்தை யன்றோ''
(புதுவைச்சிவம் 1946: 25)

'மாதர்க்கு மணவுரிமை யளிப்பதில்லை' என்று கூறும் ஆணாதிக்கச் சமுதாயத்தின் அரணாக நிற்பது வைதீகமே என்பது புதுவைச்சிவத்தின் கருத்தாகப் பாடலில் அமைக்கப் பட்டுள்ளது. தன் திருமணத்தைத் தானே தீர்மானிக்கும் பக்குவமும் வயதும் இல்லாத சிறுமிகளுக்குப் பால்ய விவாகம் செய்விப்பதைக் கடுமையாக எதிர்க்கும் பல பாடல்கள் அவரது மறுமலர்ச்சிக் கவிதைகள் தொகுப்பில் காணக்கிடக்கின்றன.

**விதவை மறுமணம்**

பெண்கள் முன்னேற்றத்திற்கு விதவை மறுமணம் தேவை என்பது திராவிட இயக்கத்தினரின் கருத்தாக இருந்தது. பெண்ணுரிமை தொடர்பான கருத்துக்களைக் கூறும் புதுவைச் சிவத்தின் மூன்று குறுங்காவியங்கள் தவிரவும் (இம்மூன்று நூல்களைப் பற்றிச் 'சிறுகாவியப்படைப்புகள்' எனும் தலைப்பில் விவரிக்கப்பட்டுள்ளது), ஏனைய கவிதைத் தொகுதி களிலும் 'பெண்ணுலகு' என்ற தலைப்புக் கொண்ட பிரிவுகளில் பல கவிதைகளைப் புதுவைச்சிவம் இயற்றி இருக்கிறார்.

விதவைப்பெண்களின் துயர் கூறும் ஒரு பாடலில், யாவருக்கும் பொதுவான வாழ்வின்பம் பருவப் பெண்களை நெருப்பு சூழ்ந்துள்ள நிலைபோல் துன்பமடையச் செய்கிறது. இது உருவாக்கப்பட்ட சூது என்கிறார் புதுவைச்சிவம்.

40. ''வாழ்வின்பம் யாவருக்கும் பொதுவாகுமன்றோ,
மாப்பெரியார் இதையுணரா திருப்பதுவும்
நன்றோ?

*ஆழ்வுறுதே பெண்குலந்தான் விதவையெனும் பேரால்*
*அநியாயம் இதனைப் போல் அவனியில்*
*உண்டோ?*
*சூழ்ந்துள்ள நெருப்பிடையே எமை விட்டு நாளும்*
*துன்புறவே செய்துவரும் சூதறிவார் யாரோ?*
*பாழ்நிலையில் வீழ்வதுவோ பெண்பிறவி? இங்குப்*
*பரிதாப உள்ளமெலாம் பறந்ததுவோ? ஐயோ!''*
(புதுவைச்சிவம் 1946: 22)

மனித உடலின் இயல்பான இச்சையைக் கடுமூட வழக்கக் காரணம் காட்டி மறுப்பதும், இதைச் சீர்திருத்த யாராவது முன் வந்தால், இவையெல்லாம் கடவுளின் ஆணை என்று முற்றாக மறுத்திடும் வைதீகத்தின் போக்கையும், ஆனால் அப்படியும் அந்த அடக்குமுறை பலிக்காமல் போவதால் விபரீதம் விளையும் நிலையினையும் விவரிக்கிறார் புதுவைச்சிவம்.

*41. ''கடவுளரின் ஆணையெனில் விதவைத் தன்மை*
*கணவன்மார் மாண்டவுடன் காதல் அந்தச்*
*சுடர்க்கொடியாள் உளம்விட்டு மாய்தலின்றிச்*
*சுடுநெருப்பாய்த் தோன்றி உடல் தீய்ப்ப தேனோ?*
*அடக்குமுறை யாலவர்கள் காதல் தீயை*
*அணைத்துவிட முயல்கின்றார்! ஆனால் அந்த*
*மடத் தனத்தால் விபரீதம் விளையக் கண்டும்*
*மனந்திருந்தா திருப்பவர்கள் மனிதர் இங்கே''*
(புதுவைச்சிவம் 1946: 25)

வயிற்றுப் பசிபோல் காமப் பசியும் இயற்கையானதே; தவம் செய்பவரும் காதல் செய்யும்போது, இளமங்கையின் இன்பம் மறுக்கப்படல் நன்றன்று. அது தீயில் பொசுக்கப் படுவதற்குச் சமம் என்றும், அன்பு நிலை என்றால் என்ன என்பது பற்றியும் கூற முனைகிறார் புதுவைச்சிவம்.

*42. ''மின்னொளிரும் இளமையெழில் விதவை மங்கை*
*வேண்டாளோ சிற்றின்பம்? இயற்கையன்றோ?*

*நன்னிலையே வேண்டிமிகத் தவஞ் செய்தோரும்*
*நனிகாதல் மிகக் கொண்டார் என்னக் கண்டும்*
*பொன்னனைய மாதர்களைக் காதல் தீயில்*
*பொசுக்கி உயிர் வாட்டுவது தானோ அன்பு?''*
(புதுவைச்சிவம் 1946: 25)

இத்தகைய துயரை மாற்றி விதவைப் பெண்களை மறுமணம் செய்விப்பதே சமுதாயம் உயர்வடையும் வழி என்பதாகத் திராவிட இயக்கத்தினரின் கருதுகோள் அமைந்தது.

43. *''வாய்ந்த நல்லிளமை எழின்மிகு மாதர்*
*மறுமணம் கொள்வது தீதோ?''*
(புதுவைச் சிவம் 1945: 15)

என்று கேட்கும் புதுவைச்சிவம் தான் பொறுப்பாசிரியராயிருந்த புதுவை முரசு இதழில் விதவை மறுமணம் செய்து கொள்ள வாரீர் என இயக்கத்தினர்க்கு அழைப்பு விடுத்துப் பல விதவை மறு மணங்களை நடத்தியிருக்கும் செய்திகளையும் புதுவை முரசு இதழில் வெளியிடச் செய்துள்ளார் (புதுவை முரசு 6.4.1931).

பெண்ணுரிமை குறித்த கோட்பாட்டில் விதவை மறு மணத்தை அன்றைய காலக்கட்டத்தில் திராவிட இயக்கத்தினர் முதலிடம் கொடுத்து அக்கொள்கையைப் பரப்பியதோடு அல்லாமல் செயலிலும் அதை நிறைவேற்றியமையும் இன்றைய காலக்கட்டத்தில் விதவைகள் நிலைமை வெகுவாக மாறிப் பல மறுமணங்கள் நடந்தேறி வருவதையும் உற்று நோக்கின், திராவிட இயக்கத்தினரின் பிரச்சாரத்திற்குப் பலனில்லாமல் போகவில்லை என்று துணிந்து கூறலாம்.

### பொருந்தாமண எதிர்ப்பு

ஒத்த பருவத்தினரல்லாத ஆணும் பெண்ணும் தங்களுக்குள் விரும்பியோ, கட்டாயத்தினாலோ இணைவது பொருந்தா மணம் என்று வழங்கப்படுகிறது. தமிழ் இலக்கியத்தில் இவ் வழக்கம் பெருந்திணை என்று வழங்கப்படுகிறது. பெண்பால் நிலையில் இவ்வழக்கைச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளாத

நிலையும், ஆண்பால் நிலையில் ஏற்றுக் கொள்ளும் நிலையும் இருப்பதால் இப்பொருந்தா மணம் ஆணாதிக்கத்தின் முழுத் தன்மையும் கொண்டதாகப் பெண்ணியவாதிகளால் மதிக்கப் படுகிறது.

பெண்ணடிமைக்கு வித்திடுகின்ற அனைத்துக் கூறுகளையுமே திராவிட இயக்கத்தினர் எதிர்த்தனர். பெண் சமவுரிமை அடைய வேண்டுமானால் திருமணமே செய்து கொள்ளக் கூடாது என்றும் குழந்தை பெற்றுக் கொள்ளக்கூடாது என்றும் உச்ச நிலையில் கருத்துரைத்த பெரியார், வாழ்க்கை என்பது ஆண் பெண் இருவருக்கிடையில் ஏற்படுத்திக் கொள்ளும் ஒப்பந்தமாக இருக்க வேண்டும் என்றும் கூறினார். இன்னும் ஒரு படி மேலே போய்த் திருமணம் சட்ட விரோதமாகவும், குற்றமாகவும் கருதப்பட வேண்டும் என்றும் பெரியார் கூறினார் (வே. ஆனைமுத்து 1974: 2017). பெண்கள் ஆண்களைச் சார்ந்திருக்கின்ற நிலையில்தான் வயதான ஓர் ஆணுக்கு இளம்பெண்ணை மணம் செய்விக்கும் நிகழ்வுகள் சமூக அங்கீகாரம் பெறுகின்றன; பொருந்தா மண நிகழ்வுகளால் ஆணுக்கு எந்தவித இழப்பும் இல்லாதபோது பெண்ணுக்கு வாழ்வின்பம், மனவிருப்பம், இச்சை ஆகியன மறுக்கப்பட்டுப் பேரிழப்புக்கு உள்ளாகின்றாள். எனவே பெண்ணுரிமையின் ஒரு பகுதியாக இதுபோன்ற திருமணங்கள் தடுக்கப்பட வேண்டும் என்பது திராவிட இயக்கத்தினரின் பிரச்சாரமாக அமைந்தது.

பொருந்தாமணக் கண்டனத்தை வலியுறுத்திய பாரதி தாசன், ஒரு கிழவனுக்கு மணம் செய்து வைக்கப்பட்ட இளம் பெண்ணொருத்தி இல்லற இன்பம் பெறாத கொடுமையைத் தன் தாயிடமே புலம்பித் தீர்ப்பதாக வடித்த கவிதை திராவிட இயக்க மேடைகள் பலவற்றில் எடுத்தாளப்பட்டது. அப்பெண்ணின் நிலையைக் கூற வந்த பாரதிதாசன்,

44. *''இளமை ததும்ப, எழிலும் ததும்பக், காதல் ததும்பக்,*
*கண்ணீர் ததும்பி''*

(பாரதிதாசன் 1938 : 134)

என்று பெண்களின் மௌனமான மனக்குமுறலை விவரித்துப் பின்னரும் நெஞ்சு பொறாமல் தனது இந்நிலைக்குத் தானே வருந்தித் தன் தாயிடம்,

45. *''பாழுந்தாயே பாழுந்தாயே, என்சாவுக்கே உனை இங்கு அழைத்தேன்''*

(பாரதிதாசன் 1938 : 134)

என்று குமுறுவதாகக் கவிதை வடித்திருக்கிறார். வயதான ஆண்கள் பொருந்தாமணம் ஏற்பதைக் குறைகூறும் புதுவைச்சிவம்,

46. *''மாய்ந்திடும் நிலையில் இருப்பினும் ஆண்கள்*
*மறுமணம் புரிவதும் நன்றோ?''*

(புதுவைச்சிவம் 1945:19)

என்று வினாவெழுப்புகிறார். ஒத்த வயதுடைய இருவரின் காதலை ஓங்கச் செய்யவும், பொருந்தா வகையில் அமைவதைக் கருத்தொவ்வா மூடமணம் என்றும் கூறும் புதுவைச்சிவம்,

47. *''காதல் மறுமணம் ஓங்கச் செய்வீரே!*
*கருத்தொவ்வா மூட மணம் தள்வீரே!''*

(புதுவைச்சிவம் 1945:21)

என்று அவற்றைத் தள்ளி விடுமாறும் வேண்டுகிறார்.

1949ஆம் ஆண்டில் பெரியார் தனது எழுபத்திரண்டாவது வயதில் இளம் வயதினரான மணியம்மையைத் திருமணம் செய்து கொண்டார். இத்திருமணம் இயக்கத்தில் வாரிசு ஏற்பாட்டிற்காக என்று பெரியார் குறிப்பிட்டாலும், அவ் வியக்கத்தில் பெரும்பாலோர் அதை ஏற்கவில்லை. அவர்கள் அண்ணாவின் தலைமையில் வேறு இயக்கம் ஆரம்பித்தனர். புதுவைச்சிவம் அண்ணாவின் தலைமையை ஏற்றார். தங்களின் தலைவரே ஆனாலும், கொள்கையில் முரண்பட்ட போது தலைவர் வழி நிற்காமல் கொள்கை வழி நின்ற உறுதியை இந்நிகழ்ச்சி குறிப்பதாகக் கொள்ளலாம்.

## சமதர்மக் கோட்பாடுகள்

உலகமும் அதன் இன்பமும் எல்லோருக்கும் பொது என்பதும், மனிதனாய்ப் பிறந்த யாவரும் சமம் என்பதும் சுயமரியாதை இயக்கத்தின் சமத்துவ அல்லது சமதர்மக் கொள்கையாக இருந்தது (வே. ஆனைமுத்து 1974: 1892). மனிதனின் பிறப்பைக் காரணம் காட்டி உயர்வு தாழ்வு கற்பிக்கும் நிலையை ஒழித்து யாவரும் சமம் என்று நிறுவுதலும், ஆண் பெண் என்ற வேறுபாடின்றி இரு பாலரும் சமமான உரிமை பெறுதலும், மேலும் மதத்தின் வழியாகவோ அல்லது வேறு எந்த உயர் ஆதிக்கத்தின் வழியாகவோ கூறப்படும் பேதத்தை ஏற்காதிருத்தலும், பொருளாதார நிலைகளைக் காரணம் காட்டி ஏழை பணக்காரன் என்று பேதம் கூறுவதைக் களைதலும் ஆகிய செயல்கள் சமதர்மம் சார்ந்தவையாகச் சுயமரியாதை இயக்கத்தினரால் கருதப்பட்டன. சமுதாயத்தில் மானுடர்களின் அன்றாட வாழ்க்கை உறவுகள், சமூகப் பண்பாட்டு உறவுகள், அரசியல் பொருளாதார உறவுகள், ஆண் - பெண் உறவுகள் ஆகியவற்றை வடிவமைப்பதில் சாதிப் பிரிவினைகள் முதன்மைப் பாத்திரம் வகிப்பதாகக் கூறிய சுயமரியாதை இயக்கம், சாதியத்தை ஒழிப்பதே சமதர்மம் அடைய அடிப்படை வழி என்றும் கருதியது. சமதர்மம் என்ற வார்த்தையை உள்ளடக்கிய தலைப்புகளில் குடிஅரசில் வெளியான பல கட்டுரைகளும் சாதி ஒழிப்பை வலியுறுத்துவன வாகவே அமைந்திருக்கின்றன (எஸ்.வி. ராஜதுரை 1996:454-455/ வே. ஆனைமுத்து 1974: 1892)

சாதியை ஒழிப்பதென்பது மிகுதியும் சமதர்மமும், பொது வுடைமைத் தன்மையும் கொண்டதாகும் என்றும், சமதர்மத் தன்மையும், சமஉரிமைத்தன்மையும் சுயமரியாதை இயக்கத்தின் இலட்சியங்கள் என்றும் பெரியார் அறிவித்தார். சமதர்மத்

தத்துவமும், பொதுவுடைமைக் கொள்கைகளும் ஓங்க வேண்டும் என்று 1931 ஆம் ஆண்டு விருதுநகர் சுயமரியாதை இளைஞர் மாநாட்டில் தீர்மானம் நிறை வேற்றப்பட்டது.[3] சுயமரியாதை இயக்கத்தைப் பொறுத்தவரையில் பொதுவுடைமைக் கொள்கை என்பது மார்க்சும், ஏங்கல்சும் எழுதிய கம்யூனிஸ்ட் அறிக்கையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அதே நேரம் சமதர்மம் என்கின்ற வார்த்தைக்குச் சமூகத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் மக்கள் உயர்வு தாழ்வு இல்லாமல் சமத்துவமாய் வாழ்வதையே சமதர்மம் என்று கருதுவதாகப் பெரியார் கூறினார். சமதர்மமும், பொதுவுடைமையும் பல நேரங்களில் வேறு வேறு பொருளாகவும் ஒரு சில நேரங்களில் ஒன்றிணைந்த பொருளாகவும் சுயமரியாதை இயக்கத்தினரால் கையாளப்பட்டிருக்கின்றன (எஸ்.வி.ராஜதுரை 1996:480-482, வே. ஆனைமுத்து 1974: 1700).

சாதி ஒழிப்பை முதன்மைப்படுத்தும் சமதர்மத்தை வலியுறுத்துவதற்காகவே சுயமரியாதை இயக்கத்தில் சமதர்மக் கட்சி என்ற தனிப்பிரிவு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இந்தக் கட்சியின் வேலைத் திட்டம் குறித்து விவாதித்து முடிவு செய்ய ஈரோட்டில் 1932 ஆம் ஆண்டில் ஆலோசனைக் கூட்டம் ஒன்றும் பெரியாரால் நடத்தப்பட்டது. சுயமரியாதை இயக்கத்தின் ஒரு பிரிவாக அமைக்கப்பட்ட சுயமரியாதை சமதர்மக் கட்சியின் உத்தேசத்திட்டமும் கூட சோசலிசக் கருத்துப் பிரச்சாரத்திற்கான திட்டமாகவே இருந்தது. இதைச் சுயமரியாதை இயக்கத்தினர் அனைவரும் ஏற்கும் வரையிலும், மேலும் அது சுயமரியாதை மாநில மாநாட்டில் நிறைவேற்றப்படும் வரையிலும் பிரச்சாரம் செய்யப்பட வேண்டும் என்றும் பெரியார் வேண்டுகோள் விடுத்தார் (எஸ்.வி.ராஜதுரை 1996:210-238).

இதனை ஏற்றுக் கொண்ட புதுவைச்சிவம் சமத்துவத்தை மிக அதிக அளவில் வலியுறுத்திப் பாடியிருக்கிறார். புதுவை அரசின் கலை பண்பாட்டுத்துறை வெளியிட்டுள்ள புதுவைச் சிவம் கவிதைத் தொகுதிகள் நூலில் குறுங்காவியங்கள் போக, தமிழர் தன் மதிப்புப் பாடல், மறுமலர்ச்சிக் கவிதைகள்,

தமிழிசைப்பாடல், தன்மதிப்புப்பாடல் ஆகிய நான்கு பிரிவு களிலும் அடங்கும் 202 பாடல்களில் எழுபத்தொரு பாடல்கள் நேரடியாகச் சமத்துவத்தையும், பொதுவுடைமையையும் வலியுறுத்தும் பாடல்களாக அமைந்துள்ளன. மூடநம்பிக்கை ஒழிப்பு, பகுத்தறிவு போன்ற ஏனைய கருத்தமைந்த பாடல் களிலும் இறுதி அடிகளில் அவர் சமத்துவத்தை வலியுறுத்தியே பாடலை இறுதி செய்திருக்கிறார். அது மட்டுமல்லாமல், அவரது அனைத்துக் கவிதைத் தொகுதிகளிலும், சமுதாயப் பிரச்சினைகள் குறித்தான அனைத்துப் படைப்புகளிலும் சமதர்மத்தை வலியுறுத்தியே பாடியிருப்பதானது, அவரது கவிதைகளைப் பற்றிய மதிப்பீட்டில், அவரைச் 'சமதர்மக் கவிஞர்' என்று கூறும் வகையில் அமைந்திருக்கிறது.

*48. ''கூழுக்கும் வழியிலாமல் குடிசையும் இன்றி வாடும்*
*ஏழைகள் நிலைக்கிரங்கி இன்பவாழ் வளிக்க வந்தோள்*
*சூழொளி முகத்தள் நல்ல சுடர்க்கொடி இன்பம் வேண்டின்*
*தோழமை கொள்ள வாரீர் சூழ்தடை பறக்குந்தானே*

*வீரமே உருவாய் வந்தோள் வெற்றியே குறியாய்க் கொண்டோள்*
*தீரமும் எதற்கும் அஞ்சாத் திண்மையும் வலியும் வாய்ந்தோள்.''*

(ஸ்ரீ சுப்பிரமணியபாரதி கவிதாமண்டலம், ஆவணி 1935)

என்று அவர் குறிப்பிடுகிற பெண், பிற கவிஞர்கள் போற்றுவதைப் போல், தமிழன்னைதானே என்று எண்ணத்தோன்றும். ஆனால்,

*49. ''காரிருள் பேதம் சாதி கடுமூட வழக்கம் தீர்த்தே*
*தாரணிக் கின்பம் நல்கும் சமதர்ம மங்கை அன்னாள்''*

( ஸ்ரீ சுப்பிரமணியபாரதி கவிதாமண்டலம், ஆவணி 1935)

என்று சமதர்மத்தையே அனைத்துத் துன்பங்களையும் நீக்க வல்ல ஒரு பேரொளியாக அவர் சுட்டியிருப்பது நோக்கத் தக்கது. 1932 ஆம் ஆண்டில் சமதர்மக் கொள்கையைப் பாட ஆரம்பித்த புதுவைச்சிவம் அவருடைய எழுத்துப்பணியின்

இறுதிக் கட்டம் வரை தனது அனைத்து இலக்கிய வகைமை களிலும் சமதர்மத்தை வலியுறுத்தியிருப்பது விரிவான ஆய்வுக்குரியது.[4]

'உலகப்பன்' பாட்டில் ஓடப்பராய் இருப்பவர்கள் ஒப்பப்பர் ஆவதற்குப் பாரதிதாசன் சொன்ன வழிக்கான அடிப்படை உலக நாடுகளில் ஏற்பட்ட புரட்சிகளும், கோட்பாடு களுமே எனலாம். இந்தத் தெளிவை ஏற்கும் புதுவைச்சிவம், சமதர்மத்தின் அவசியத்தையும், அதைத் தோற்றுவிப்பதற்கான காரணத்தையும் பின்வருமாறு கூறுகிறார்.

50. *''கதியற்றோர், நிதியற்றோர், வறுமை யுற்றோர்*
*காலமெலாம் உழைத்துழைத்து வலிமை யற்றோர்*
*சதிசெய்யும் சாத்திரத்தால் மதத்தால் மற்றும்*
*சாதியெனும் கொடுமையினால் நசுக்கப்பட்டோர்*
*அதிவிரைவில் துயர்நீங்கி இன்பம் காண்பர்*
*ஆதலினால் சமதர்மம் தோற்று வீரே''*
(புதுவைச்சிவம் 1946: 33)

'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு - நாம் எல்லோரும் சமமென்பது உறுதியாச்சு' என்றும், விடுதலைப்பாட்டில், 'வாழிகல்வி செல்வமெய்தி மனமகிழ்ந்து கூடியே மனிதர் யாருமொரு நிகர் சமானமாக வாழ்வமே' என்றும் பாடிய பாரதியை ஒரு சமத்துவக் கவிஞனாகவே பாரதிதாசனும் புதுவைச்சிவமும் கண்டனர்.

1932 ஆம் ஆண்டு ஈரோட்டில் நடைபெற்ற சுயமரியாதைச் சமதர்ம ஆலோசனைக் கூட்டம் சுயமரியாதை இயக்கத்தை, சுயமரியாதை சமதர்மக் கட்சியாக மாற்றம் பெற வைத்தது. சுயமரியாதை இயக்கத்தின் இந்தப் புதிய (சமதர்ம) வேலைத் திட்டம் அதன் பிரச்சார உத்திகளில் எதிரொலித்தது. இக் கூட்டத்திற்குப் பெரியாரால் அழைக்கப்பட்டுச் சமதர்மத் திட்டத்தினை ஏற்றுக் கொண்டவராதலால் புதுவைச்சிவத்தின் கவிதைகள் சமதர்மப் பிரச்சாரத்திற்கும் பயன்படுத்தப்பட்டன.

சமதர்மத்திற்கான அவசியம், அதன் காரணம், அதனைப் பெறும் வழி ஆகியன குறித்துப் புதுவைச்சிவம் பல பாடல்களில் குறிப்பிட்டிருக்கிறார்.

51. *''நெறிவாய்ந்த சமதர்ம இன்பவாழ்வும் நேர்ந்திடுமோ''*
*''படிதனில் சமதர்மத்தைப் பரவிடச் செய்ய வேண்டும்.''*
(புதுவைச்சிவம் 1946: 29)

52. *''அல்லலுறும் ஏழையினர் நிலையை மாற்ற*
*அமைத்திடுவோம் சமதர்மம்''*
(புதுவைச்சிவம் 1946: 29)

53. *''செவ்வியுறும் சமவாழ்வு நேரா வண்ணம்*
*செங்கோலின் துணை பெற்று நசுக்கி வாழ்வர்*
*எவ்வகையும் தந்நலத்தால் புவியை வாட்டும்*
*இக்கொடியர் பெருங்குற்ற வாளரன்றோ''*
(புதுவைச்சிவம் 1946: 32)

54. *''புதுவுலகம் போற்றியெதிர் கொண்ட ழைக்கும்*
*புனிதமிகு சமதர்ம ஆட்சி''*
(புதுவைச்சிவம் 1946: 33)

55. *''சரிநிகர் சமான வாழ்வு போற்றி வாழ்வோம் தீமை*
*சரிந்து வீழச் சமதர்மம் நாட்டி வாழ்வோம்''*
(புதுவைச்சிவம் 1951: 33)

56. *''தீதிலா வாழ்வு சமதர்மமாகும்''*
(புதுவைச்சிவம் 1951:28)

57. *''நீதி மாற்றியே சமதர்மம் காண்போம்''*
(புதுவைச்சிவம் 1951:12)

58. *''நீள் துயரேகவே சமதர்மம் தோற்றுவீரே''*
(புதுவைச்சிவம் 1951:13)

59. *''சமதர்மம் ஒன்றால் அன்றிச் சுகமுண்டாமோ?''*
(புதுவைச்சிவம் 1945 : 23)

60. ''பாட்டாளி சுகம் பெறச் சமதர்மம் ஒன்றன்றி
வாழ்விற் சுகமேது.''
(புதுவைச்சிவம் 1945: 28)

61. ''வீர ரஷிய நாட்டை நோக்கு
மேல்கீழ் என்ற வாழ்வங்குண்டோ''
(புதுவைச்சிவம் 1945:29)

62. ''இன்பம் ஒளிர வேண்டின் - உனது வாழ்வில்
ஏற்பாய் சமதர்மமே'' (புதுவைச்சிவம் 1945: 30)

பொதுவுடைமை மற்றும் சமதர்மக் கருத்துகளைத் தங்கள் இயக்கத்தின் அடிப்படை இலட்சியங்களான சாதி, மத எதிர்ப்பு, சமூகச் சீர்திருத்தம், பெண்ணுரிமை, மூடநம்பிக்கை ஒழிப்பு ஆகியவற்றுடன் இணைத்தே நோக்கினர் சுயமரியாதை இயக்கத்தினர். சாதியை ஒழிப்பதென்பது மிகுதியும் சம தர்மமும், பொதுவுடைமைத் தன்மையும் கொண்டதாகும் என்று பெரியார் கருதினார் (குடிஅரசு 4.1.1931). கடவுள் மறுப்புக் கொள்கையைப் பொறுத்தவரை நாத்திகம் என்பதே சமதர்மம் என்றும் பெரியார் குறிப்பிட்டார் (குடிஅரசு 1.9.1930). பொதுவாக ஒவ்வொரு சோஷிலிஸ்டும் ஒரு நாத்திகவாதியே என்று லெனினும் குறிப்பிடுகிறார் (மங்களா 1990: 52). இந்த அடிப்படையில் சாதி, மத ஒழிப்பையும் சம தர்மத்தையும் இணைத்து நோக்கும் பாடல்கள், புதுவைச்சிவம் கவிதை களிலும் அதிகமாகவே காணப்படுகின்றன.

63. ''மக்களுக்கே சமவாழ்வினைத் தந்ததோர்
மாமதமுண்டோ செப்பிடுவீர்?''
(புதுவைச்சிவம் 1945: 18)

64. ''மோசங்கண்டே உன்றன் மூடத்தன்மை போக்கு
முற்றும் சமதர்ம வாழ்வினை யுண்டாக்கு''
(புதுவைச்சிவம் 1945 : 30)

65. ''பேதம் ஒழித்திடுவாய் பீடை மதம் விடுவாய்
ஓதும் சமதர்மமே - நாட்டில் ஓங்கி வளர்ந்திடுமே''
(புதுவைச்சிவம் 1945 : 31)

66. *''சிந்தைமிகத் துடிதுடித்தே வாழ்கின்றோம் நம்*
*குறையைத்*
*தீர்க்க ஒரு கடவுளில்லை*
*நந்தம் செயலல்லாது வேறுண்டோ? சமதர்மம்*
*நாட்டுவீர்; இன்றேல் தொல்லை!''*

(புதுவைச்சிவம் 1945 : 32)

67. *''மேலை நாட்டார் வர்க்கப் பேதமொன் றல்லாமல்*
*மேல்கீழ் பிறவியில் கொண்டதுண்டோ''*

(புதுவைச்சிவம் 1945: 33)

68. *''தாழ்வுயர்வகன்றே சமத்துவம் பெறுவோம்''*

(புதுவைச்சிவம் 1945: 34)

69. *''வாழ்வுதனில் பேதங்கொண்டால் வாய்க்குமோ*
*இன்பம் நலம்*
*வாய்ந்த சம தர்ம வாழ்வில் ஏதொரு துன்பம்?''*

(புதுவைச்சிவம் 1945: 38)

70. *''சிறுமையை யளித்த தீமதம் வீழ்த்திச்*
*சீருறும் இனிய சமதர்ம மளிக்கும்''*

(புதுவைச்சிவம் 1945: 38)

மேற்குறிப்பிட்டுள்ள அடிகள் ஒவ்வொரு பாடலின் ஈற்றடிகளாகவே உள்ளன. பெரும்பாலான பாடு பொருட்களில் எந்தக் கோணத்தில் சென்றாலும் இறுதியில் சமத்துவத்தை வலியுறுத்தியே அவர் பாடலை இறுதி செய்கின்றார் என்பது நோக்கத்தக்கது.

சுயமரியாதைச் சமதர்மத் திட்டம் என்பது முற்றிலும் வர்க்கப் போராட்டமாகவும், பொருள் முதல் வாதத்தை அடிப்படையாகக் கொண்ட பொதுவுடைமை இயக்கத்தின் திட்டமாகவும் சுயமரியாதை சமதர்மக் கட்சியில் ஒரு சிலரால் முன்னெடுத்துச் செல்லப்பட்டபோது பெரியார் அதற்கு இசையவில்லை. சாதிபேதங்கள் ஒழிந்து மக்கள் யாவரும் பிறவியில் சமம் என்பதான சமதர்ம முயற்சியே முதலில் செய்ய வேண்டியது என்று அவர் விரும்பினார். மேல்சாதி- கீழ்சாதி,

முதலாளித் தன்மை - கூலிக்காரத்தன்மை ஆகியவை மறைபடுவதுதான் சமதர்மத் தன்மை என்று அவர் நம்பினார். சாதிபேதம் அழிப்பது என்ற சமதர்மத்தைச் சொல்லிப் பின்னர்ப் பொருளாதாரச் சமதர்மம் சொன்னால் தான் தமிழகச் சூழலுக்கும் உண்மையாகத் துன்பப்படுகின்ற மக்களுக்கும் புரியும்; அதன் மூலம்தான் அவர்கள் உணர்வு பெறுவார்கள் என்றும் பெரியார் கருதினார் (வே. ஆனைமுத்து 1974: 1700). எனவே, சுயமரியாதை இயக்கத்தின் சமதர்மமும் பொதுவுடைமையும், மிகுதியும் சாதி ஒழிப்பையே அடிப்படையாகக் கொண்டவை என்பதைத்தான் அவ்வியக்கத்தினரும் பெரிதும் நம்பினர். இயக்கப் படைப்பாளிகள் அதையே வலியுறுத்தித் தங்கள் படைப்புகளை இயற்றினர். இந்த வகையில், சமத்துவத்தைப் பாடிய சுயமரியாதை இயக்கக் கவிஞர்களுள் புதுவைச்சிவம் தலையாய இடத்தைப் பிடிக்கக்கூடும் என்பதை மேற்குறிப்பிட்ட கவிதை அடிகள் உறுதிப்படுத்துகின்றன.

## பொதுவுடைமை

பொதுவுடைமைக் கொள்கை குறித்த அறிமுகம் சுயமரியாதை இயக்கத்தின் தொடக்கக் காலந்தொட்டே அவ்வியக்கத்தினருக்கு இருந்து வந்தது. மதகுருக்களும், சாத்திரங்களும் சோவியத் ரஷ்யாவை விட்டே விரட்டப்பட்ட நிகழ்வுகளும், பள்ளிக்கூடங்களில் மதத்தைப்பற்றியும், கடவுளைப் பற்றியும் கற்பிக்கக்கூடாது என்ற ரஷ்ய அரசாங்கத்தின் உத்தரவுகளும், அங்குள்ள கோயில்களை இடித்ததும், வைதிகக் கொள்கை யுடையவர்களைக் கைது செய்ததுமான நிகழ்வுகளும், கடவுள், தலைவிதி போன்ற சொற்களைப் பெயரளவில் கூட உபயோகிக்கக்கூடாது என்ற சட்டதிட்டமுடைய சங்கங்கள் ரஷ்யாவில் இருந்ததும் சுயமரியாதை இயக்கத்தினரை ரஷ்யாவின் பாலும், பொதுவுடைமைக் கொள்கைகளின் பாலும் பெரிதும் ஈர்த்தன. பார்ப்பனர், பணக்காரர், படித்தவர் ஆகியோரைத் தொடக்கத்திலிருந்தே விமர்சித்து வந்த பெரியாருக்குச்

சமதர்மம்,பொதுவுடைமை என்பதை ஏற்றுக் கொள்வது கடினமானதாக இருக்கவில்லை. எனினும் பொதுவுடைமை என்பதை அடைவதற்கான நிபந்தனையாகச் சமதர்மத்தையே பெரியார் வலியுறுத்தினார். சாதியை ஒழிப்பதென்பது மிகுதியும் சமதர்மமும் பொதுவுடைமைத் தன்மையும் கொண்டதாகும் என்று பெரியார் கருதியதன் உட்பொருள் இதுவே எனலாம். அந்த அடிப்படையிலேயே சுயமரியாதை இயக்கமும், சமதர்மம், பொதுவுடைமை ஆகியவற்றை வருண, சாதி எதிர்ப்பு ஊடகத்தின் மூலமே ஏற்றுக் கொண்டது. எனவே வருண, சாதி எதிர்ப்புக்கே சுயமரியாதை இயக்கம் முன்னுரிமை கொடுத்தது(எஸ்.வி. ராஜதுரை 1996: 458-464/ வே. ஆனைமுத்து 1974: 1677). அதே நேரம் பொதுவுடைமைக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ளவும், முன்னெடுத்துச் செல்லவும் சுயமரியாதை இயக்கம் தயங்கவில்லை.

> *''....பொதுவுடைமைக் கொள்கை நாட்டில் ஓங்க வேண்டும் என்பதே நமது இலட்சியமாக இருக்கின்ற படியால், விதி கடவுள் செயல் என்பன போன்ற உணர்ச்சிகள் மக்கள் மனதிலிருந்து ஒழிக்கப்பட வேண்டும்''*

என்று 1931 ஆம் ஆண்டில் விருதுநகரில் நடைபெற்ற சுயமரியாதை மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது (குடிஅரசு 23.8.1931).

பொதுவுடைமைக் கொள்கைகளின் மீதிருந்த ஈடுபாட்டினால், மார்ச்சும், ஏங்கல்சும் எழுதிய கம்யூனிஸ்ட் அறிக்கையைப் பெரியார் முதன் முதலில் தமிழாக்கம் செய்து 1931 ஆம் ஆண்டில் வெளியிட்டார். இதே காலக்கட்டத்தில் ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் மேற்கொண்ட பெரியார், சோவியத் ரஷ்யாவிற்கும் சென்று வந்தார். அதற்கான முதன்மைக் காரணம் அந்நாடுகளில் மத,மொழிப் புரட்சிகள் எவ்வாறு நடைபெற்றன என்பதை அறிந்து கொள்ளவே எனும் கூற்றும் நோக்கத்தக்கது. சோவியத் ரஷ்யப்பயணத்திலிருந்து

திரும்பி வந்ததும் மதத்தைப்பற்றி லெனின், மாக்ஸிம் கார்க்கிக்கு எழுதிய கடிதங்களின் தமிழாக்கத்தையும் பெரியார் குடி அரசில் வெளியிட்டார் (எஸ்.வி. ராஜதுரை 1996: 460-462).

ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்ற பெரியார் சோவியத் ரஷ்யாவிற்கும் சென்று நவம்பர் 1932 ஆம் ஆண்டில் இந்தியா திரும்பிய பிறகு, முன்னரே முற்போக்கும், பகுத்தறிவும், சீர்திருத்தமும் இணைந்த இலட்சியங்களைக் கொண்ட சுயமரியாதை இயக்கம், பொதுவுடைமை, சமதர்மச் சித்தாந்தங்களைத் தன் கொள்கைகளோடு இணைத்துக் கொண்டதாக அறிவித்தது. பொதுவுடைமை வாதியாக இருந்த ம. சிங்காரவேலர், சுயமரியாதை இயக்கதின் வளர்ச்சியிலும் பங்கு கொண்டார். சிங்காரவேலரின் பல நூல்களைப் பெரியார் தனது குடிஅரசுப் பதிப்பகம் வாயிலாக வெளியிட்டார்.

பெரியாரின் ஐரோப்பியப் பயணத்திற்குப் பின்னர், சுயமரியாதை இயக்கத்தின் நடவடிக்கைகளில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. யாவரையும் தோழர் என்று அழைக்கும், எழுதும் நடைமுறை சுயமரியாதை இயக்கத்தில் பின்பற்றப்பட்டது. பொதுவுடைமை குறித்த விளக்கக் கட்டுரைகளைப் பெரியார் குடிஅரசில் எழுதினார். 'மே தினம் கொண்டாடுக!' என்று தமிழ் மக்கள் அனைவருக்கும் குடிஅரசு இதழ் மூலமாகக் கோரிக்கை விடுத்தார். தமிழ் நாட்டில் மேதினத்தைச் சுயமரியாதை இயக்கத்தினர் கொண்டாடிப் பொதுவுடைமைக் கொள்கையின் தேவையை மேடைகளிலும் வற்புறுத்தினர்.

71. *''பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும்*
*சேர்ப்போம்*
*புனிதமோடு அதை எங்கள் உயிரென்று காப்போம்''*
(பாரதிதாசன் 1938: 181)

என்ற பாடல் சுயமரியாதை இயக்க மேடைகளில் பெருமளவில் இசைக்கப்பட்டது.

பொதுவுடைமைக் கொள்கையில் புதுவைச்சிவத்திற்கு இருந்த நாட்டம் அவர் பொறுப்பாசிரியராய் இருந்து நடத்திய

புதுவை முரசில் (1930-1932) வெளியான கவிதை, கட்டுரைகளில் இருந்து காணமுடிகிறது. 1932 ஆம் ஆண்டில் வெளியான அவரது ஏழையர் எழுச்சிப்பாடல் என்னும் கவிதைநூல் தறித் தொழிலாளரின் துயரை அம்மண்ணின் பிரச்சினைகளோடு சேர்த்துச் சொன்னது. புதுச்சேரியில் இருந்த மூன்று பெரிய துணி ஆலைகளில் வேலை செய்து வந்த பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களும் அவர்களது போராட்டங்களும் பிரச்சினைகளும் இயல்பாகவே அவர்கள் மேல் சுயமரியாதை இயக்கத்தினரை அக்கறை கொள்ள வைத்தன. 1931 ஆம் ஆண்டில் புதுச்சேரியில் முதன்முதலாகத் தொழிலாளர் மாநாட்டைச் சுயமரியாதை இயக்கத்தினரே முன்னின்று நடத்தினர். அதில் தொழிலாளர் நலன் தொடர்பான பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. பொதுவுடைமைக் கொள்கைகளின் தாக்கத்திற்கு உள்ளாகியிருந்த பாரதிதாசனும், புதுவைச்சிவமும் இக்காலக்கட்டத்தில் தொழிலாளர் பிரச்சினைகளையும், பொதுவுடைமைக் கொள்கையையும் மையமாகக் கொண்ட பாடல்களைப் பெருமளவில் இயற்றினார்கள். 1931ஆம் ஆண்டில் புதுவை முரசில் வெளியான மானிட சக்தி எனும் தலைப்பிலான பாரதிதாசனின் கவிதை பொதுவுடைமைக் கோட்பாட்டின் தத்துவ விளக்கமாய் மிளிர்கிறது (புதுவை முரசு 7.12.1931). 'கம்யூனிசம் என்றால் என்ன?' என்ற தொடர் கட்டுரை 1932-1933 ஆம் ஆண்டுகளில் குடி அரசில் வெளிவந்து பொதுவுடைமை இயக்கக் கொள்கைகளை முதன் முதலாகத் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்தது.

72. *''இன்ப வாழ்வு யாவர்க்கும் பொதுவே''*

(புதுவைச்சிவம் 1945:26 )

என்று தீர்க்கமான முடிவுடன் கூறும் புதுவைச்சிவம். இன்னல் இல்லாமல் இருக்கப் பொதுவுடைமை ஆட்சியே எங்கும் இருக்கவேண்டும் என்றும் அறிவுறுத்துகிறார்.

73. *''புவியின் பொருளைச் சமமே செய்யும்*
*பொதுமை ஆட்சியே,*
*எவரும் எங்கும் இனிதே கொண்டால்*
*இன்னல் ஏதுசொல்?''*

(புதுவைச்சிவம் 1951: 26)

பொதுவுடைமைக் கொள்கையை எளிமையாக்கும் முயற்சியை, 'புவியின் பொருளைச் சமமே செய்யும்' எனும், மேற்கண்ட பாடல் அடிகளில் காணலாம். உழைப்போர், ஏழையர் வாழ்வு என்றுமே விடியவில்லை; எப்போதும் பஞ்சம்; பட்டினி; துன்பம் தாளாமல் குடும்பத்தைக் காக்கச் சொந்த நாட்டை விட்டுப் பல நாடுகளுக்கும் பிழைக்கச் செல்கின்றனர்; விளை நிலங்களெல்லாம் வீணாகப் போய்விட்டனவோ; என்றெல்லாம் தொழிலாளரின் துயரைச் சுட்டிக்காட்டும் புதுவைச்சிவம், இதற்கான காரணமாக,

74. *''கன்னெஞ்ச முதலாளர் செல்வர் என்னும்*
*கடுஞ்சூறை ஏழையரை மோதக் கண்டோம்''*
(புதுவைச்சிவம் 1946:29)

என்றும் சுட்டிக்காட்டுகிறார். 'புண்ணிய நாட்டில் ஏழைகள்', 'பசிநோய்போக்குவீர்' என்பன போன்ற தலைப்புகளில் பொது வுடைமைக் கருத்துக்களைப் பதித்திருக்கும் புதுவைச்சிவம், 'பத்தியம் தவறேல்' என்ற தலைப்பில் ஏழையர்களின் வறுமை நோய்க்கு மருந்தொன்றைக் கூறுகிறார்.

75. *''கதியற்றேங்கும் மக்களது*
*கவலை தீரக் காரல் மார்க்ஸ்*
*புதிய மருந்தொன்றாய்ந்து கண்டார்*
*பொதுவுடைமை அதன் பெயர்தான்''*
(புதுவைச்சிவம் 1946:34)

என்று நேரடியான பொதுவுடைமைப் பிரச்சாரத்தையே மேற்கொள்கிறார். விதியை நம்பாமல் மதியை நம்பியதால் ரஷ்ய நாட்டின் துயர் நீங்கியது என்று கூற வந்த புதுவைச்சிவம்,

76. *''வீர ரஷ்ய நாட்டை நோக்கு !*
*மேல்கீழ் என்ற வாழ்வாங் குண்டோ?*
*விதியைவிட்டே மதிதுணை பெற்றார்! உயர்ந்தார்!''*
(புதுவைச்சிவம் 1945:29)

என்று பொதுவுடைமைக் கொள்கையை ஏற்றதற்காக அந்நாட்டை 'வீர ரஷ்யா' வாகக் குறிப்பிடுகிறார். சுயமரியாதை

இயக்கத்தினரின் பொதுவுடைமைப் பிரச்சாரம் ஒளிவு மறைவின்றி நேரடியாகவே அமைந்திருந்தது. உலக நாடுகள் பலவற்றில் அக்காலச் சூழ்நிலையில் பொதுவுடைமைக் கொள்கை குறித்து அச்சமும் சந்தேகமும் சூழ்ந்திருந்தபோது, தமிழ்நாட்டில் பொதுவுடைமைக் கொள்கையைத் திறந்த மனதுடன் நேரடியாகப் பிரச்சாரம் செய்தது நோக்கத்தக்கது. பாடல் அடிகளில் காரல் மார்க்ஸ், வீர ரஷ்யா என்றெல்லாம் அமைத்திருப்பதிலிருந்து அன்றைய சுயமரியாதை இயக்கத் தினரின் பிரச்சார வேகத்தையும், தன்மையையும் புரிந்து கொள்ளலாம்.[5]

'வறியோன் கண்ட வான்மதி' என்ற தலைப்பிலான புதுவைச்சிவத்தின் கவிதை, ஒரு வறியவன் பிழைப்புத்தேடி மனைவி மக்களைப் பிரிந்து, அலைந்து, வேற்றூரில், இரவில், குளிரில், பசியில் முடங்கி, கையைக் கொண்டு மெய்யது போர்த்தி, நிலவைப் பார்த்துப் புலம்புவதாக அமைக்கப் பட்டிருக்கிறது (புதுவைச்சிவம் 1946: 30 ). வறுமையினால் வேற்றூர் வந்த புலவன் இரவில் குளிரில் தன் மனைவிக்குத் தூதுபோகச் சொன்ன 'நாராய் நாராய் செங்கால் நாராய்' என்னும் புறநானூற்றுப் பாடலை இங்கே பொதுவுடைமைக் கருத்துப் பரவலுக்காகப் புதுவைச்சிவம் கையாண்ட விதமும் நோக்கத் தக்கது.

### தொழிலாளர் நலன்

தொழிலாளர் நலன் பேணுதல் சுயமரியாதை இயக்கக் கொள்கைகளுள் ஒன்றாக இருந்தது. தொழிலாளர்களின் பிரச்சினைகள், நலன்கள், உரிமைகளை வலியுறுத்தும் பல கட்டுரைகள் சுயமரியாதை இயக்க இதழான குடிஅரசில் 1926 ஆம் ஆண்டு முதலே வெளிவந்தன. சுயமரியாதை இயக்கத்தின் சார்பில் நடைபெற்ற தொழிலாளர் மாநாடுகள் பற்றிய செய்திகளும், அவற்றில் சுயமரியாதை இயக்கத் தலைவர்கள் ஆற்றிய உரைகளும் குடிஅரசில் இடம்பெற்று வந்தன. தொழிலாளர் நலனுக்காக உழைப்பது திராவிட இயக்கத்தின்

தலையாய நோக்கம் என்றும், தங்கள் தொண்டு யாவும் தொழிலாளர்களுக்காகவேதான் என்றும் பெரியார் குறிப்பிட்டார். திராவிடர் அனைவரும் சூத்திரர்கள் என்னும் போது தொழிலாளர்கள் மீதும் அந்த இழிவு சுமத்தப்படுவதால், அவ்விழிநிலையைப் போக்குவதே முதல் கடமை என்றும், அதன் பின்னரே வர்க்கப் போராட்டம் குறித்தான விழிப்புணர்வை ஏற்படுத்த முடியும் என்றும் பெரியார் கருதினார்.

தொழிலாளர்களுடைய துன்பம், அடிமைத்தனம், கவலை, குறைகள் நீங்க வேண்டுமானால் முதலாளித்தன்மை என்பது இல்லாமல் போக வேண்டும்; எந்தக் காரணத்தை முன்னிட்டும் தொழிலாளர் நிலை தாழ்ந்திருக்கவும், பாடுபடாத பிரிவினர் உயர்ந்திருக்கவும் ஆதிக்கம் செலுத்தவும் இடம் தராத வகையில் தொழிலாளர் கிளர்ச்சிகள் அமைய வேண்டும்; முதலாளிகளை எதிர்ப்பதை விட முதலாளித்துவத்தைப் பாதுகாக்கும் பார்ப்பனீய மற்றும் அரசியல் ஆதிக்கங்களை எதிர்ப்பதுதான் சரியானது என்று பெரியார் குறிப்பிட்டார். ஆகவே, தற்போதுள்ள போராட்டமுறை வெற்றி பெறாததால் தொழிற் சங்கங்கள் போராட்டங்களுக்கு முதலிடம் தராமல் தொழில் வளர்ச்சிக்கும் பொருள் பெருக்கத்திற்கும் உதவும் அமைப்பு களாக இயங்கவேண்டும் என்றும் ஆக்கப்பூர்வமாகக் கருத்துத் தெரிவித்தார் பெரியார் (வே. ஆனைமுத்து 1974: 1721- 1740).

சுயமரியாதை இயக்க இதழான புதுவை முரசின் பதிப்பாசிரியராக இருந்த புதுவைச்சிவமும், அவ்விதழில் பெருமளவில் எழுதி வந்த பாரதிதாசனும் தொழிலாளர் நலனில் பெரும் அக்கறை செலுத்தினர். தொழிலாளர் உரிமை குறித்தான பல பாடல்கள் புதுவை முரசு இதழில் வெளிவந்தன. புதுவையிலுள்ள மூன்று பெரிய பஞ்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களின் பிரச்சினை குறித்தும் அவ்வப் போது செய்திகள் புதுவை முரசில் இடம்பெற்றன. 1931 ஆம் ஆண்டில் புதுச்சேரியில் நடைபெற்ற முதல் தொழிலாளர் மாநாட்டிலும் பாரதிதாசன், புதுவைச்சிவம் ஆகியோரின் பங்களிப்பு இருந்தது. இது குறித்தான விரிவான செய்திகளைப் புதுவை முரசு இதழ் வெளியிட்டது (புதுவைமுரசு 14.9.1931).

1932 ஆம் ஆண்டில் புதுவை முத்தியால்பேட்டையில் துணி ஏற்றுமதி நின்று போனதன் காரணமாக நெசவாளர்கள் வேலையிழந்து கடுமையாகப் பாதிக்கப்பட்டனர். அவர்களின் துயர நிலையினைப் புதுவைச்சிவத்தின் ஐந்து பாடல்கள் கொண்ட 'புதுவை நெசவுத் தொழில் ஏழையர் எழுச்சிப்பாட்டு' என்னும் சிறு தொகுதி வெளிப்படுத்துகிறது. புதுவைச்சிவத்தின் முதல் வெளியீடும், முதல் கவிதைப் படைப்புமான இந்நூல் தொழிலாளர் நலன் குறித்துச் சுயமரியாதை இயக்கத்தினர் கொண்டிருந்த அக்கறைக்குச் சரியான எடுத்துக்காட்டாக அமைகிறது.

இதே காலக்கட்டத்தில் புதுச்சேரியில் இருந்த மூன்று பெரிய துணி ஆலைகளில் கூலி உயர்வு, வேலைநேரக் குறைப்பு போன்ற பிரச்சினைகளை முன்வைத்து வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. தொழிலாளர்களின் கோரிக்கையை ஏற்காத பல வேளைகளில் ஆலை நிர்வாகமே கதவடைப்புச் செய்தது. மாதக் கணக்கில் நீடிக்கும் இதுபோன்ற போராட்டங்களின்போது தொழிலாளர்களின் துயரினை நேரில் கண்டு அதை வெளியுலகு அறியும் பொருட்டும் அத்துயரினைக் களைவதற்கான தீர்வு வேண்டியும் பல கவிதைகளை இயற்றியுள்ளார் புதுவைச்சிவம்.

77. *''தொழிலாளர் வேலையின்றித் துடிக்கிறார் -*
*பெண்டு பிள்ளை*
*சோகமே உருக்கொண்டு வாடுகின்றார் - மனத்*
*தாபமே கொண்டு வீணில் மாளுகின்றார்.''*

(புதுவைச் சிவம் 1945: 27)

1936 ஆம் ஆண்டில் புதுச்சேரி ஆலைகளில் நிகழ்ந்த தொழிலாளர் போராட்டம் வன்முறையில் திரும்பிப் பெருங் கலவரம் நிகழ்ந்தது. பிரெஞ்சிந்திய அரசாங்கத்தின் இராணுவம் தலையிடவேண்டிய அளவில் நிகழ்ந்த அக்கலவரத்தில் துப்பாக்கிச் சூடு நடத்தப்பட்டுப் பன்னிரண்டு தொழிலாளர்கள் உயிரிழந்தனர். இக்கொடுமையைக் கண்ட புதுவைச்சிவம்,

*78. ''பார்க்கப் பரிதாபமே - மில்லில்*
*பாடுபட்டோர் சேதமே - உளம்*
*வேர்க்கும் அநியாயமே - மக்கள்*
*வீணில் மாண்ட கோரமே''*
( புதுவைச்சிவம் (மொழி பெயர்ப்பு) 2003:10)

என்று வடித்திருக்கும் பாடலில் முதலாளித்துவத்தை மட்டுமின்றிப் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தையும் கடுமையாக மதிப்பீடு செய்துள்ளார். இந்தக் காலக்கட்டத்தில் புதுவையில் நடைபெற்ற அனைத்துப் பொதுக் கூட்டங்களிலும் மேற்குறித்த் துப்பாக்கிச் சூட்டில் உயிரிழந்த தோழர்கள் நினைவாக இப்பாடல் மேடையில் பாடப்பட்டது (கே. வைத்தியநாதன் ஆண்டு இல்லை: 42).

1939 ஆம் ஆண்டு மதுரைச் சீராளா என்னுமிடத்தில் இருந்த சித்தவலசா மில் தொழிலாளர் போராட்டத்தில் துப்பாக்கிச் சூடு நடைபெற்றுச் சில தொழிலாளர்கள் பலி வாங்கப்பட்டதைப் புதுவைச்சிவம் பின்வருமாறு கண்டிக்கிறார்.

*79. ''வழியற்ற சீராளா, மதுரை, சித்த*
*வலசாமில் தொழிலாளர் நன்மை கோரித்*
*தொழில் நிறுத்தஞ் செய்கையிலே, அவர்கட் கன்னார்*
*துப்பாக்கி வேட்டளித்து வறுமை தீர்த்தார்''*
(புதுவைச்சிவம் 1944: 26 )

தொழிலாளர்களின் வறுமை தீர்க்கும் வழி அவர்களின் உயிரை மாய்த்தலே என்றும் ஆதிக்கப் போக்கினை 'வறுமை தீர்த்தார்' என்றும் வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறுவது நோக்கத்தக்கது. நிலத்திலும் கடலிலும் சுரங்கங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களின் பாதிப்பும், தொழிலாளர் நிலையும் அவரது கவிதைகளிலும் எதிரொலித்தன.

*80. ''கன் மலையைப்பிளப்பவரும் கடல் முத்தெடுப் போரும்*
*காடுபல அழித்துநாடு காண்பவரும் அன்னார்.*

*இன்னும் பல் எழில் நலங்கள் உலகுபெற வேண்டி*
*இன்னுயிரைப் பொருட் படுத்தா துழைப்பவரும் அன்னார்*
*பன்னுவதோ அத்தோழர் தோள்வலியின் மேன்மை*
*பாருலகம் அதையறியா திருப்பதென்ன நேர்மை?''*
(புதுவைச்சிவம் 1946:28)

சுயமரியாதை இயக்கத்தில் 1933 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட சமதர்மப் பிரிவு சுயமரியாதை சமதர்மக் கட்சி என்று பெயர் மாற்றப்பட்டுப் பொதுவுடைமைக் கொள்கையைப் பரப்பும் வேலை முன்னெடுத்துச் செல்லப்பட்டது. இந்தியாவில் இயங்கி வந்த பொதுவுடைமைக் கட்சி பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தால் 1934 ஆம் ஆண்டில் தடை செய்யப்பட்டது. இதனையடுத்து, சுயமரியாதை இயக்கத்தின் பொதுவுடைமைப் பிரச்சாரமும் அரசாங்கத்தின் கண்டனத்திற்கு ஆளாக நேரிட்டதால், சுயமரியாதை இயக்க இதழ்கள் தடை செய்யப் பட்டு அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டு அடக்கு முறைக்கும் ஆளாயின. பொதுவுடைமைப் பிரச்சாரத்தால் இயக்கமே தடை செய்யப்படும் நிலையை விரும்பாத பெரியார், பொதுவுடைமைப் பிரச்சாரத்தை நிறுத்திக் கொள்ள முடிவு செய்தார். இதற்கு முன்னரே பொதுவுடைமையை அடையும் வழியாகச் சாதிபேதமற்ற சமதர்மத்தை வலியுறுத்தி வந்ததால், இந்நிகழ்வுக்குப் பிறகு வழக்கமான சாதியொழிப்பையும் பார்ப்பனிய ஆதிக்க எதிர்ப்பையுமே சுயமரியாதை இயக்கத்தினர் பிரச்சாரம் செய்துவந்தனர் (எஸ்.வி. ராஜதுரை 1996:231 - 244, 319 - 325).

ஆனால் பிரஞ்சிந்தியாவில் இருந்து பொதுவுடைமைக் கருத்துக்களைப் பரப்பத் தடை ஏதும் இல்லாததினால் பாரதி தாசனும், புதுவைச்சிவமும் பொதுவுடைமைக் கருத்துக்களைத் தங்கள் கவிதைகளில் தவிர்க்காதது மட்டுமின்றி, மிகுதியும் பொதுவுடைமைக் கொள்கையை வரவேற்கும் கவிதைகளைப் படைத்தனர். தொழிலாளர் பிரச்சினைகள் பிரெஞ்சிந்தியா விலும், பிரிட்டிஷ் இந்தியாவிலும் தொடர்ந்து வலுத்தமையால்

பாரதிதாசனும், புதுவைச்சிவமும் தங்கள் பிரச்சாரத்தினை வன்மையாக மேற்கொண்டனர். 1942ஆம் ஆண்டில் பொது வுடைமை இயக்கத்தின் மீதான தடை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தால் விலக்கிக் கொள்ளப்பட்டது. பொதுவுடைமை இயக்கம் தனியே செயல்படத் துவங்கியது (எஸ்.வி. ராஜதுரை 1996: 717). சுயமரியாதை சமதர்மக் கட்சியில் முன்பிருந்து, பொதுவுடைமை இயக்கத்திற்குப் பிரிந்து போனவர்கள் சுயமரியாதை இயக்கத்தினரைக் கடுமையாக விமர்சனம் செய்துவந்தனர். அவர்களுக்குப் பதில் கூறும் விதத்திலும், அதே நேரம் பொதுவுடைமைக் கொள்கையைச் சுயமரியாதை இயக்கம் விட்டுவிடவில்லை என்ற நோக்கிலும் சாதிபேதங்களற்ற சமத்துவச் சமுதாயமே, பொருளாதாரச் சமத்துவமான பொது வுடைமைக்கு வழி என்ற கருத்திலும் புதுவைச்சிவம் பல பாடல்களை இயற்றியுள்ளார்,

81. *''பலபல பூசல்கள் பிணக்குகள் வளர்த்துமே*
*பகுத்தறிவை மறுத்திடும் நீங்கள்*
*உலகினில் வாழ் தொழிலாளரே நீரெலாம்*
*ஒன்று சேருங்களென்றால் நகையாரோ''*
(புதுவைச்சிவம் 1945:33)

என்றும்,

82. *'' உன்றன் நாட்டிலே பேதம் ஒழித்திட மறுத்து நீ*
*உலகினை ஒன்றுபடச் சொல்வதேன் தோழா''*
(புதுவைச்சிவம் 1945: 34)

என்று எழுப்பும் கேள்வியும் இப்பின்னணியில் அமைந்ததே.

தன் கருத்துக்குச் சான்றாகப் புதுவைச்சிவம் காரல் மார்க்சின் கருத்தையே முன்வைத்துப் பொதுவுடைமை இயக்கத்தினரைச் சுயமரியாதை இயக்கத்தின் பக்கம் திருப்ப முனையும் முயற்சி நோக்கத்தக்கது. சமுதாயத்தில் புரையோடிப் போன வறுமையைத் தீர்க்கப் பொதுவுடைமை என்னும் மருந்தைக் காரல் மார்க்ஸ் கண்டார் என்றும், ஆனால் அதற்குப் பகுத்தறிவு சார்ந்த வழிமுறையை மேற்கொள்ளுதலே அம்மருத்துக்குச் சரியான பத்தியம் என்றும் காரல் மார்க்ஸ் கருத்தாகப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*83. ''கதியற் றேங்கும் மக்களது கவலை தீரக் காரல் மார்க்ஸ்*
*புதிய மருந்தொன் றாய்ந்து கண்டார்;*
*பொதுவுடைமை அதன் பெயர் தான்''*

*83. ''தூய உள்ளம் அன்பிரக்கம் தோன்ற வேண்டும்;*
*இவையன்றித்*
*தீய சாதி பேதங்கள் சிறுமை விளைக்கும் வழக்கங்கள்*
*ஆய மதங்கள் சாத்திரங்கள் அறிவைப் போக்கும் விதியாவும்*
*மாயவேண்டும்; மக்களது மனத்தில் தெளிவு மிக வேண்டும்;*
*பொதுவுடைமை மருந்தினுக்குப் புகன்ற பத்யம் இதுவேயாம்.''*
(புதுவைச்சிவம் 1946: 34)

பகுத்தறிவை நிலை நாட்டுவதே சமதர்மத்திற்கான முதல்படி என்ற சுயமரியாதை இயக்கக் கருத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்த புதுவைச்சிவம் மாற்று எண்ணத்தினால் பிரிந்து சென்ற இயக்கத் தோழர்களுக்கும் பொதுவுடைமை இயக்கத்தினர்க்கும் அதையே வலியுறுத்துகிறார்.

*84. ''வாய்ந்திடும் பேத விரோதம் வளர்த்திடும்*
*வைதிகம் முதன்முதலில் தீர்த்திடுவீர்*
*சூழ்ந்திடும் சமத்துவம் யாவரும் கூடியே*
*சுலபமாய்ச் சமதர்மம் அமைத்திடலாம்''*
(புதுவைச்சிவம் 1945: 33 )

என்று சமதர்மச் சமுதாயத்தை, பிரிந்து சென்ற யாவரும் ஒன்றாய்க் கூடினால் சுலபமாக அமைத்திடலாம் என்று அழைப்பு விடுக்கிறார்.

*85. ''சமதர்மமே யாவருக்கும் தகுந்த நீதியாகும் - உள்ள*
*சாதி பேதம் தீரும் - மிகத் தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்கள்*
*எனவே இன்றிப் போகும் - அமைதியுறும் பொதுமை*
*வாழ்வின்*
*அருமை காணலாகும் - உயர் ஆட்சி தோன்ற லாகும்''*
(புதுவைச்சிவம் 1951: 37)

என்று முடிந்த முடிபாகக் கொண்ட புதுவைச்சிவத்தின் ஒவ்வொரு கவிதைத் தொகுதியிலும் தொழிலாளர் பகுதி என்று தனியே ஒரு பிரிவு இருப்பது தொழிலாளர் நலனிலும், சமதர்மக்

கருத்துகளிலும் பொதுவுடைமைக் கொள்கைகளிலும் அவருடைய ஈடுபாட்டைக் காட்டுவதாக அமைகிறது. 'தமிழர் தன்மதிப்பு பாடல்கள்' என்னும் நூலில் தொழிலாளர் என்னும் பிரிவில், தொழிலாளர் நிலை, வாழ்வழிக்கும் நச்சு, துயர் தொலைவதெந்நாள், காரணம் எது, சுகவாழ்வெங்கே? தோழனே கேள், மதத்தில் மோகமேன்?, கடவுள் புரட்டு, திராவிடத் தொழிலாளர்க்கு, மீட்சிக்குழைப்பாய் தோழா, இன்ப வாழ்வு பெறுவோம் ஆகிய தலைப்புகளில் பதினோரு பாடல்களும், 'மறுமலர்ச்சிக் கவிதைகள்' நூலில் தொழிலுலகம் என்னும் பிரிவில் தொழிலாளர் மேன்மை, புண்ணிய நாட்டில் ஏழைகள், வறியோன் கண்ட வான்மதி, பசி நோய் போக்குவீர், இருபெரிய குற்றவாளிகள், தோற்றுவீர் சமதர்மம், பத்தியம் தவறேல், திருந்துக ஆகிய தலைப்புகளில் எட்டுப்பாடல்களும், தமிழிசைப்பாடல்கள் கவிதைத் தொகுதியில் கடமைப் பகுதி என்னும் பிரிவில் தலைப்புக் குறிக்கப் பெறாமல் பதினைந்து இசைப்பாடல்களும், தன்மதிப்புப்பாடல் கவிதைத் தொகுதியில் மொத்தமுள்ள நாற்பத்தொரு பாடல்களில் முதல் நான்கு பாடல்கள் போக ஏனைய முப்பத்தேழு பாடல்களும் ஆக மொத்தம் புதுவை அரசு வெளியிட்ட புதுவைச்சிவம் கவிதைகள் தொகுதியில் எழுபத்தொரு பாடல்கள் தொழிலாளர் நிலை குறித்தனவாகவே உள்ளன.

பின்னிணைப்பில் தொழிலாளர் நலன் சார்ந்தவையாக முப்பத்தேழு பாடல்களும், சமத்துவம், பொதுவுடைமை சார்ந்ததாகப் பதினாறு பாடல்களும் மொத்தம் ஐம்பத்து மூன்று பாடல்கள் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு சில பாடல்களில் ஒவ்வொரு அடியிலும் அல்லது பத்தியிலும் திராவிட இயக்கத்தின் ஒவ்வொரு கொள்கையை வலியுறுத்தி இருப்பதால் இத்தனைப் பாடல் என்று சரியாக வரையறுக்க முடியாத தன்மையும் ஏற்படுகிறது. பொதுவுடைமை இயக்கம் தமிழ்நாட்டில் காலூன்றாமல் இருந்த அக்காலக்கட்டத்தில் பொதுவுடைமைக் கருத்துக்களைப் பெருமளவில் கவிதையில் வடித்த கவிஞர்களாகப் பாரதிதாசனும், புதுவைச்சிவமும் இருந்தனர்.

# வருணாசிரம எதிர்ப்பு

சாதியப் படிநிலைகள் இல்லாதிருந்ததாகக் கூறப்படும் தமிழர் சமுதாயத்தில் மனு தருமம், வருணாசிரம தரும முறைகளால் சாதியமுறைகள் திணிக்கப்பட்டன. சாதி அமைப்பு முறை உருவாகி விட்ட பிறகு பன்னெடுங்காலம் வரை சாதிக்கொடுமைகள் குறித்தான தகவல்களைத் தமிழ் இலக்கியங்கள் மூலமாகவோ, மன்னர்களின் வரலாறு மூலமாகவோ சரிவர அறியமுடியவில்லை. ஐரோப்பியர் வரவுக்குப் பிறகு அவர்களது ஆட்சியின் போதுதான் போக்குவரத்து, எழுத்துத்துறைகள் முன்னேற்றமடைந்த பின்னர் ஒவ்வொரு பகுதியைப் பற்றிய வரலாறும் வெளியில் தெரிய ஆரம்பித்தது. இந்தியாவில் எத்தனை சாதிகள் இருக்கின்றன என்று பட்டியல் இட்டு வெளியிட்டது பிரிட்டிஷ் அரசாங்கம்.

சாதிப் பிரிவுகளைப் பற்றியும், சாதிக் கொடுமைகளைப் பற்றியும், அறிந்ததினால்தான் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல சாதிச்சங்கங்கள் தொடங்கப்பட்டன. ஒவ்வொரு சாதியும் தங்கள் சமூக முன்னேற்றத்திற்குப் பாடுபட்டுக்கொண்டிருந்த வேளையில் பார்ப்பன சாதி தவிர்ந்த ஏனைய சாதிகளை ஒரே அமைப்பின் கீழ் திரட்டியது, 1916 ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்'. அவ்வமைப்பு தென்னிந்தியப் பார்ப்பனரல்லாதாரிடையே பெரும் விழிப்புணர்வையும், எழுச்சியையும் ஊட்டிச் செல்வாக்கும் பெற்றது. சிறுவயது முதற்கொண்டே சாதி மதங்கள் மீது நம்பிக்கையற்றிருந்த பெரியார் பொதுவாழ்வில் ஈடுபட்ட பின்னர்ச் சாதி குறித்து மிகக் கடுமையான விவாதங்களை எழுப்பினார். சாதியும், மதமும் தான் திராவிட சமுதாயத்தினரை இழிநிலைக்குக் கொண்டு வந்ததாகப் பெரியார் குறிப்பிட்டார்.

*''....திராவிட சமுதாயத்தினர் மானங்கெட்ட சமுதாயத்தினராய், சூத்திரராய் 4 ஆம் 5ஆம் சாதியாய், வேசி மக்கள் தாசி மக்கள் அடிமை மக்களாய், கல்வி செல்வம் மானவாழ்வு உழைத்த கூலி கூட இல்லாமல் மிருகங்களிலும் கேவலமாய், உரிமை இழந்து, மனிதத் தன்மை இழந்து, ஈன வாழ்வில் அழுத்தப்பட்டுக் கிடப்பதற்குக் காரணம் இந்துவாய் இருப்பதல்லாமல் வேறு என்ன?''* (வே. ஆனைமுத்து 1974: 31-32)

என்ற பெரியாரின் கேள்வி அன்றிருந்த தமிழ்ச் சமுதாயத்தின் நிலையைக் குறித்ததாகும். இந்த அளவிற்குத் தன்மானம் இழந்த நிலையைத் தமிழ்ச் சமுதாயம் அடைவதற்குக் காரணம் சாதியை ஏற்றுக் கொண்டதே என்றார் பெரியார். சாதி ஒழியவேண்டு மானால் சாதிக்கு ஆதாரமான வருணாசிரம அமைப்பும், சாதியை நிலைநாட்டும் சாதித் தொழிலும் ஒழிய வேண்டும் என்பதோடு, வகுப்புரிமை, மக்கள் எண்ணிக்கையின் விகிதா சாரப்படி இடஒதுக்கீடு அளிக்கப்படவேண்டும் என்றும் அவர் கோரினார். சாதி எதிர்ப்பைக் காட்டுவதற்காக 1927 ஆம் ஆண்டிலேயே மனுநீதியைக் கொளுத்தினார் பெரியார். சாதியை ஒழிப்பதற்காகவே, வகுப்புவாத நிறுவனமான காங்கிரசை விட்டு விலகிச் சுயமரியாதை இயக்கம் தொடங்கிய தாகவும் அவர் தெரிவித்தார் (வே. ஆனைமுத்து 1974: XX-LVII, 104).

சாதி வேறுபாடுகளும், வகுப்பு வெறுப்புகளும் ஒழிய வேண்டும் என்பதே சுயமரியாதை இயக்கத்தின் கொள்கை என்றும் சாதி பேதப் பிரிவுகளை ஒழிப்பதே திராவிடர் கழகத்தின் கொள்கை என்றும் பெரியார் அறிவித்தார். சாதி பேதங் களையும், வருணாசிரம தருமத்தையும் ஆதிகாலந் தொட்டே தமிழர்கள் எதிர்த்து வந்தனர் என்றும் அவர் கூறினார். இடைக் காலங்களில் மங்கிப்போன அவ்வுணர்வைத் திராவிட இயக்கம் தனது போராட்டக்களமாகக் கொண்டிருப்பதாகவும், சாதியை ஒழிக்கும் இக்கடினமான வேலைக்கு நீண்ட தூரம் பாடுபட

வேண்டுமென்றும், அதற்கு மிகப்பெரிய பிரச்சாரம் அவசியமென்றும் குறிப்பிட்ட பெரியார், அதற்காகத் திராவிட இயக்கத்தினர் துணிவும், விடாமுயற்சியும் கொண்டு உழைக்க வேண்டும் என்றும் அழைப்பு விடுத்தார் (வே. ஆனைமுத்து 1974: 9,645).

இந்த அழைப்பைத் திராவிட இயக்கக் கவிஞர்கள் தலைமேல் கொண்டனர். சுயமரியாதை இயக்கக் காலந் தொட்டே திராவிட இயக்கக் கொள்கைகளில் ஈடுபாடு கொண்டிருந்த பாரதிதாசனும் புதுவைச் சிவமும் பெரியாரின் சாதி ஒழிப்புப் பிரச்சாரத்திற்குத் தங்களை முழு மனதுடன் உட்படுத்திக் கொண்டனர். 1929 ஆம் ஆண்டு பிப்ரவரி செங்கல்பட்டில் நடைபெற்ற சென்னை மாகாண சுயமரியாதை முதல் மாநாட்டில் இயற்றிய தீர்மானத்தின்படி சுயமரியாதை இயக்கத் தலைவர்கள் தங்கள் பெயர்களுக்குப் பின்னால் இருந்த சாதிப் பட்டத்தைத் துறந்தனர் (குடிஅரசு 3.3.1929). புதுவைச்சிவம் 1930 ஆம் ஆண்டில் புதுவை முரசு இதழில் எழுதத் துவங்கிய தொடக்க நிலையிலிருந்தே தனது பெயருடன் சாதிப்பட்டத்தைச் சேர்க்கவில்லை.[6]

வேதமோ அல்லது வலிந்து புகுத்தப்பட்டதோ, எந்த அடிப்படையாயினும் சாதி வேறுபாடு களையப்படவேண்டும் என்பதில் சுயமரியாதை இயக்கத்தினர் உறுதியாக நின்றனர். சனாதன தர்மமும் சாதிய தர்மமும் ஒன்றே என்று வலியுறுத்திய அவர்கள், அவை இரண்டும் வேவ்வேறு என்று யங் இந்தியா (Young India) இதழில் மகாத்மா காந்தி எழுதியதைக் கடுமையாக எதிர்த்தனர். மேலும் பரம்பரைத் தொழில்களை அடிப்படை யாகக் கொண்ட வருணாசிரமத்தில் நான் நம்பிக்கை உள்ளவன் என்று யங் இந்தியாவில் காந்தி எழுதியதைக் கண்டித்து, 'காந்தியார் கக்கும் விஷம்' என்ற தலைப்பில் புதுவைமுரசில் தலையங்கக் கட்டுரை ஒன்று வெளியானது (புதுவை முரசு 7.12.1932). புதுவைமுரசில் இடம்பெற்ற சாதி, மத, நிற ,தேச வெறிகள் ஒழிவது எப்படி? போன்ற சாதிக் கொடுமை, சாதி ஒழிப்பு தொடர்பான பல கட்டுரைகள், கவிதைகள்,

துணுக்குகள், விகடங்கள், சுயமரியாதை இயக்கத் தினரின் சாதி, மத ஒழிப்புச் செயல்பாடுகளுக்குச் சான்றாக அமைகின்றன (புதுவை முரசு 20.7.1931).

**சாதி எதிர்ப்பு**

86. *''மிக்குயர்ந்த சாதி கீழ்ச்சாதி என்னும்*
*வேற்றுமைகள் தமிழ்க்கில்லை, தமிழர்க்கில்லை''*
(பாரதிதாசன் கவிதைகள் : 1960: 32).

என்பதே திராவிட இயக்கத்தின் முழக்கமாக இருந்தது.

சாதியைப் பற்றிக் கூற வந்த புதுவைச்சிவம், பெரியாரின் போதனைகளை முதலில் கூற முனைகிறார். 'பிறவியில் யாவரும் ஒன்றே இழிவும் இல்லை' என்றும், வேதம், மனுநீதி ஆகியவற்றைக் காட்டிச் சாதியை வற்புறுத்தினால் அப்படிப்பட்ட அறங்கள் அழிய வேண்டும் என்றும் கூறுகிறார். உலக நாடுகளில் எங்கும் இல்லாமல் நம்நாட்டில் மட்டும் இக்கொடுமை உள்ளதென்றும், சாதிபேதம் என்ற சிறுசெயலை விட்டொழிப்பதுதான் தன்மதிப்பை ஒளிபெறச் செய்யும் வழி என்றும் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் 'பெரியார் பெருந்தொண்டு' நூலில் பெரியாரின் கூற்றாகக் கவிதை வடித்திருக்கிறார் (புதுவைச்சிவம் 1944: 14 - 16).

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற வள்ளுவரின் கொள்கையையும், அதை ஏற்றுக் கொண்ட பெரியாரையும் பின்பற்றி, 'பிறவியில் மானிடர் யாவரும் சமமே' (புதுவைச் சிவம் 1945:9) என்று உறுதிபடக் கூறும் புதுவைச்சிவம், நம் நாட்டில் மட்டுமே இருக்கும் இச்சாதிப்பிரிவு நான்காயிரம் என்று கூறுகிறார்.

87. *''ஞாலத்திலில்லாத பேதங்கள் நாம் கொண்டோம்*
*நாலாயிரம் சாதி எங்குண்டு?''*
(புதுவைச்சிவம் 1945 : 33)

எல்லோரும் சமம் என்ற பகுத்தறிவார்ந்த தன்மையை மறுப்பவர்களைப் பற்றிக் கடுமையாக மதிப்பிடுகிறார் புதுவைச்சிவம்.

*88. ''எல்லோரும் சமமே இலையொரு பேதமே*
*இதை மறுப்போர் அறிவிலாத ஜென்மமே''*
(புதுவைச்சிவம் 1950: 17)

என்று கூறும் புதுவைச்சிவம்,சாதி என்பது அறிவை மாய்க்கின்ற ஆரியரின் போதனை என்றும் குறிப்பிடுகிறார்.

*89. ''ஆரிய போத மது வருந்தாதே*
*அறிவினை மாய்க்கும் அதை விரும்பாதே''*
(புதுவைச்சிவம் 1945: 9)

என்று அறிவுறுத்துகின்ற புதுவைச்சிவம், 'திருந்துவாய் தமிழா' என்ற தலைப்பிலான கவிதையில்,

*90. ''தீயதோர் சாதிபேதம் தீண்டாமை மூடக்கொள்கை*
*தேசத்தில் நிலைக்க வைத்தாய்''*
(புதுவைச்சிவம் 1945: 37)

என்று கூறி அதற்கான காரணமாக,

*91. ''பண்டைய தமிழர்களை நீதான்*
*பகைவராய்க் கருதிவிட்டாய் - உன்றன்*
*சிண்டினைப் பிடித்தாட்டும் - பகையைத்*
*தெய்வமாய்க் கருதிவிட்டாய் என்தமிழா''*
(புதுவைச்சிவம் 1945: 37)

என்று, மனிதரில் ஒரு பிரிவினரை, தெய்வமென ஏற்றதாலேயே தமிழரின் வாழ்வு அழிந்தது, சாதிச் சண்டைகளும் பல நடந்தன என்று குறிப்பிட்டு, இந்நிலை மாற,

*92. ''சாதி பேதங்கள் வீழ்த்துவோம் நாமே*
*சமமுடன் யாவரும் வாழ்ந்திடுவோமே''*
(புதுவைச்சிவம் 1951: 12)

என்றும் , இதனால் நிந்தனைகள் தீரும், வெந்துயர் மாறும், நேரிய வாழ்வினை நாமடைவோம் என்றும் தமிழினத்திற்கு வேண்டுகோள் விடுக்கிறார்.

புதுவைச்சிவம் தனது பல கவிதைத் தொகுப்புகளிலும் சாதி பேதப்பகுதி என்று தனி ஒரு பிரிவையே ஒதுக்கி அதில் பல கவிதைகள் இடம்பெறச் செய்திருக்கிறார். 1945 ஆம் ஆண்டில் வெளியான தமிழர் தன்மதிப்புப் பாடல்கள் நூலில் சாதிபேதப் பகுதி என்ற பிரிவில் பேதம் விடுவாய்-I, பேதம் போக்குவீர், வீண்பேதம் விடுவாய், பேதம் விடுவாய்-II, ஆய்ந்து பார்ப்பீர், தீண்டாமை ஒழிக, நீ சூத்திரனா, ஆகிய தலைப்புகளில் ஏழு பாடல்களும், 1950 ஆம் ஆண்டில் வெளியான தமிழிசைப் பாடல்கள் நூலில் சாதிபேதப்பகுதி பிரிவில் தலைப்பிடப் படாமல் ஐந்து பாடல்களும், 1951 ஆம் ஆண்டில் வெளியான தன்மதிப்புப் பாடல் நூலில் பாட்டு ஐந்து முதல் பாட்டு ஒன்பது வரையிலான தலைப்பிடப்படாத ஐந்து பாடல்களும் ஆக மொத்தம் பதினேழு பாடல்கள் சாதியைத் தீவிரமாக மறுக்கும் நோக்கில் அமைந்துள்ளன. இவையேயன்றி, பெரும்பாலான பாடல்களிலும் சாதி மறுப்புக் கருத்துக்களை அங்கங்கே பரவலாகக் காணமுடிகிறது. இளமைக்காலம் முதற்கொண்டே சாதி குறித்து நம்பிக்கையற்றிருந்தவராக இருந்த புதுவைச் சிவம், சாதி ஒழிப்பிற்காகவும், இயக்க வளர்ச்சிக்காகவும் பெருமளவில் முனைந்து நின்றதையும், அதற்காகக் கவிதை யியலை முடிந்தவரை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார் என்று குறிப்பிடுவதும் பொருத்தமாகவே அமையும்.

### தீண்டாமை எதிர்ப்பு

நாகரிகம் அடைந்த சமுதாயங்களில் சாதியமும் தீண்டாமையும் பழமைவாதமாகவே கருதப்படுகின்றன. உலக நாடுகளைப் பொறுத்தவரையில், சாதியம், இந்தியாவிலும் ஒரு சில தெற்காசிய நாடுகளிலும் நிலவி வருகிறது. மனிதனே மனிதனை ஒதுக்கும் தீண்டாமை எனும் பெருந்தீமையும், சாதியமும் மேற்கத்திய நாடுகளில் இல்லாது போனாலும் அங்கும் பல நாடுகளில் நிறத்தை அடிப்படையாகக் கொண்ட இனவெறி இன்றும் இருந்து வருகிறது. அதே நேரம் உலக

நாடுகளின் அமைப்புகளில் இனவெறிக்கான தீர்வு விவாதப் பொருளாக எடுத்துக் கொள்ளப்படும் அளவில் சாதியம் என்பது இதுவரை விவாதிக்கப்படவில்லை. சாதியத்தையும் தீண்டாமைக் கொடுமையையும் மேற்கத்திய நாடுகள் புரிந்து கொள்ளும் வகையில் இதுவரை எடுத்துச் சொல்லப் படவில்லை என்ற கருத்து 2001 ஆம் ஆண்டில் தென்னாப்பிரிக்காவில் ஐக்கிய நாடுகள் சபை நடத்திய இனவெறியை எதிர்க்கும் அனைத்துலக மாநாட்டின் போது இந்தியாவின் சமூக அமைப்புப் பிரதிநிதி களால் எழுப்பப்பட்டது (தினமணி 20.6.2001).

இதற்கு 76 ஆண்டுகளுக்கு முன்பு தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் இழிவாய் நடத்தப்படுவதாகக் கூறி 11.10.1925 ஆம் நாளன்று இந்தியாவெங்கும் கண்டன நாள் கொண்டாடி யதைப் போலிக்கண்டனம் என்றும் இக்கண்டன தினத்தால் ஒருநாள் பாழானதுதான் பலன் என்றும் பெரியார் மதிப்பிட்டார். சொந்த நாட்டிலேயே கோடிக்கணக்கான சகோதரர்களைத் தீண்டாதார் என்று இழிவுபடுத்திக் கொண்டே வெளிநாட்டில் இழிவுபடுத்தப்படும் இந்தியர்களுக்காகக் கண்டனம் தெரிவிப்பதைப் போலியானது என்றே அவர் கருதினார்.

தீண்டாமை என்கின்ற பெயரால் மக்களை மக்களே இழிவு செய்வதைப் போல உலகத்தில் கொடுமை, வேறெதுவும் இல்லை; இந்நிலை, இந்தியாவைத் தவிர வேறெங்கும் இல்லை என்றார் பெரியார். பன்னெடுங்காலமாகத் தாழ்த்தப்பட்டோர் மீது சுமத்திவந்த கொடுமைகள் இருபதாம் நூற்றாண்டிலும் தொடர்ந்திருந்தன. தீண்டப்படாதவர்கள் என்னும் நோக்கில் ஒரு சில சாதியினர், மனிதத்தன்மைக்கும் அப்பாற்பட்ட கொடுமை களுக்கு ஆளாக்கப்பட்டிருந்தனர். மேலும், அவர்களைக் குறிப்பிடுவதற்கு வழக்கத்தில் இருந்து வந்த சண்டாளர்கள், பாவிகள், பஞ்சமர்கள், புலையர்கள் என்ற பெயர்களே அவர்கள் எப்படி நடத்தப்பட்டனர் என்பதைப் புலப்படுத்தும் வகையில் அமைந்திருக்கின்றன.

இத்தகைய இழிவான தன்மைக்குத் தாழ்த்தப்பட்ட மக்கள், கடவுளாலேயே அப்படிப் பிறப்பிக்கப்பட்டவர்கள் என்று

கூறும் வேத புராண சாஸ்திரங்களும் மதமும் தான் காரணம் என்று பெரியார் கருத்துத் தெரிவித்தார். இப்படிக் கூறும் இவற்றின் மீது நம்பிக்கையும் மத நம்பிக்கையும் கடவுள் நம்பிக்கையுமே தாழ்த்தப்பட்டோரின் இழிவு தொடரக் காரணங்கள் என்று கூறிய பெரியார், இந்த இழிவு நீங்க வேண்டுமானால் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மானமும் சுயமரியாதை உணர்வும் ஏற்பட வேண்டும்; தீண்டாமையும் சாதியும் அழிய வேண்டுமானால் மதத்தை அழித்தாக வேண்டும் அல்லது மதத்தைவிட்டு நீங்கவேண்டும்; தாழ்த்தப்பட்ட மக்கள் இனி யாரையும் சாமி என்றழைக்கக் கூடாது; மதத்திற்காகவும் கடவுளுக்காகவும் கஷ்டங்களையும் இழிவுகளையும் பொறுத்துக் கொண்டிருக்கக்கூடாது; மாடு தின்பதால் இழிவு என்பதை ஏற்கக்கூடாது என்றெல்லாம் எடுத்துரைத்தார். மேலும், தாழ்த்தப்பட்ட மக்கள் தன்மான உணர்ச்சி பெற்றுச் சரிசமம் உள்ள மனிதனாக வேண்டும்; உடைமைகளைச் சரிசமமாக்கிக் கொள்ளவேண்டும்; சமூகச் சமத்துவம் பெறவேண்டும்; அதற்குக் கல்வியிலும் திறமையிலும், செல்வாக்கிலும் ஒற்றுமையிலும் மற்றவர்களைப் போலச் சமநிலையை அடைய வேண்டும்; பொருளாதாரத்தில் வஞ்சிக்கப்படுவதில் இருந்து விடுதலை பெற்றாக வேண்டும் என்றும் அறிவுறுத்திய பெரியார், ஒட்டுமொத்தமாக, தாழ்த்தப் பட்டோருக்கு மனித சுதந்திரம் வேண்டும் என்று குறிப்பிட்டார். தாழ்த்தப்பட்டோர் குறித்த அன்றைய அனைத்து நிலை களையும் விளக்கும் ஒரு வார்த்தையாக மனித சுதந்திரம் என்பதைக் கொள்ளலாம் (வே. ஆனைமுத்து 1974: XIX, 54-99).

தீண்டாமையை எதிர்க்கும் வகையில் சுயமரியாதை இயக்க மாநாடுகளில் தீர்மானங்கள் இயற்றப்பட்டன. 1929 ஆம் ஆண்டில் செங்கல்பட்டில் நடைபெற்ற சென்னை மாகாணச் சுயமரியாதை முதல் மாநாட்டில் 'தாழ்த்தப்பட்டோருக்குச் சம உரிமை கொடுத்துத் தீண்டாமை என்பதை ஒழிக்க வேண்டுமென்று' தீர்மானம் நிறைவேற்றப்பட்டது (திராவிடன் 21-2-1929). இதே காலத்தில் சாதிப்பிரிவினைகள் வேண்டு மென்றும், மனுதர்மம் வேண்டுமென்றும் கூறும் மாநாடுகளும்

நடைபெற்றன (வே. ஆனைமுத்து 1974: XXXXI, 59 - 96). இப்படிப்பட்ட தீவிரப் பழமை வாதங்கள் சூழ்ந்த நிலையில்தான் சுயமரியாதை இயக்கம் அதை எதிர்த்துப் போராடும் நிலையை மேற்கொண்டது. இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதில் அவ்வியக்கப் படைப்பாளிகளின் தீவிரமான பங்களிப்பு அன்றைய சமுதாயச் சூழ்நிலையின் அடிப்படையில் உணரப்பட வேண்டியதே.

தென்கிழக்கு ஆசியாவில், குறிப்பாக இந்தியாவில் மட்டுமே மிக அதிக அளவில் இருக்கின்ற தீண்டாமை என்னும் போக்கை,

*93. ''தீண்டாமை என்னுமொரு பேய் - இந்தத்*
*தேசத்தினில் மாத்திரமே திரியக் கண்டோம்*
*கூண்டோடு மாய்வதறிந்தும் - இந்தக்*
*கோணலுற்ற செயலுக்கு நாணுவதில்லை - நாம்''*
(பாரதிதாசன் 1960 : 202)

என்று கண்டனம் செய்வதன் மூலம் திராவிட இயக்கத்தினரின் கருத்தை வரையறை செய்துள்ளார் பாரதிதாசன்.

மக்களின் சரிசமமான வாழ்க்கையில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று வகுத்திருப்பது நியாயமில்லை என்று கூறும் புதுவைச்சிவம், இந்தப் பேதங்களும் பிரிவுகளும் அழிந்திடாமல் சுக வாழ்வு என்பது இல்லை என்கிறார். பாழும் பேதங்கள் ஏழை மக்களையே பாழ் நிலையடைய வைக்கின்றன என்றும், இத்தகைய பேதங்களைத் தீர்க்காமல் அரசாங்கம் செயல் படுவதும் பேதங்கள் ஆண்டவனால் தோற்றுவிக்கப்பட்டவை என்று கூறுவதும் நியாயம்தானா என்றும் கேள்வி எழுப்புகிறார் (புதுவைச்சிவம் 1951: 11-14). ஏழை மக்களின் முன்னேற்றத் திற்கான வழியே பிறவி பேதம் பேசாதிருப்பதுதான் என்று வலியுறுத்தும் புதுவைச்சிவம்,

*94. ''பொல்லாத தீண்டாமை யொன்றையும்*
*புகன்றாரிந்த நாட்டில்!*

*நில்லாத வாதம்! நிறைபுவியிகழும்*
*நீசச் செயலிதை விடுவீரிப்போதே!''*

(புதுவைச்சிவம் 1950: 18)

என்று பெரியாரின் போதனைகளைக் கவிதை வடிவில் எளிமையாக வழங்குகிறார். 'பிறவியில் மானிடர் யாவரும் சமமே' என்ற கருத்தைப் பல கவிதைகளிலும் வலியுறுத்தும் புதுவைச்சிவம்,

95. *''தீண்டாமை எனும் பழிச் சொல்லால் - இந்தத்*
*தேசம் உருக்குலையலாமோ?''*

(புதுவைச்சிவம் 1945: 10)

என்ற வினாவில் தீண்டாமையைப் பழிச்சொல்லாக ஆக்குகிறார். ஞானிகள் உரைத்தது தான் வேதம் என்றால், தேர்ந்த ஞானம் பேசும் நாட்டில் தீண்டாமைக்கெப்படி இடம் வந்தது என்றும் கேட்கிறார். தாழ்த்தப்பட்டோரின் அன்றைய நிலை குறித்துக் கூறும் புதுவைச்சிவம்,

96. *''நாய் பன்றி கழுதைகள் யாவும் - இந்த*
*நாட்டில் உரிமையோடு வாழும்!*
*வாய்மையுடைய ஆதி மக்கள் - இந்த*
*வகையிற் சிறிதுங் கூட்டிலையோ?''*

(புதுவைச்சிவம் 1945: 10)

என்ற அடிகளில், தாழ்த்தப்பட்டவர்களை ஆதி மக்கள் என்றும், அவர்கள் வாய்மையுடையவர்கள் என்றும், ஆனாலும் உரிமையின்றி வாழுகின்றனர் என்றும் குறிப்பிடுகிறார். மேலும் தீண்டாமை குறித்துப் பெரியார், அம்பேத்கர் ஆகியோரின் தீவிரக் கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கவிதையில் வடித்திருக்கின்றார். 1931 ஆம் ஆண்டில் இலண்டனில் நடைபெற்ற இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் காந்தியடிகளை நோக்கி அம்பேத்கர் எழுப்பிய கேள்வியைக் கவிதையில் வடிக்கிறார் புதுவைச்சிவம்.

97. *''மலத்தினுங் கேடாய் மதிப்பதோ சிலரை?*
*வாய்ந்த நல் அறிவென்பதெங்கே?''*

(புதுவைச்சிவம் 1945 : 8)

என்று தாழ்த்தப்பட்டோரின் அன்றைய சமூக நிலையைப் படம்பிடித்துக்காட்டும் புதுவைச்சிவம், தங்கள் இழிநிலையைக் கண்டு கோபம் கொள்ளாமல் அதற்குக் காரணமான பார்ப்பனர்களைச் சாமி என்றழைப்பதையும் சாடுகிறார்.

98. *"ஈனமுறும் பார்ப்பான் வேசிமகன் எனில்*
*இளித்துப் பல்காட்டியே சாமி என்பதோ?*
*மான உணர்வினை இழந்தனையோ*
*மறத் தமிழன் என்பதறிந்திலையோ?"*

(புதுவைச்சிவம் 1945: 11)

என்ற அடிகளில் பெரியாரின் சொற்பொழிவில் காணப்படும் முழுவேகமும் எதிரொலிப்பதைக் காணமுடிகிறது.

கல்லாத மக்களை இப்பிரச்சாரம் போய்ச் சேரவேண்டும் என்ற நோக்கில் இதுபோன்ற பிரச்சாரப் பாடல்களை இசைப்பாடல்களாக (உருப்படி) இயற்றி இருக்கிறார் புதுவைச் சிவம். சுயமரியாதை இயக்க மேடைகளில் இப்பாடல்கள் இசைக்கப்பட்டன. இராகம், தாளம் ஆகியன குறிக்கப்பட்டு எளிமையான அடிகள் மூலம் திராவிட இயக்கத்தின் தீண்டாமை பற்றிய கருத்தின் ஆழமும் வேகமும் முழுமையாக மக்களைச் சென்றடையும் நோக்கில் பல இசைப் பாடல்களை இயற்றியுள்ளார் புதுவைச்சிவம். இசையரங்குகளில் பாடுவதற் கேற்ற சீர்திருத்தப் பாடல்கள் இல்லை என்பதால், காலத்திற்கேற்ற பகுத்தறிவுக் கருத்துக்களைக் கொண்ட இசைப் பாடல்களை இயற்றியதாகப் புதுவைச்சிவம் தமிழிசைப்பாடல் நூல் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். தனது தோழர்களான இசை வல்லுநர்கள் சிலர், இசையரங்குகளில் பாடப் பாடல் இயற்றித் தருமாறு கேட்டுக் கொண்டதற்கிணங்க இப்பாடல்கள் இயற்றப்பட்டன என்றும் புதுவைச்சிவம் அம்முன்னுரையில் குறிப்பிடுகிறார். எந்தக் கலை வடிவத்தைக் கையிலெடுத்தாலும் அதில் தங்கள் இயக்கக் கருத்துகள் அனைத்தையும் புகுத்தி விடும் தாகமும், வேகமும் அவரிடமிருந்த இயக்கவாதி என்ற தன்மையை முழுமைப்படுத்தி விடுவதைக் காணமுடிகிறது.

## மத எதிர்ப்பு

மனிதனுக்கு இயற்கையிலேயே மதப்பற்று கிடையாது என்று விஞ்ஞான அடிப்படையில் கூறிய பெரியார், மானுட வாழ்வுக்கு ஏற்ற சட்டதிட்டங்கள் உள்ள, மக்கள் கூடி வாழும் ஒழுங்கு முறைகள் கொண்ட, மதம் ஒன்று இருக்குமானால் அதை யாரும் எதிர்க்க முடியாது என்றும் கூறினார். மதம் என்பது ஆதிகாலத்தில் மக்களிடம் ஒரு கட்டுப்பாட்டை வளர்க்கவே ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும், பின்னர்ச் சுயநலத்தினாலும், அரசியல் காரணமாகவும் மதங்கள் களங்கப்பட்டுப் போயின என்றும் கூறிய பெரியார், மதம் மக்கள் அறிவைக் கெடுக்கிறது என்றும் ஒற்றுமையைக் குலைக்கிறது என்றும் ஒழுக்கக் கேட்டை அளிக்கிறது என்றும் பகுத்தறிவுக்குப் புறம்பானது என்றும் ஊழலை உருவாக்குகிறது என்றும் குற்றங்களுக்குப் பக்க பலமானது என்றும் கருதினார் (வே. ஆனைமுத்து 1974: 1055, 1357, 1416-1424).

சாதி, தீண்டாமை, மதம் தொடர்பான திராவிட இயக்கத்தின் கொள்கைகள் அனைத்தும் திராவிட இயக்கப் பேச்சாளர்கள், எழுத்தாளர்களின் ஆக்கங்களில் எதிரொலித்தன. கவிஞர்களாகவும் இருந்த பாரதிதாசனும், புதுவைச்சிவமும் திராவிட இயக்கத்தின் இக்கொள்கைகளின் அடிப்படையில் பல படைப்புகளை உருவாக்கியுள்ளனர்.

மருட்டுகின்ற மதத் தலைவர் வாழ்வதனால் உலகம் இருட்டறையில் இருக்கிறது என்பதைத் திராவிட இயக்கத்தினரின் கருத்தாகப் பாரதிதாசன் கவிபுனைந்தார். புதுவைச்சிவம்,

99. *''வாய்ந்த நல் அறிவது வளர்ந்திடாக் காலத்தில்*
*மதமெனக் கண்டார் சீர்பெறவே''*

(புதுவைச்சிவம் 1945: 17)

என்று முற்காலத்தில் மதங்கள் மனிதனைச் சீர்பெற வைப்பதற்கே ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்ற பெரியாரது கருத்தினையே பிரதிபலிக்கிறார். இன்றைய நிலையில் மதம்

மனிதனது வாழ்வைத் தேய்க்கும் நிலையில் அதைவிட்டு விலகுவதே அறிவார்ந்த செயலாகும் என்றும் மேலும் பேதத்தை ஒழிக்கவேண்டுமானால் மதத்தினை விட்டு நீங்க வேண்டு மென்றும் புதுவைச்சிவம் வலியுறுத்துகிறார் (புதுவைச்சிவம் 1945: 31). மதமும், அதன்வழிச் சடங்குகள், விழாக்கள் ஆகியனவும் மக்களின் பொருளாதார மேம் பாட்டுக்குப் பெரும் கேடாய் இருப்பதைப் பெரியார் சுட்டிக்காட்டினார். அவரது சொற்பொழிவுகளைத் திரட்டி, 'விழாவும் நாமும்' என்ற தலைப்பினில் புதுவைச்சிவம் 1948 ஆம் ஆண்டில் நூலாக வெளியிட்டார்.

*100. ''மதமெனும் நோய் பொல்லாதே*
*மாந்தரின் சீர் அதனால் நில்லாதே''*
(புதுவைச்சிவம் 1945: 18)

என்றும் மேலும், மதத்தினால் ஏற்படும் தீமைகளைப் பட்டிய லிட்டு, ஆதலால் மதத்தை விட்டுவிட ஆலோசனை கூறி, அதற்கு மாற்றாக அறநெறி ஆவது சமதர்மமே என்று தீர்மானித்துக் கூறுகிறார் புதுவைச்சிவம் (புதுவைச்சிவம் 1945: 31). மதம் இல்லாமல் மனித சமுதாயம் இருக்காது என்ற உண்மையை உணர்ந்ததாலேயே மதத்திற்குத் தீர்வு காணப் புதுவைச்சிவம் முயல்வதாகக் கொள்ளலாம். மதத்தின் மீது நம்பிக்கையுள்ளவர்கள் அதனை உயர்வாக வைத்துப் போற்றும் இடத்தினில், சமதர்மத்தைப் பரிந்துரை செய்வது புதுவைச் சிவத்தின் கொள்கை உறுதிப்பாட்டையும், உள்ளார்ந்த கிடக்கையையும், உலகளாவிய பார்வையில் அவரது சிந்தனைப் பார்வை பயணித்திருப்பதையும் அறியவைக்கிறது.

## சமூகச் சீர்திருத்தம்

திராவிட இயக்கத்தினரின் சமுதாயச் சீர்திருத்தக் கொள்கையை விரித்துப் பார்க்கின் அவ்வியக்கத்தின் அனைத்துக் கொள்கைகளும் அதில் அடங்கி விடும் என்று கொள்ளவே வாய்ப்பிருக்கிறது. இன உணர்வு, மொழி உணர்வு, பெண்ணுரிமை, சாதி எதிர்ப்பு, தொழிலாளர் உரிமை போன்றவையும் சமூகச் சீர்த்திருத்தத்தின் விளைவாகவே நிகழ முடியும். அதே நேரம், திராவிட இயக்கம் மேற்குறித்த சமூக இயல்களுக்கு மிகவும் முன்னுரிமை கொடுத்த காரணத்தினாலும், தமிழகச் சூழலில் அவ்வியல்கள் பெற்ற முக்கிய இடம் காரணமாகவும் சமூகச் சீர்திருத்தம் என்ற தலைப்பின்கீழ் அவ்வியல்கள் கொண்டு வரப்படாமல் தனித்தனியே இந்நூலில் விரிவுபடுத்தப்பட்டுள்ளன. விரிவுபடுத்திய அவைதவிர எஞ்சிய திராவிட இயக்கக் கருத்தியல்கள் சமூகச் சீர்திருத்தம் என்னும் தலைப்பில் ஆய்வுக்கு எடுத்தாளப்படுகின்றன.

தமிழ்ச் சமுதாயம் சாதிப் பிரிவினைகளால் பிளவு பட்டுக் கிடப்பதற்கும், சடங்கு, சம்பிரதாயம் என்ற மூடநம்பிக்கைகளில் ஆட்பட்டுக் கிடப்பதற்கும், மோட்சம், நரகம் என்ற புனைவுகளை நம்பிப் பெரும் பணம் செலவுசெய்து பொருளாதாரச் சுரண்டல்களுக்கு ஆளாவதற்கும், பெண்கள் தம் உரிமை இழந்து ஆண்களின் கைப்பாவைகள் ஆனதற்கும், தீண்டாமையின் பேரால் ஒரு சாரார் ஒடுக்கப்படுவதற்கும், அப்படி ஒடுக்கப்பட்டவர்கள் உரிமைக்குரல் கொடுக்க முடியாமல் மேலும் அடிமைப்பட்டுக் கிடப்பதற்கும், இவற்றுக்கெல்லாம் காரணமான பார்ப்பன மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்வதற்கும் காரணம் பகுத்தறிவின்மையே என்றும் அந்தப் பகுத்தறிவைத் தமிழ் மக்களுக்கு ஊட்டுவதே சமுதாயச் சீர்திருத்தம் என்றும் பெரியார் அறை கூவல் விடுத்தார்.

முற்காலத்திய தமிழர் சமுதாயம் அனைத்து நிலைகளிலும் சிறந்தோங்கியதாக இருந்து பின்னர்ச் சீரழிந்துவிட்டதாகத் திராவிட இயக்கத்தினர் நம்பினர். இதற்கு ஆதாரமாக அன்றைய இலக்கியங்களையும் இலக்கியங்கள் படைக்கப்பட்ட காலச் சூழலையும் அவர்கள் குறிப்பிட்டனர். தமிழர்கள் தங்களைத் தாங்களே ஆண்டனர்; வீரமும் காதலும் நிறைந்த வாழ்வையே அவர்கள் வாழ்ந்தனர்; மானத்தைப் பெரிதாக மதித்தனர்; சாதி, மத, பேதங்களில்லை; பெண்கள் மதிக்கப்பட்டனர்; ஆடல், பாடல், இலக்கியம் என்று அனைத்துக் கலைகளும் சிறந்தோங்கி யிருந்தன; உழவிலும் தொழிலிலும் பாடுபட்டு உழைத்துப் பலன் கண்டனர்; ஏய்த்துப் பிழைக்கும் வர்க்க பேதங்கள் இல்லை; பொருளாதாரம் வளம் பெற்றிருந்தது; பல நாடுகளுக்குச் சென்று வாணிபம் செய்தனர்; திரை கடலோடித் திரவியம் தேடினர்; அன்புநிறை வாழ்க்கை வாழ்ந்தனர்; அறம் பெருகியது; இதுவே பண்டைத்தமிழரின் பெருமைமிகு பண்பாடு என்று திராவிட இயக்கத்தினர் குறிப்பிட்டனர் (வே. ஆனைமுத்து 1974: 557).

இவ்வாறாகத் தங்கள் இலட்சியக் கனவைப் பழந்தமிழர் சமுதாயத்தில் முழுமையாக ஏற்றிப் பண்டைப் பெருமையைத் தமிழர்க்கு மீண்டும் எடுத்துக் காட்டும் செயல் திராவிட இயக்கத்தினர்க்குத் தலையானதாக இருந்தது. சுயமரியாதை இயக்கம் தோன்றக் காரணமாக இருந்த அன்றைய சமுதாயத்தில் நிலவிய அடிமை நிலையைச் சுட்டிக்காட்ட வேறொரு சமுதாயத்தை மேற்கோள்காட்டி ஒப்பு நோக்குவதை விடத் தங்களின் இழந்த பெருமையைச் சுட்டிக் காட்டுவதே பொருத்த முடையதாக அவர்கள் எண்ணியிருக்கக் கூடும். பண்டைத் தமிழரின் பழம் பெருமை பேசும் எண்ணற்ற கட்டுரைகள், கவிதைகள், இலக்கிய ஆய்வுகள், உரைநடைகள் எனக் குறைவில்லாமல் திராவிட இயக்கத்தின் அனைத்து இதழ்களிலும் பொங்கல் மலர்கள், சித்திரை மலர்கள் ஆகிய வற்றிலும் காணக்கிடப்பது மேற்சொன்ன கருத்தை உறுதிப்படுத்துவதாகவே அமைகிறது

அறிவுப்புரட்சி ஏற்பட்டு அனைவரும் கல்விகற்றுப் பகுத்தறிவுடன் சிந்திக்கத் துவங்கிவிட்டால் சமுதாயம் சீர்திருத்தம் பெற்றுவிடும் என்பதில் திராவிட இயக்கத்தினர் நம்பிக்கை கொண்டிருந்தனர். தமிழக மக்கள் துல்லியமான மனத்துடன், தூய்மையான எண்ணத்தில், செயல்திறனில், பகுத்தறிவாளர்களாய், பண்பாளர்களாய்த் திகழ வேண்டும், அதற்கோர் அறிவுப்புரட்சி தேவை என்பதே பெரியாரின் நாட்டம் என்ற அறிஞர் அண்ணாவின் கருத்து (தமிழரசு: 16.9.1978), மேற்சொன்ன கருத்துடன் முழு அளவில் இணைவு கொள்கின்றது. இவ்வகையிலேயே திராவிட இயக்கக் கவிஞர் களாகத் திகழ்ந்த பாரதிதாசன், புதுவைச்சிவம் ஆகியோரின் படைப்பிலக்கியங்கள் அமைந்திருந்தன.

சிந்தனை இல்லாததால்தான் விலங்குகளில் சிலவகை அடிமையாக இருக்கின்றன. சிந்தனை இருப்பதால்தான் மனிதன் அடிமை ஆகின்றான்; அடுத்த நாளைப் பற்றியதும் ஆசையும் தன்னலமுமான சிந்தனையுமே மனிதரிலேயே ஒரு சாரார்க்கு அடிமைப்பட வைக்கின்றன; இந்த இயற்கையான தடைகள் தவிரச் செயற்கையாக மக்களின் மீது சுமத்தப்பட்ட தடையான சடங்குகள் போன்ற கட்டுப்பாடுகளுக்குள்ளும், மனிதன் தன்னைப் புகுத்திக் கொள்வதால் மேலும் அடிமைப் படவும் வாழ்க்கை முழுவதும் மூடநம்பிக்கையில் உழல் வதற்கும் காரணமாகிறான்; சிந்தனைத் திறன் இருந்தாலும் பகுத்தறிவின்மையும் சுயமரியாதை கொள்ளாததுமே மனிதனை மனிதனுக்கு அடிமைப்படுத்தக் காரணமாகின்றன என்றார் பெரியார் (வே. ஆனைமுத்து 1974: 6-11).

ஆழமான நம்பிக்கைகளின் ஊடே பிணைக்கப்பட்டுக் காலம் காலமாகத் திணிக்கப்பட்ட மூடநம்பிக்கைகளைக் களைவதுதான் முதல் சமுதாயப்பணி என்று பெரியார் கருதினார். சமுதாயத்தில் வறுமைக் கோட்டிற்குக்கீழ் உள்ள மக்கள், அதற்கு மேல் உள்ள மக்கள் ஆகிய இவர்கள் மதவழி மூடநம்பிக்கைகளினால் பெருமளவில் பொருளாதாரச் சுரண்டலுக்கு ஆளாகின்றனர் என்று கூறி, அதனால் சமுதாயப்

பொருளாதார நிலைமைகளைச் சீர்திருத்த வேண்டுமானால் சமுதாயச் சீர்திருத்தமே அதற்குச் சரியான தீர்வு என்று பெரியார் தீர்மானித்து, அதற்காகவே சுயமரியாதை இயக்கம் பாடுபடுவ தாகக் கூறினார். அரசியல் கட்சியான காங்கிரஸின் மாகாணத் தலைவராக (1925) இருந்த அவர், அரசியல் விடுதலை என்பது சமுதாய விடுதலைக்கு அடுத்ததே என்று ஆணித்தரமாக நம்பியதுடன் அதற்காக அரசியலில் இருந்து விடுபட்டு நேரடியாகச் சமுதாய இயக்கத்தின்வழி மக்களிடம் தன் கருத்துக்களைப் பரப்ப முனைந்தார். இதனால் அன்றிருந்த சூழலில் காங்கிரஸ் கட்சியின் எதிர்ப்பும் மேல்தட்டு மக்களின் எதிர்ப்பும் இயல்பாகவே எழுந்தன. இவற்றைவிடப் பெரும் எதிர்ப்பு, யாருக்காக அவர் இந்தச் சமுதாயச் சீர்திருத்தத்தை ஆரம்பித்தாரோ அவர்களே அதாவது நடுத்தர, கீழ்த்தட்டு நிலை மக்களே அவரது இயக்கத்தை மிகக் கடுமையாக எதிர்த்தனர். காலங்காலமாக நிலவிவந்த நம்பிக்கையில் பெரும்பகுதியை மூடநம்பிக்கை என்று சுயமரியாதை இயக்கம் பிரச்சாரம் செய்ததால் மத உணர்வும் அது சார்ந்த போதனைகளும் தந்த நம்பிக்கையில் தோய்ந்திருந்த மக்கள் அதை அத்தனை எளிதில் ஏற்கவில்லை. எனவே, மூடநம்பிக்கைகளை ஒழிப்பதில் திராவிட இயக்கப் படைப்பாளிகளின் பங்களிப்பின் எல்லை மிக விரிவானதாக இருந்தது. சடங்குகள், சம்பிரதாயங்கள், அவற்றை நிலைநிறுத்தும் புரோகிதம், இவற்றை ஆற்றுப் படுத்தும் புராண, இதிகாசங்கள், வேதங்கள், இவற்றுக்கு அரணாக நிற்கும் கடவுள் தத்துவம் ஆகியவற்றை எதிர்ப்பதில் கடுமையான போக்கைத் திராவிட இயக்கப் படைப்பாளிகள் மேற்கொண்டனர். புதுவைச்சிவமும் சடங்குகள், சம்பிர தாயங்கள், புரோகிதம், புராண இதிகாசங்கள், கடவுள் தத்துவம் ஆகியவற்றைக் கவிதைகள் மூலம் கடுமையாக எதிர்த்தார்.

**சீர்திருத்தம்**

திராவிட இயக்கத்தின் முன்னணித் தலைவர்கள், பேச்சாளர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், பிற படைப்பாளிகள் என

அனைவரது ஊடக வெளிப்பாடுகளுமே சமுதாயச் சீர்திருத்தம் என்ற இலக்கை நோக்கியே இருந்தன. தமிழரின் வீழ்ச்சிக்குக் காரணம் பகுத்தறிவு இழந்த நிலைமையே என்பதைச் சுட்டியே பெரியார் முதல் அவ்வியக்கப் பேச்சாளர்கள், படைப்பாளிகள் ஆகியோரின் கருத்து அமைந்திருந்தது.

*101. ''அந்தோ அந்தோ அருந்தமிழ் நாடே*
*எந்நாள் மீண்டும் இரவியின் ஒளியெனும்*
*பகுத்தறிவதனைப் பாங்குறப் பெற்று*
*மிகுத்திடும் இருளெனும் வெம்மதம் போக்கிப்*
*புகழோடு விளங்குவாய்?''* (புதுவைச்சிவம் 1946: 2)

என்ற திராவிட இயக்கத்தினரின் ஆதங்கத்தைக் கவிதையாய் வெளிப்படுத்தும் புதுவைச்சிவம், முன்னர்ப் புகழுடன் வாழ்ந்த தமிழ்நாட்டு மக்கள் தற்போது சூழ்கின்ற பேதந்தொலைத்து வானுயரும் கீர்த்தியுற்றார்; தீய பழக்க வழக்கங்கள், பூசனைகள், புராணங்கள், ஆசாரம் ஆகியவற்றை ஒழித்துவிட்டார்; பல தொழில்கள் செய்ய முனைந்தார்; பெண்கள் நுண்ணறிவால் மேம்பட்டு, வீரம் கொண்டு, அடிமை நிலை ஒழித்தார்; அனைவரும் கல்வியில் சிறந்து விளங்க மேனாட்டார் கண்டயர்ந்தனர்; தமிழ் வளர்த்தார்; என்ற நிலையே பகுத்தறிவின் மூலம் அடைகின்ற சீர்திருத்தத்தின் பயனாகும் என்று குறிப்பிடுகிறார். அதனால்,

*102. ''பகுத்தறிவெங்கும் வளரச் செய்குவோம்*
*பரவும் நற்புகழ் இழிவேகுமே*
*மிகுந்த மூடச்செய்கை வீழ்ச்சிக் கொள்ளும் நாளே*
*மேன்மை வாய்ந்த நன்னாள் ஆர்ந்த இன்பப்*
*பொன்னாள்''*
(புதுவைச்சிவம் 1950: 24)

என்று இயக்கத்தினர்க்கு வேண்டுகோள் விடுக்கிறார். இதற்கும் எதிர்ப்புக் குரல் எழும்புவது கண்டு சீர்திருத்தம் வேண்டுமென்று சொல்வதும் தவறாகுமா என்று கொள்கை வழி வலியுறுத்துகிறார்.

*103. ''நாட்டுக்கு நல்லது கூறவந்தால் - அதை*
*நாத்திகம் என்றிங்குக் கூறிடுவார்''*

(புதுவைச்சிவம் 1945: 50)

*104. ''சீர்திருத்த மெனிற் சீறுகின்றார்''*

(புதுவைச்சிவம் 1945: 51)

அறிவின் விடுதலை நிலையே புகுத்தறிவு என்னும் கருத்தில் திராவிட இயக்கத்தினர் ஆழமான பிடிப்புடன் இருந்தனர் என்பதை,

*105. ''அறிவுக்கு விடுதலை இல்லாத வரை - எந்த*
*அரசியல் விடுதலை பெற்று மென்ன?''*

(புதுவைச்சிவம் 1945: 54)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. புதுவைச்சிவம் கவிதையினைத் தனது 'திராவிட நாடு' இதழில் மதிப்பீடு செய்த அறிஞர் அண்ணா, 'மக்களின் அறிவுக்கு இட்ட வேலியை வெட்டி வீழ்த்தினாலன்றி, எந்த அரசியல் விடுதலையாலும் பயன்பெற முடியாதென்ற உண்மையினைக் கவி, மிகவும் அழகாக, ஆணித்தரமாக எடுத்து விளக்கியிருக்கிறார்' என்று கூறுவதிலிருந்து திராவிட இயக்கத்தவரின் ஒருமித்த கருத்தும் புலனாகிறது. புதுவைச்சிவத்தின் கவிதை அடிகளை அண்ணா அப்படியே எடுத்தாண்டிருப்பதும் நோக்கத்தக்கது (புதுவைச் சிவம் 1997: 64).

## மூடநம்பிக்கை ஒழிப்பு

கோயில், குளங்கள், உருவ வழிபாடு, சடங்குகள், சம்பிர தாயங்கள், கடவுள் தொடர்பான விழாக்கள், சமயம் சார்ந்த விழாக்கள், மதத்தை வெளிப்படுத்தும் குறியீடுகள், கடவுள் நம்பிக்கை, மோட்சம், நரகம், பேய், பிசாசுகளில் நம்பிக்கை, திவசம், திதி, சிரார்த்தம், பிண்டம், புண்ணியாவர்ச்சனம், சாந்தி, கருமம், சங்கல்பம், தானம், பிதிர்தேவதை, பிதிர்லோகம், விதி, ஜாதகம், சமயம் சார்ந்த இல்ல நிகழ்வுகள் அனைத்துமே மூடநம்பிக்கையால்தான் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்றார் பெரியார் (வே. ஆனைமுத்து 1974: 13).

இத்தனை மூடநம்பிக்கைகளுக்கும் மனிதன் கட்டுப்படு வதால் சுயமரியாதையை இழப்பதோடு ஏராளமான பொருள் இழப்புகளுக்கும் ஆளாகின்றான். இதனால் மனித சமுதாயத்தின் முன்னேற்றம் தடைப்படுகிறது. ஆகவே இப்படிப்பட்ட மூட நம்பிக்கைகளும், அந்நம்பிக்கையைத் தோற்றுவிக்கும் அனைத்துக் காரணிகளும் மனித சமுதாயத்திலிருந்து விலக்கப் பட்டே ஆகவேண்டும் என்று பெரியார் வலியுறுத்தினார். மனித சமுதாய முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பதனால்தான் கடவுள், மதம் பற்றித் தான் பேச நேர்வதாகக் கூறிய பெரியார், இவ்விரண்டின் அடிப்படையில் எழுப்பப்பட்டவைகளே மூடநம்பிக்கைகள் என்பதால், கடவுள்,மதம் ஆகியவையும் விலக்கப்பட வேண்டியவையே என்றார். இந்த அனைத்து விதமான குருட்டு நம்பிக்கைகளையும், மூடவழக்கங்களையும் சமுதாயத்தின்பால் திணித்து அதனால் பலனடைவதும், தொன்னூற்றேழு சதவிகித மக்களின் முன்னேற்றம் தடைப்படக் காரணமாக விளங்குவதும் பார்ப்பனியமே என்றும் பெரியார் கூறினார் (வே. ஆனைமுத்து 1974: 9).

பெரியாரின் கருத்துக்களே சுயமரியாதை இயக்கத்தின் கருத்துக்களாக இருந்ததால் மூடநம்பிக்கையைச் சமுதாயத் திலிருந்து அகற்றுவதை அவ்வியக்கம் முக்கியப் பணியாக மேற்கொண்டது. இவ்வியக்கத்தின் பல மாநாடுகளில் மூட நம்பிக்கையை ஒழிப்பதற்காகவும், அதற்கான கருத்துக்களைப் பரப்புவதற்காகவும் தீர்மானங்கள் இயற்றப்பட்டன. இக் கொள்கையை ஏற்றுக் கொண்ட சுயமரியாதை இயக்கத்தினர் அதற்கான முயற்சிகளில் முனைப்புடன் செயல்பட ஆரம்பித்தனர்.

பண்டைய தமிழ்ச் சமுதாயம் சாதிப்பிரிவுகள் அற்ற, மூட நம்பிக்கைகள் இல்லாத பகுத்தறிவுச் சமுதாயமாக இருந்ததாகத் திராவிட இயக்கத்தினர் நம்பினர். வீரம், காதல் ஆகிய இரண்டு மட்டுமே தமிழர்களின் அடிப்படைப் பண்பாட்டுக் கூறுகளாக இருக்க, இவற்றை அடிப்படையாகக் கொண்டே தமிழர்களின் கலைகளும் பண்பாட்டுப் பழக்கவழக்கங்களும் உருவானதாகத் திராவிட இயக்கத்தினரின் கருத்தோட்டம் இருந்ததைத் திராவிட

இயக்க இதழ்கள் வெளியிட்டுள்ள ஆண்டுமலர்கள், பொங்கல் மலர்களிலிருந்து கணிக்க முடிகிறது. புதுவைச்சிவமும் இக்கருத்தில் மிகவும் உடன்பாடு கொண்டிருந்தார் என்பதைப் பின்வரும் அவருடைய பாடல் அடிகள் புலப்படுத்து கின்றன.

*106. ''கீர்த்தியுறும் பழந்தமிழர் வாழ்வில் முன்னாள்*
*கீழ்நோக்கம் இருந்ததில்லை பேதமில்லை*
*பாழ்த்தமதத் தத்துவங்கள் இருந்ததில்லை*
*பயனற்ற வீண்சடங்கு நிகழ்ந்ததில்லை*
*நேர்த்தியுறு சமதர்ம நோக்கும் நல்ல*
*நீடு புகழ்த் திருவாழ்வும் அறிவும் பெற்றே*
*சீர்த்தியுடன் வாழ்ந்திட்டார்....''*

*107. ''செப்பரிய கலைவளர்த்து வாழ்விலென்றும்*
*சீர்க்காதல் மிகப்போற்றி இன்பந்துய்த்தே*
*ஒப்பின்றி வாழ்ந்திட்டார் அறிவுக்கொள்கை*
*உலகத்துக் கீந்திட்டார் தமிழரந்நாள்''*

*108. ''பசையற்ற நிலையில்லை அறிவைத் தீய்க்கும்*
*பாழ்மூடச்செயலில்லை! உலகம் போற்ற*
*இசை கொண்டு வாழ்ந்தவர்கள் முற்காலத்தில்*
*இருந்திட்டார் எனில் அவர்கள் தமிழரன்றோ''*
(புதுவைச்சிவம் 1946: 3)

திராவிட இயக்கத்தினரின் கண்ணோட்டத்திலான பண்டைய தமிழ்ச் சமுதாயத்தை இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ச் சமுதாயத்தோடு ஒப்பிட்டுப்பார்த்து அதன் வீழ்ச்சி யையும் தமிழ் மக்களிடையே எடுத்துரைக்கின்றார் புதுவைச் சிவம். இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ச் சமுதாயம்,

*109. ''நிலவுகின்ற தாழ்வுயர்வு வறுமை மோசம்*
*நிர்ப்பந்தம் இன்னபிற தீமையெல்லாம்*
*மலைமலையாய்ச் சமூகத்தில் தோன்றச் செய்து*
*மாந்தர்களின் உணர்வழித்துத் துயர் வளர்த்தே*
*விலங்கினமாய்.......''* (புதுவைச்சிவம் 1946: 5)

ஆகிவிட்டதென்று கூறி, இத்தனைப் பழம்பெருமை வாய்ந்த சமுதாயம் இப்படிப் பாழ்பட்டுப் போனதே என்று தமிழ் மக்களிடையே எடுத்துரைத்தனர் திராவிட இயக்கத்தினர். ஒவ்வொரு நிலையிலும் உயர்வடைந்திருந்த தமிழ்ச் சமுதாயம் இன்று ஒவ்வொரு நிலையிலும் தாழ்வுற்றுப்போனது என்றும், அதே நேரம் அவ்வாறு ஆனதற்கு ஒரே காரணம்தான் என்றும் அவர்கள் உறுதியாக நம்பினார்கள்.

*110. ''படுமோசப் பார்ப்பனரின் வார்த்தை நம்பிப்*
*பாழ்பட்டுப் போய்விட்டார் இந்த நாட்டார்''.*
(புதுவைச்சிவம் 1946: 5)

என்பதுதான் திராவிட இயக்கத் தலைவர்கள் தொடங்கித் தொண்டர்கள் வரை கொண்டிருந்த கருத்தாக இருந்தது. இக்கருத்தையே அவ்வியக்கக் கவிஞர்களும் தங்கள் கவிதைகளில் பிரதிபலிக்கச் செய்தனர்.

**சடங்கு, புரோகித எதிர்ப்பு**

மனிதனை இறுதிவரை கடவுள் காப்பாற்றுவார் என்று சொல்லிக் கடவுள் பேரால் ஏமாற்றுவோருக்கும், மக்களின் உழைப்பினைச் சுரண்டுவோருக்கும் மானுடசக்தியின் மகத்துவத்தைக் காட்ட வந்த இளைய தலைமுறையாக பிள்ளைப்பருவத்திலிருந்தே தன்மான உணர்வை ஊட்டி வளர்க்க வேண்டும் என்ற கருத்தினை ஆண் குழந்தைத் தாலாட்டில் பாரதிதாசன் அமைத்திருக்கிறார்.

உலகப் பொது அறிவை தனக்கு உணர்த்தி வரும் ஆசானாகப் பெரியாரையும், தீந்தமிழளித்து, எளிய நடையில் கவிதை எழுதும் தகுதிக்குத் தன்னை ஆளாக்கி வைத்த ஆசிரியராகப் பாரதிதாசனையும் குறிப்பிடும் புதுவைச்சிவம் (புதுவைச்சிவம் 1944: முன்னுரை) பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*111. ''வீரத்தை- மானத்தை - அறிவை - வாழ்வை*
*வேதமத சாத்திரத்தின் துணையால் போக்கி,*

*ஈரமற்று நம் உழைப்பை உறிஞ்சியுண்டும்,*
*இழிவுரையாம் சூத்திரன் என்று ரைத்தும்......''*
(புதுவைச்சிவம் 1944: 38)

பன்னாளாய் இருந்துவரும் பழக்கத்தினால்,

*112. ''பாவமது தீருமென்ற நம்பிக்கையால்*
*பார்ப்பனரின் கால் கழுவு நீரை யுண்டும்*
*ஆவினது சாணத்தை மூத்தி ரத்தை*
*அருந்தியுமே வருகின்றோம்! அன்றித் தீய*
*மாவழக்கந் தனைஏற்றும் வாழ்வு தன்னில்*
*வறுமை, துயர் மிகவளிக்கும் சடங்கை ஏற்றும்*
*தீவினைக்கே ஆளாகி உழலு கின்றோம்!''*
(புதுவைச்சிவம் 1944: 40)

என்று இருபதாம் நூற்றாண்டின் முற்பாதியில் நிலவி வந்த மூட வழக்கத்தினையும் அதனால் ஏற்பட்ட இழி நிலைமைகளையும், கூறுகின்ற புதுவைச்சிவம் இவற்றிற்கெல்லாம் பார்ப்பனரின் ஆதிக்கமே காரணம் என்றும் விளக்குகிறார்.

*113. ''பிறப்பதற்கு முன்பிருந்தும் இறந்த பின்னும்*
*பேய்க் குணத்துப் பார்ப்பனர்கள் சடங்கின் பேரால்*
*பறிக்கின்றார் நம்பொருளை! மதப்பேர் சொல்லிப்*
*பகற்கொள்ளையடிக்கின்றார்! கேட்பாரில்லை!''*
(புதுவைச்சிவம் 1944: 39)

என்று தன் ஆதங்கத்தை வெளிப்படுத்துகின்றார் புதுவைச் சிவம். புரோகிதத்தைப் பாவேந்தர் பாரதிதாசன் பழித்த அளவுக்கு வேறு எந்தக் கவிஞரும் பழித்துச் சாடியதில்லை என்று கூறுகிறார் பேராசிரியர் சே. இராசேந்திரன் ( 1975: 225). மேற்குறித்த வரிகள் இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்து வதில் பாரதிதாசனுக்கு நிகராகக் கவிதைகள் யாத்து இயக்க வளர்ச்சிக்குத் துணை நின்றிருக்கிறார் புதுவைச்சிவம் என்பதையே வெளிப்படுத்துகின்றன.

இப்படிப்பட்ட ஆதிக்கத்திற்கெதிராகக் குரல் கொடுத்து, 'மிக்குள வழக்கமெல்லாம் வீழ்ச்சியேயடைய வேண்டும்' என்று விரும்பிய பெரியார், 'சாத்திரம் பொய்யே என்று சாற்றினார்' என்று கூறும் புதுவைச்சிவம், இத்தகைய கருத்துக்களினால் தமிழ் நாட்டின் இளைஞர்கள் கவரப்பட்டு, மூடநம்பிக்கையை ஒழிக்கும் தொண்டுப் புரியப் பெரியாரோடு சேர்ந்ததாகக் குறிப்பிடுகிறார்.

*114.''இவ்வகைக் கொள்கை தன்னை இளைஞர்கள் பகுத்துணர்ந்தே*
*வெவ்விய பசிநோயாளன் விரும்பிய உணவுபெற்றால்*
*எவ்விதம் களி கொள்வானோ அவ்விதம் எழுச்சிகொண்டு*
*செவ்விய தொண்டு செய்யச் சேர்ந்தனர் பெரியாரோடே!''*

(புதுவைச்சிவம் 1944: 16-17)

இத்தகைய எழுச்சிதான், 'இழிவை நீக்கும் சுயமரியாதை என்னும் தூய நல் இயக்கமாகியது' என்று இயக்கத்தின் காரணியத்தையும் குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம். ஆகவே, 'வாய்மையில்லாக் கொள்கையான வைதீகத்தில் உழல்வதேனோ?' என்று கேள்வியெழுப்பி,

*115. ''தூய்மையளிக்கும் - சுதந்திரம் தரும்*
*சுயமரியாதைப் போதங் கொள்வீர்!''*

(புதுவைச்சிவம் 1945: 10)

என்று நாட்டு மக்களுக்கு அழைப்பு விடுக்கிறார்.

மோட்சம், நரகம் என்ற கற்பனைகளைக் காரணம் காட்டி, மோட்சமடைவதற்காகப் பிறப்பு முதல் இறப்பு வரை மனிதன் சடங்குகளின் மூலம் பெரும்பொருளை இழந்து விடுவதைப் பெரியார் சுட்டிக்காட்டி, இதுபோன்ற சடங்குகளையும், புரோகிதத்தையும் தவிர்ப்பதால், மனிதன் பொருளை இழக்காமல் வாழ்க்கையில் முன்னேற்றமடைவதோடு, தன்மானத்தோடு வாழ முடியும் என்று வலியுறுத்தினார் (வே. ஆனைமுத்து 1974: 7). இக்கொள்கையினை முழுமையாக உள்வாங்கிய புதுவைச்சிவம்,

*116. ''வேண்டாமையோ -திதி- வேண்டாமையோ*
*வீணிற் பொருளழித்தல் வேண்டாமையோ''*
(புதுவைச்சிவம் 1945: 24)

*117. ''புள் முதல் புழுவரை சாகப்*
*புரோகிதன் அவற்றிற்குத் திதி செய்வதுண்டோ?''*
(புதுவைச்சிவம் 1945 : 25)

*118. ''எத்தனையோ ஜென்மம் என்றுரைத்தார் - அவர்*
*எதற்குப் போய்ச் சேரும் நீர் கொடுப்பதெல்லாம்?*
*செத்தவர்க்கேயவை சேர்ந்ததென்றே - ஒரு*
*சேதி கிடைத்ததுண்டோ பாழுமக்களே!''*
(புதுவைச்சிவம் 1945 : 24)

என்ற கேள்விகளை எழுப்புகிறார். பகுத்தறிவின் வளர்ச்சியே கேள்விக் கணைகளைத் தொடுப்பதால்தான் என்ற பெரியார் கருத்துரையின்படி சிந்திப்பதற்கான கேள்விகளை எழுப்பிய பின், அவ்வாறான சடங்குகளால் என்ன விளைவு நேரும் என்றும் பின்வருமாறு குறிப்பிடுகிறார் புதுவைச்சிவம்.

*119. ''சடங்குகளாலே தவிர்ந்திடுமோ துயர்?''*
*''தேடிய பொருளைத் தீர்த்திடும் அதுதான்*
*திண்டாடச் செய்து விடும்! - கடன் விளைக்கும்*
*மானமழிக்கும் மதியினைத் தொலைக்கும்!*
*ஈனமாம் வாழ்வளிக்கும் - இடர் விளைக்கும்''*
(புதுவைச்சிவம் 1945: 23)

மூடநம்பிக்கையின் உச்சத்தைத் தொட்டுக் காட்டும் நோக்கில் 'சதிமிகுந்த வைதீகம் இந்த நாட்டில் தமிழிரத்தம் உறிஞ்சி மிக வாழக் கண்டோம்' என்று கூறும் புதுவைச்சிவம் மேலும், 'வைதிக வாழ்வால் தொல்லை', 'பீடைச்சாத்திரம்', 'வகுத்த பழஞ்சாத்திரத்தில் வாழ்வின்ப முண்டோ', 'அறிவினுக் கொவ்வாத சடங்குள்', 'சகுனத்தடை', 'பல்லி விழுந்த பலன்', 'ஏனிந்த வைதிக வாழ்வு', 'இது மூடச்செய்கை' என்று பல பாடல்களில் கடுமையான மதிப்பீட்டை மேற்கொள்கிறார் (புதுவைச்சிவம் 1946: 6-12).

திதி போன்ற நிகழ்வுகளில் மட்டுமல்லாது, 'மாமணம் செய்வதிலே மூடச்சடங்கேன்?' என்றும், அனைத்து இல்ல நிகழ்வுகளிலும் சடங்குகள் ஒழிக்கப்பட வேண்டும் என்றும் கூறும் புதுவைச்சிவம், இதற்கெல்லாம் காரணமான,

*120. ''தீயதொரு புரோகிதத்தை ஓட்டிடுவீரே''*
(புதுவைச்சிவம் 1945: 23)

*121. ''வீழ்க மூடவழக்கங்கள் யாவும்*
*வீழ்க வெந்துயர் தருமனு நீதி''*
(புதுவைச்சிவம் 1945: 27)

*122. ''வாய்ந்திடும் பேதவி ரோதம் வளர்த்திடும்*
*வைதிகம் முதன் முதல் தீர்த்திடுவீர்''*
(புதுவைச்சிவம் 1945: 33)

என்று வைதிகம் தொலைப்பதொன்றே மூடநம்பிக்கை ஒழிப்பதற்கான முதல் படி என்று குறிப்பிடுகிறார். இந்தியா சுதந்திரம் அடையும் முன்பே 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே பள்ளுப்பாடுவோமே' என்ற பாடலில் பாரதி களிகொள்வதுபோல, 'விஞ்சி நின்ற மூடச்செயல் வீழ்ந்தது பாரிதோ' என்று அப்பொழுதே தன் ஆவலையும் வெளிப்படுத்துகிறார் புதுவைச்சிவம்.

புதுவைச்சிவம் கவிதைகளின் அனைத்துத் தொகுதிகளிலும் பல பாடல்களில் மூடநம்பிக்கை ஒழிப்பினை வலியுறுத்தியே பாடியுள்ளார். இந்த வகையிலான கருத்துக்கள் புதுவைச்சிவம் இயற்றிய பெரும்பாலான பாடல்களிலும் பரவலாகக் காணக் கிடக்கின்றன. இவை பெரிதும் அக்காலத்தில் சுயமரியாதை இயக்க இதழ்களில் வெளிவந்ததைக் கொண்டு இயக்கத்தின் கொள்கைப் பரப்பலுக்கு இக்கவிதைகள் பெரிதும் பயன்பட்டிருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

**புராண இதிகாச எதிர்ப்பு**

இந்து மதத்தின் விளக்கமாகவும், முன்னேற்றத்திற்காகவும் உருவாக்கப்பட்டவை என்று சொல்லப்படுகிற வேதங்கள்,

மனுதர்மம், ஸ்மிருதிகள், புராண, இதிகாசங்கள் அனைத்தும் இந்து மதத்திலுள்ள பார்ப்பனர்களைத் தவிர மற்றவர்களை இழிவு படுத்துவதாகவும், கொடுமை செய்ய வழி வகுக்கும் விதமாகவும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன என்பது பெரியாரின் கருத்து. இவையெல்லாம் வேதத்தின் சாரங்களாகக் கருதவும் அவற்றை வலியுறுத்தும் வகையில் கடவுள் தத்துவங்களும் கடவுள்களும் உருவாக்கப் பட்டிருக்கின்றன என்றும் பெரியார் கருதினார் (வே. ஆனைமுத்து 1974: 25). வேதங்கள், மனு முதலான ஆரிய தர்மங்கள் தமிழருக்கொவ்வாதவை என்பதனால்,

*123. ''மனுவின் மொழி அறமான தொருநாள்- அதை*
*மாற்று நாளே தமிழர் திருநாள்''*

(பாரதிதாசன் 1960: 18)

என்பதே புராணங்கள் குறித்துத் திராவிட இயக்கத்தின் மதிப்பீடாக இருந்தது.

புராணம் என்பது முழுப்புரட்டு; அது கலையின் பேரால் ஆரியர்கள் மூட்டிய கடுவிஷம்; தமிழர்களை மூடர்களாக்கச் செய்யப்பட்ட சூழ்ச்சி என்று கருதிய புதுவைச்சிவம் இத்தகைய புராணங்கள்,

*124. ''மக்களின் அறிவினை மாய்க்கும்! - நல்ல*
*மானவுணர்ச்சியை இல்லாது தேய்க்கும்!*
*மிக்க துயர் வாழ்வு சேர்க்கும்! - பொல்லா*
*வெறியூட்டி அன்பினைத் தீர்க்கும்!''*

(புதுவைச்சிவம் 1945: 20)

என்று கூறுகிறார். மக்கள் புலன் அழித்து அறியாமை புகுத்தும் புராணம் என்றும் சதிமிகுந்த புராணம் என்றும் நேரற்ற புராண இதிகாசம் என்றும் நீள் துன்ப விஷவேகம் என்றும் புராணங்களைப் பற்றிக் கூறி ஆகவே,

*125. ''வீழ்க ஆரியம் விளைத்திடும் சூழ்ச்சி*
*வீழ்க புராணேதிகாசத்தின் புளுகு*

*வீழ்க மூடவழக்கங்கள் யாவும்*
*வீழ்க வெந்துயர் தரு மனுநீதி''*
(புதுவைச்சிவம் 1945: 27)

என்று மிக வன்மையாகக் கூறுவதோடல்லாமல்,

126. *''ஆர்ந்திட்ட புராணங்கள் இதிகாசங்கள்*
*புறக்கணித்தே அவற்றையெல்லாம் பொசுக்கித் தீர்த்துப்*
*புதுவாழ்வைத் தமிழகத்தில் தோற்றுதற்கு,*
*முறைப்படியே வகுத்தஒரு தொண்டு செய்ய*
*முனைந்துழைக்கும் தீரமுள்ள வீரர் வேண்டும்!''*
(புதுவைச்சிவம் 1946: 57)

என்று நேரடியான அழைப்பும் விடுக்கிறார்.

புராண, இதிகாச எதிர்ப்பைப் பொறுத்தவரையில், இது போன்ற கொள்கைப் பிரச்சாரக் கவிதைகளை இயற்றி இயக்க இதழ்களில் வெளியிட்டது மட்டுமின்றி, இவற்றைத் தொகுத்து நூலாக்கம் செய்து தன்னுடைய பதிப்பகத்தின் மூலமாக வெளியிட்டும் இயக்கத்தினரிடையே பரவச் செய்திருக்கிறார் புதுவைச்சிவம். மேலும், புராணங்கள் அறிவை மாய்க்கின்றன; மூடநம்பிக்கையை வளர்க்கின்றன என்று சுயமரியாதை இயக்கத்தினர் சொல்லி வந்ததை, கடவுள் நம்பிக்கையாளர்கள் எதிர்த்து வந்தனர். இப்பிரச்சினை இவ்விரு பிரிவினரிடையே நேரடி வாதமாகவும் நிகழ்ந்திருக்கிறது. புராணங்கள் தேவை யில்லை என்ற கருத்தினில் அறிஞர் அண்ணா, ஈழத்தடிகள் ஆகியோரும் புராணங்கள் தேவையே என்ற கருத்தினில் சோமசுந்தர பாரதியாரும், ரா.பி. சேதுப்பிள்ளையும் நிகழ்த்திய சொற்போரினைத் 'தீ பரவட்டும்' என்ற தலைப்பிட்டு 1943 ஆம் ஆண்டில் நூலாகத் தனது ஞாயிறு நூற்பதிப்பகம் மூலமாகப் புதுவைச்சிவம் வெளியிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

இயக்க மாநாடுகள் நடைபெறும்போது இதுபோன்ற நூல்களை எடுத்துச் சென்று மிகக் குறைந்த விலையில் இயக்கத் தோழர்களுக்குப் புதுவைச்சிவம் நேரடியாக விற்பனை செய்திருக்கிறார் என்ற செய்தி அவரது தோழர்கள் மூலம் கிடைக்கிறது (தணிகாசலம் நேர்காணல்: 31.8.2000).

**கடவுள் மறுப்பு**

'கடவுள் இல்லை கடவுள் இல்லவே இல்லை' என்ற தீவிர முழக்கத்தைத் தனது இயக்கத்தில் பெரியார் ஏற்படுத்தியது இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் (1967 ஆம் ஆண்டு) என்றாலும், கடவுள் மறுப்புக் கருத்துகள் சுயமரியாதை இயக்கத்தில் பெரியாரின் சொற்பொழிவு வாயிலாக 1920 ஆம் ஆண்டுகளின் பிற்பாதியிலிருந்தே காணப்படுகின்றன. தமிழர்களை அடிமையாக்கி வைத்திருப்பது மூட நம்பிக்கைகளை உருவாக்கும் சடங்குகள்; அச்சடங்குகளைக் கைக்கொள்ள வைப்பது பார்ப்பன ஆதிக்கம்; பார்ப்பனீயம் சாதி அமைப்பின் மூலமாக நிலைத்து நிற்கிறது; இவ்வகைப் படிநிலை அமைப்பின் ஆதாரம் மதம்; மதத்தின் மூலம் கடவுள் தத்துவம் என்று கருத்துரைக்கும் பெரியார், இந்து மதச் சீர்திருத்தத்தை வலியுறுத்தத் தொடங்கி, இத்தனைச் சீர்கேடுகளுக்கும் காரணமான அம்மதத்தைக் கடுமையாக விமர்சித்து, அதற்கு அரணாக நிற்பதால் கடவுளின் நிலையையே கேள்விக்குறி யாக்கினார். இத்தகைய இழி செயல்களுக்குக் காரணமானால் அது கடவுளாக இருக்க முடியாது என்றும் கருத்துரைத்தார் பெரியார். இறுதியாகக் கடவுள் இல்லை என்ற முடிவுக்கும் வந்து 14.6.1967 ஆம் நாளில் அதை அறிவிப்பாகச் செய்தார் (வே.ஆனைமுத்து 1974: LIV).

இந்தக் கால அளவைக் கொண்டு பார்க்கும் போது கடவுள் மறுப்பைக் கடைப்பிடித்தலையும், அதைப் பரப்புவதையும் திராவிட இயக்கத்தின் தீவிரப் பற்றாளர்கள் மட்டுமே உறுதியாகக் கைக்கொண்டனர் என்ற ஊகத்தை அடையலாம். தொடக்க நிலையில் இருந்தே கடவுள் எதிர்ப்பாளர்களாக இருந்தவர் களும் திராவிட இயக்கத்தில் இருந்தனர். கடவுள் பற்றாளர்களாக இருந்து திராவிட இயக்கக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டபின் கடவுள் எதிர்ப்பாளர்களாக மாறியவர் களும் அவ்வியக்கத்தில் இணைந்து செயல்பட்டனர். 1920 ஆம் ஆண்டுகளில் மயிலம் ஸ்ரீ சுப்ரமணியர் மீது வண்ணப்பாட்டு, பஞ்சரத்தினம், துதியமுது பாடிய பாரதிதாசன், 1928 ஆம்

ஆண்டு வாக்கில் சுயமரியாதை மாநாட்டில் கலந்து கொண்டு அவ்வியக்க ஆதரவாளர் ஆனார்.

இந்நிலையில் புதுவைச்சிவம் தொடக்கம் முதல் இறுதி வரை ஒரே தீர்க்கமான முடிவில் காணப்படுகிறார். 1930-1932ஆம் ஆண்டுகளில் வெளியான புதுவை முரசு இதழில் காணப்படும் அவரது தொடக்கக் காலக் கட்டுரைகளே அவரது கடவுள் மறுப்பைத் தெளிவாகத் தெரிவித்து விடுகின்றன. 'கடவுள் நம்மைப் படைத்துக் காத்து ரட்சிக்கின்றாரா, நாம் கடவுளைப் படைத்துக் காத்து ரட்சிக்கின்றோமா' என்ற தலைப் பிலமைந்த புதுவைச்சிவத்தின் கட்டுரையும் இதுபோன்ற பிற கட்டுரைகளும் புதுவை முரசில் இடம்பெற்றுள்ளன.

127. *''கடவுளென்ற சொல்லில் மோசம் போனோமே - ஒரு*
*காதறுந்த ஊசி பலன் காணோமே''*
(புதுவைச்சிவம் 1945 : 31)

என்றும்,

128. *''சிந்தைமிகத் துடிதுடித்தே வாழ்கின்றோம் நம் குறையைத்*
*தீர்க்க ஒரு கடவுளில்லை''* (புதுவைச்சிவம் 1945: 32)

என்று கடவுள் இல்லாததற்குக் கவலைப்படுவது போன்ற கருத்தோட்டத்தில் கடவுள் மறுப்பை வலியுறுத்துகிறார்.

மனித சமுதாயத்தின் அனைத்துச் செயல்களுக்கும் காரணம் விதியென்றும் கடவுள் செயல் என்றும் கூறுவதால் முடிவில்லாத வறுமையே மக்களை அடைகிறது என்று கூறும் புதுவைச்சிவம்,

129. *''..... இதனை மாற்ற*
*வந்த ஒரு கடவுளுண்டோ? மதமுண்டோ?*
*அவதாரம் உண்டோ?மக்கள்*
*சிந்தனையே செய்வதென்றோ? நமக்கெல்லாம்*
*சீர்திருத்தம் கைக்கும் வேம்போ?''*
(புதுவைச்சிவம் 1946: 12)

என்று நொந்து பாடும் நிலையினில் காணப்படுகிறார். இத்தகைய நிலைமைகளைக் காணாதிருக்கும் கடவுள்கள் மீது

அவருக்கு எழும் கோபம் எல்லை மீறியும் விடுகிறது. கடவுள்களைக் கூட்டம் என்றும் அவை மாண்டால்தான் தமிழர் வாழ்வில் மீட்சி கிடைக்கும் என்றும் கூறுகிறார்.

*130. ''நடுநடுங்கிச் சாகின்றார்! விதியைச் சொல்லி*
*நாற்பதினாயிரங் கடவுள் படைத்து விட்டார்*
*மடமையினால் வளர்ந்த இந்தக் கடவுட் கூட்டம்*
*மாளாத வரை யிங்கு மீட்சியுண்டோ''*
(புதுவைச்சிவம் 1945: 5)

கடவுள், கடவுள் செயல் என்று கூறப்படுபவற்றைப் பகுத்தறிவால் ஆராய்ந்து அவை மூடச்செயல் என்பதைத் தெளிந்து அதை மக்களுக்கும் பரப்ப வேண்டும் என்பது திராவிட இயக்கத்தினருக்குப் பெரியார் இட்ட பணியாக இருந்தது. பெரியாரின் இக்கொள்கைக்குத் திராவிட இயக்கக் கவிஞர்கள் ஆக்கம் தேடித் தந்தனர் என்ற கருத்து இதற்கு முன்னரே ஆய்வாளர்களால் முன் வைக்கப்பட்டுள்ளது (சே. ராஜேந்திரன் 1985: 233). இதற்கேற்பவே புதுவைச் சிவத்தின் கடவுள் மறுப்புக் கவிதைகள் அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

**கல்வி**

கல்வியின் இன்றியமையாத தேவை பழந்தமிழ் இலக்கியங்கள் தொடங்கி வலியுறுத்தப்பட்டு வருகிறது. 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே' (புறநானூறு - பாடல் 183) என்று ஒரு மன்னனே பாடிய பாடலைப் புறநானூறு கொண்டிருக்கிறது. கல்வியின் தேவையைத் திருக்குறளின் பல இடங்களில் வலியுறுத்தும் திருவள்ளுவர் கல்விக்கென்று ஒரு தனி அதிகாரத்தையும் உருவாக்கியிருக்கிறார். சங்க காலத்தில் பரவலாகப் பலருக்கும் பயன்பட்டதாகக் கூறப்படும் கல்வி, இடைக்காலத்தில் சமய வழிப்பட்டதாக மாறிப்போனதால் மேல் சாதியினர்களின், குறிப்பாகப் பார்ப்பனர்களின் தனிச்சொத்தானது என்றும் இந்நிலை ஆங்கிலேயர் ஆட்சிக் காலம் முன்புவரை நீடித்துப்

பின்னர் ஆங்கில ஆட்சியினால் சிறிது மாற்றம் பெற்றது என்றும், இதற்குக் காரணம் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் அடிப்படைக் கல்வியை விடவும் மேல்நிலைக் கல்விக்கு முதன்மை தரப்பட்டதுதான் என்றும் ஆய்வுகள் தெரிவிக்கின்றன (சே. இரராசேந்திரன் 1985:184).

பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்கத்தில் ஆங்கிலேயர்களை மிலேச்சர்கள் என்றும் ஆங்கிலம் மிலேச்ச மொழி என்றும் கருதிப் பார்ப்பனர்கள் அவர்களிடமிருந்து ஒதுங்கி இருந்தனர். ஆங்கிலேயர் இந்தியாவில் தங்கள் வியாபாரச் சாலைகளை அமைத்தபோது அவர்களிடம் நிர்வாகிகளாகவும் மொழி பெயர்ப்பாளர்களாகவுமிருந்த பார்ப்பனரல்லாத மற்ற சாதியினர்க்குச் சமூகத்தில் செல்வாக்குப் பெருகி வந்தது. ஆங்கிலேயர் அரசியல் தொடர்பு கொண்டபோது அவர்களிடம் பணிபுரிந்த நிர்வாகிகளுக்கும் சமூக மதிப்பு உயர்ந்தது. சமூகத்திலும் அரசியலிலும் ஆங்கிலேயரோடு உறவு கொண்ட பார்ப்பனரல்லாதார் மதிப்புப் பெறுவது கண்டு, மேற் கொண்டும் ஒதுங்கியிருந்தால் தமது சமூகம் வீழ்ச்சியுறும் என்று கருதி, மிலேச்சர்கள், மிலேச்ச மொழி எனும் எண்ணத்தைக் கைவிட்டுப் பார்ப்பனர்கள் ஆங்கிலம் கற்கவும், ஆங்கிலேயரின் நட்பைப் பெறவும் முன்வந்தனர். கல்வியைப் பொறுத்தவரை, ஆங்கிலேயர், தலையிடாக் கொள்கை என்ற பேரால் சாதி, மத அமைப்பினை வளரவிட்டதாலும், மெக்காலேயின் கல்வி முறை இந்தியரை ஆங்கிலப்படுத்திய முறையினாலும் சமுதாயத்தில் உயர்தர ஆங்கிலக் கல்வியே வளர்ச்சி பெற்றது. தொடக்க நிலைக் கல்வி அலட்சியம் செய்யப்பட்டது. இதனால் பார்ப்பனர் உயர்கல்வி பெறவும், பார்ப்பனரல்லாதோர் தொடக்க நிலைக் கல்வி கூடப் பெறமுடியாத நிலையும் உருவாக்கப்பட்டது.

> *''.....இந்தியாவில் ஆங்கிலேயர் அளித்த கல்வி, சமயத்தோடு பின்னிப்பிணைந்த ஒன்றாய் இருந்ததால், இந்துக்களின் உயர்கல்வி பார்ப்பனர்களின் கையில் இருந்ததோடு அது அவர்களுக்கே உரியதாகவும் விளங்கியது''*

என்ற வாலண்டைன் சிறாலின் (Valantine Chirol) கூற்று நோக்கத்தக்கது (ஏ. என். சட்டநாதன் 1984: 6).

ஆங்கிலக்கல்வி பார்ப்பனர்களைச் சமூக அமைப்பில் பழைய நிலைக்கு மீண்டும் உயர்த்தியது. 1914 ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்ற 650 பேர்களில் 452 பேர் பார்ப்பனர்களாக இருந்தனர். கல்வி, வேலை வாய்ப்பு களில் பார்ப்பனர் அல்லாதவர்களின் பிரதிநிதித்துவத்தை வலியுறுத்தித் தொடங்கப்பட்ட நீதிக்கட்சி, சென்னை மாகாணத்தின் பிரதிநிதிகள் சபைக்குத் தேர்ந்தெடுக்கபபட்ட பின்னரே, தொடக்க நிலைக் கல்வி கற்பவர்களில் பார்ப்பனர் தவிர்ந்த பிற சாதியினரின் எண்ணிக்கை அதிகப்படுத்தப் பட்டது (சிவ. இளங்கோ 2000: 4).

சமுதாயத்தில் நிலவிய சாதி வேறுபாடுகளும், மூட நம்பிக்கைகளும், பகுத்தறிவற்ற தன்மையுமே கல்வி பரவலாக்கப் படுவதற்குத் தடையாக இருந்தன என்பது திராவிட இயக்கத்தினரின் கருத்தாக அமைந்தது.

*131. ''வறியவர்க் கெல்லாம் கல்வியின் வாடை*
*வரவிடவில்லை மதகுருக்களின் மேடை''.*

(சு. மன்னர்மன்னன் 1985: 47)

என்று பிரெஞ்சுக் கல்வியாளர் ழூய்ல்பெரியின் நூற்றாண்டு விழாவில் பாரதிதாசன் பாடிய பாடல் அடிகள் தமிழ்நாட்டுச் சூழலையும் மனங்கொண்டுப் பாடியதாகவே கொள்ள இடமிருக்கிறது.

கல்வியின் தேவையையும், அது தொண்ணூற்றேழு விழுக்காடு உள்ள பார்ப்பனர் தவிர்ந்த பிற சாதியினரைச் சென்றடைய வேண்டிய அவசியத்தையும் பொதுக்கூட்டங்கள், இதழ்கள் வாயிலாகப் பெரியார் வெளிப்படுத்தினார். பகுத்தறிவும், சீர்த்திருத்தமும் கல்வியினால்தான் இயலும் என்று இயல்பாகவே எண்ணங்கொண்டிருந்த திராவிட இயக்கத்தின் முன்னணித் தலைவர்களும் கவிஞர்களும் கல்வியின் அவசியம் குறித்துப் பிரச்சாரம் மேற்கொண்டனர்.

*132. ''எழுத்தறியா மக்களிங் கில்லை யென்றாகி*
*ஒழுக்கஞ் சிறந்தார் உணர்வுற்றார் நாடெங்கும்*
*கல்விபயில் சாலை கணக்கற்ற சங்கங்கள்.....*
*மிக்க படைத்துவிட்டார்...........*
*என்ற ஓர் நன்னிலையை என்தமிழர் ஆக்குவரேல்*
*நன்று மகிழேனோ! நாவார வாழ்த்தேனோ?''*

(புதுவைச்சிவம் 1946: 60)

என்று குறிப்பிடும் புதுவைச்சிவம், மேலும் கல்வியால் ஏற்படும் நன்மைகள் என்னென்ன என்றும் பட்டியலிடுகிறார்.

*133. ''கல்வியின் பயனை மக்கள் கண்டிடுவாரே யானால்*
*எல்லையில் ஊக்கங் கொண்டே இனிதுடன் நாளுங் கற்பர்*
*நல்லறிவதனால் சேரும்; நனிதுயர் யாவுந் தீரும்;*
*புல்லறி வகலும்; உண்மைப் பொருளெலாம் விளங்கும்*
*நன்றே''*

(புதுவைச்சிவம் 1946: 14)

*134. ''அறிவினையூட்டுங்கல்வி அவிவேகம் போக்குங் கல்வி*
*சிறப்பினைக்கொடுக்குங்கல்வி தெளிவானதர்க்கக்கல்வி*
*நெறிமுறை வளர்க்குங் கல்வி நேர்மை விஞ்ஞானக்கல்வி*
*மறுவறு கல்வியாலே மக்களுக் கறிவுண்டாகும்''*

(கவிதாமண்டலம், ஆனி - ஆடி 1935)

கல்வியின் சிறப்பைக் குறிப்பிடும் அதேவேளை, அது பகுத்தறிவை வளர்க்கும் கல்வியாக இருத்தலே மேன்மை தரும் என்ற கருத்தையும் வலியுறுத்துகிறார் புதுவைச்சிவம்.

*135. ''உள்ளமே விருத்தியாகும் உற்றதோர் கல்வியந்தப்*
*பள்ளியிலிருப்பதில்லை பகுத்தறிவிங்குக் குற்றம்*
*இத்தகைக் கல்வியாலே என்னதான் பலனைக் கண்டார்*
*சித்தமே இழந்து மக்கள் சிறப்பெலாம் தீர்ந்ததன்றி''*

(புதுவைச்சிவம் 1946: 14)

இந்நிலை மாற மதம் குறுக்கிடாத கல்வியே மேலெனவும் அறிவுறுத்துகிறார் புதுவைச்சிவம்.

*136. ''மித்தையாம் மதத்தின் கல்வியே மேலெனக் கருதும் இந்தப்*
*பித்தமே தெளிய வேண்டும், பிழைமிக நீங்குங் கண்டீர்''*
(புதுவைச்சிவம் 1946 : 14)

மக்களுக்கு அடிப்படை அறிவூட்டுகின்ற கல்வியை வலியுறுத்துகின்றபோதே, அது பகுத்தறிவு சார்ந்த கல்வியாகத் தான் இருத்தல் வேண்டும் என்ற தம் இயக்கக் கொள்கையினை எவ்விடமும் வலியுறுத்தும் பாங்கும் பொதுமைத்தன்மையுள்ள பாடல்களைக் கூட இயக்கத்தின் கொள்கை விளக்கப் பாடலாக ஆக்கி விடும் தன்மையும் இங்கு நோக்கத்தக்கன.

புதுவைச்சிவம் தமிழாசிரியராகப் பணிபுரிந்து வந்த தனியார் பள்ளி, தனது மாணவர்களுக்காக விற்பனை செய்த நோட்டுப் புத்தகத்தின் பின்னட்டையில், மாணவர்களுக்குக் கல்வியின் தேவையை வலியுறுத்தும் புதுவைச்சிவம் பாடலை அச்சடித்து மாணவர்களுக்கு விநியோகித்திருக்கிறது.

*137. ''கல்வி தன்னைக் கற்க வேண்டும் மாணவத் தோழா''*
(புதுவைச்சிவம் ஆண்டு இல்லை: பக்கம் இல்லை)

என்று தொடங்கும் எளிமையான பாடல் அடிகள் பொதுவான அறநெறியும், திராவிட இயக்கக் கொள்கையும் இணைந்த வடிவமாக மாணவர்களைச் சென்றடையச் செய்த பாங்கு நோக்கத்தக்கது. இது ஒவ்வொரு நிலையிலும் பகுத்தறிவையும், சீர்திருத்தத்தையும் வலியுறுத்துவதற்குத் துணையாகவே நின்றது என்று கொள்ளவே வாய்ப்பிருக்கிறது.

**சீர்திருத்தத் திருமணம்**

சடங்குகள் நீக்கிய, குறிப்பாகப் பார்ப்பனர்களும், புரோகிதமும் நீங்கிய முறையில்தான் தமிழர்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று பெரியார் வற்புறுத்தினார். சடங்குகள் நீங்குவதால் சிக்கனமும் எளிமையும் ஏற்படும் என்றும் இதனால் தமிழர்களின் தன்மானம் காக்கப்படுகிறது என்றும் திராவிட இயக்கத்தினர் குறிப்பிட்டனர். மேலும், சாதி

மறுப்புத் திருமணமும் விதவை மறுமணமும் இதனால் சாத்தியப்படுவதாகவும் பெரியார் எடுத்துரைத்தார். விரும்பி யவரைத் திருமணம் செய்து கொள்ள வாய்ப்பளிப்பதால், பெண்ணுரிமை இத்திருமணத்தில் போற்றப்படுவதையும் அவர் எடுத்துக்காட்டினார். தமதியக்கத்தின் கொள்கைகளையும், இலட்சியங்களையும் ஈடேற்றும் விதமாக இத்தகைய பல திருமணங்களை அவர் நடத்தி வைத்துள்ளார். விதவைகளை மறுமணம் செய்து கொள்ள விரும்புபவர்களையும் சாதி மறுப்புத் திருமணத்திற்கு விருப்பம் தெரிவித்தவர்களைப் பற்றியும் தமது குடி அரசு இதழில் வெளியிட்டு அவர்கள் விரும்பிய இணையரை இயக்க மேடைகளில் சீர்திருத்தத் திருமணம் செய்து வைத்தார் பெரியார். அப்படி நிகழ்த்தப்பட்ட பல திருமணங்களைப் பற்றிச் சுயமரியாதை இயக்க இதழ்களில் அவ்வப்போது செய்திகள் வெளியிடப்பட்டு வந்தன.

இக்கொள்கையை ஏற்றுக் கொண்ட புதுவைச்சிவம், சீர்திருத்தத் திருமணத்தை வரவேற்றுப் பல கவிதைகள் எழுதினார். 'சீர்திருத்தத் திருமண வாழ்த்து' என்ற தலைப்பிலேயே பல கவிதைகளைப் புதுவைச்சிவம் இயற்றியுள்ளார் (புதுவைச் சிவம் 1946:6). தெய்வத்தின் பேரால் குழவி, அம்மி, புதுப் பானை, சால்கரகம், குட விளக்கம், அரசாணிக்கால் வைத்து அருந்ததி காட்டிப் பார்ப்பனர்கள் செய்கின்ற சடங்குகளை இழிசெயல்கள் என்று அக்கவிதையில் சாடுவதுடன், பழந்தமிழர் வாழ்வில் இதுபோன்ற வீண்சடங்குகள் இருந்ததில்லை என்கிறார் புதுவைச்சிவம். 'மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட' நடைபெற்ற சிலப்பதிகார காலத்துத் திருமணங்கள் தொல்காப்பியக் காலத்தில் இருந்ததில்லை என்று பல அறிஞர்களும் குறிப்பிட்டுள்ளது நோக்கத்தக்கது.

சடங்குகள் அற்ற பண்டைய தமிழர் திருமணத்தில் பிற்காலத்தில் வைதீகம் புகுத்தப்பட்டதால் மக்களின் மேனிலை குலைந்துவிட்டது என்று கூறும் புதுவைச்சிவம்,

*138. ''தீதுறும் அந்த வாழ்வைச் சீ என ஒதுக்கி, நல்ல*
*மேதையர் பெரியார் சொன்ன*
*மேன்மையாம் நெறிமேற் கொண்டாய்''*
(புதுவைச் சிவம் 1946: 64)

என்று சீர்திருத்தத் திருமணம் புரிந்துகொள்ளும் தோழர்களுக்கான வாழ்த்துப்பாவில் குறிப்பிடுகிறார். இதுபோன்ற சீர்திருத்தத் திருமணம் புரிந்து கொள்பவர்களுக்கென்றே பல வாழ்த்துப்பாக்கள் எழுதியுள்ள புதுவைச்சிவம் தனது மறுமலர்ச்சிக் கவிதைகள் தொகுப்பில் இரண்டு திருமண வாழ்த்துக் கவிதைகளையும் ஒரு காதல் மண வாழ்த்துக் கவிதையையும் சேர்த்திருக்கின்றார். இந்தத் திருமண வாழ்த்துக் கவிதைகளின் நோக்கம், இயக்கக்கொள்கை சார்ந்தது என்பதிருக்க, இக்கவிதைகளை இத்தொகுதியில் சேர்த்த நோக்கமும் இயக்கம் சார்ந்ததாகவே இருக்கிறது.

*139. ''சீர்மிகுந்த செந்தமிழர் வழியில் வந்தே*
*சிறந்ததொரு வாழ்வுகொளும் என்றன்தோழ*
*பேர்மிகுந்த தமிழகத்தின் பிரிய மைந்த*
*பெற்றமிகுந் **திருவாள**, நீதான் இன்று*
*பார்மதிக்கப் பகுத்தறிவின் வழிபின் பற்றிப்*
*பைந்தமிழர் கீர்த்தி நிலை நாட்டுதற்கே,*
*ஏர்மிகுந்த **திருவாட்டி** என்னும் மாதை*
*இனிதுடனே மணந்திட்டாய், வாழ்க! வாழ்க!!''*
(புதுவைச்சிவம் 1946: 61)

என்று ஆரம்பிக்கும் ஏழு எண்சீர்விருத்தங்கள் அடங்கிய கவிதையில் மேற்குறித்தபடி தடித்த எழுத்திலிட்ட பகுதிகள் பெரிய எழுத்து அச்சில் உள்ளன. எந்தச் சீர்திருத்தத் திருமணத்திற்கும் வாழ்த்துச் சொல்ல விழைவோர் மணமக்கள் பெயரை அந்தத் தடித்த எழுத்திலிட்ட இடத்தில் முழுமை செய்து வாழ்த்துப் பத்திரம் வழங்க வசதியாகவே இப்பாடல்களைத் தனது கவிதைத் தொகுப்பில் புதுவைச்சிவம்

சேர்த்திருப்பது, எந்த நிலையிலும் இயக்கக் கொள்கைகளுக்கு முதலிடம் கொடுக்கும் நோக்கமே என்று கொள்ளலாம். திருமணங்களில் வாழ்த்துப்பா அச்சடித்து விநியோகிக்கும் வழக்கம் திராவிட இயக்கத்தினரிடம் பெருமளவில் நிலவி வந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது (செ. முத்து, நேர்காணல்).[7]

சமூகச் சீர்திருத்தத்தில் அடங்கும் அனைத்துப் பிரிவு களுக்குமாகச் சேர்த்துப் புதுவைச்சிவத்தின் மொத்தமுள்ள கவிதைகளில் (491) முப்பத்துமூன்று முழுமையான பாடல்கள் காணக்கிடக்கின்றன. இவை தவிர ஏனைய பல பாடல்களிலும் புதுவைச்சிவம் சமூகச் சீர்திருத்தத்தை வலியுறுத்தியே பாடல்களை அமைத்துள்ளார்.

# சிறு காவியப் படைப்புகள்

கவிஞர் புதுவைச்சிவம் மூன்று குறுங்காவியங்களைப் படைத்திருக்கிறார். இவை மூன்றுமே தமிழிலக்கியத்தின் சங்கப் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு அவற்றின் விரிவாக்கங்களாகவே அமைந்திருக்கின்றன. இவையன்றிப் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைக் கவிதை நடையில் விளக்கும் குறுங்காவியம் ஒன்றையும் அவர் இயற்றி இருக்கிறார். இயக்கத் தலைவரின் வாழ்க்கை நிகழ்வுகளை விளக்கும் ‘பெரியார் பெருந்தொண்டு’ எனும் இக்குறுங்காவியம் இந்நூலில் பல இடங்களில் சுட்டப்பட்டும், மேற்கோள் காட்டப்பட்டும் இருப்பதால், அதைப் பற்றிய விரிவான பார்வை இங்குத் தவிர்க்கப்பட்டுப் புதுவைச்சிவத்தின் ஏனைய மூன்று குறுங்காவியங்களைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## தமிழ்க்காப்பியத் தோற்றமும் வளர்ச்சியும்

மொழியின் வளத்தையும், அம்மொழியினத்தின் வரலாறு, பண்பாட்டுக் கூறுகள், முதிர்ந்த குறிக்கோள்கள் ஆகியவற்றைக் கொண்டும் விளங்குவதே இலக்கியமாகும். தமிழில் இத்தகைய இலக்கியங்கள் நிறையவே உள்ளன. இவற்றுள் வாழ்த்து, வணக்கம், வருபொருள் என்ற மூன்று மங்கல வகைகளில் ஒன்றெனக் கொண்டு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வகை உறுதிப் பொருள்களை உணர்த்துவதாகவும், அச்சமுதாயத்தின் அனைத்துவிதப் பண்பாட்டுக் கூறுகளையும் உள்ளடக்கியதாகவும் படைக்கப் படுவது காப்பியங்கள் என வழங்கப்பட்டன. இவற்றுள் ஒன்றோ, பலவோ குறைந்து வரின் அதனைச் சிறுகாப்பியம் என்பர். தமிழில் தொல்காப்பியம் மிகப் பழமையானதாகக் குறிக்கப் பெறுகின்றது (எம்.ஆர் அடைக்கல சாமி 1967: 135). சங்கம் மருவிய காலத்தில் (கி.பி. 100-600)

சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரட்டைக் காப்பியங்கள் தோன்றின. சோழர் காலத்தில் (கி.பி. 800- 1200) சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி போன்ற பிற காப்பியங்கள் தோன்றி இரட்டைக் காப்பியங்களையும் சேர்த்து ஐம்பெருங் காப்பியங்கள் எனப்பட்டன. சூளாமணி, நீலகேசி, உதயண குமார காவியம், யசோதர காவியம், நாககுமார காவியம் ஆகியவை ஐஞ்சிறு காப்பியங்கள் எனப் பகுக்கப்பட்டுள்ளன. காப்பிய வளர்ச்சியில் புராணங்களும் இதிகாசங்களும் கூட இணைத்து வழங்கப்பட்டன. கம்பராமாயணம், கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், அரிச்சந்திர புராணம், நளவெண்பா, வில்லிபாரதம், நைடதம் ஆகிய வையும் தமிழில் எழுந்த காப்பியங்களாகக் கருதப்படுகின்றன (மு.சு. அருள்சாமி 1970: 166).

**தற்காலக் காவியங்கள்**

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர்த் தமிழ் இலக்கியத்தில் மேற்கத்திய சிந்தனைகளோடு கூடிய மறு மலர்ச்சி ஏற்பட்டது. வீரமாமுனிவரின் தேம்பாவணியும், உமறுப்புலவரின் சீறாப் புராணமும் காப்பிய வளர்ச்சி நிலைகளாகக் கொள்ளப்பட்டன. மேலும், மறுமலர்ச்சிக் காலத்தில், நவீனங்கள், நாடகங்கள், சிறுகதைகள், புனைவுகள், உரைநடைகள், ஆய்வுக்கட்டுரைகள், திறனாய்வுப் போக்குகள் என இலக்கிய வகைமைகளின் ஒவ்வொரு பிரிவிலும் காவியங்களும் குறுங்காவியங்களும் உருவாயின. நவீன இலக்கியத்தில் மாயூரம் வேதநாயகம் பிள்ளை படைத்த பிரதாப முதலியார் சரித்திரம், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இயற்றிய நாடகக் காவியமான மனோன்மணீயம், திரு.வி.க.வின் உரைநடைக் காவியமான பெண்ணின் பெருமை, ரா.பி.சேதுப்பிள்ளையின் திறனாய்வான தமிழ் இன்பம் ஆகியவை காவிய வளர்ச்சி நிலைகளின் சான்றுகளாகத் திகழ்கின்றன (மு.சு. அருள்சாமி 1970: 270).

கவிதை நடையில் பாரதியாரின் பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு, கண்ணன்பாட்டு ஆகிய குறுங்காவியங்களும் அதே

போல் பாரதிதாசனின் குடும்பவிளக்கு, எதிர்பாராத முத்தம், பாண்டியன் பரிசு போன்றவை தற்காலக் காவிய வரிசையில் வைக்கப்படுகின்றன.

**புதுவைச்சிவம் காவியப் படைப்புகள்**

தமிழ் இலக்கியங்கள் கூறும் வரலாற்று நிகழ்வுகளைக் கொண்ட மூன்று குறுங்காவியங்களைப் புதுவைச்சிவம் இயற்றியிருக்கிறார். கைம்மை வெறுத்த காரிகை, மறக்குடி மகளிர், காதலும் கற்பும் ஆகிய இம்மூன்று நூல்களும் பண்டைய தமிழ் மகளிரின் வீரத்தையும், துணிவையும் புறநானூற்றுப் பாடலைத் துணைகொண்டு விளக்கிக் கூறும் வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இலக்கியங்கள் தமிழரின் வாழ்க்கை நெறிக்கும் வரலாற்றுக்கும் சான்றாக உள்ளன. சங்க இலக்கியங்களும் அதனையடுத்த காலத்தில் இயற்றப்பட்ட பக்தி இலக்கியங் களும் தமிழ்ப் பண்பாட்டில் கற்பு நெறியை வலியுறுத்துகின்றன. சமுதாயம், அதை ஏற்று ஆணாதிக்கம் நிலை பெற்றுவிட்ட சூழலில், அதை எதிர்த்துப் பிரச்சாரம் செய்யவேண்டிய கடினமானதொரு பணியைத் திராவிட இயக்கத்தினர் மேற் கொண்டிருந்தனர். அதே நேரம், தங்கள் நோக்கத்திற்கு ஆதாரமாக இலக்கியங்களில் தங்களுக்குச் சாதகமான பகுதிகளை மட்டும் சுட்டிக்காட்டி, அவையே தமிழரின் வாழ்க்கை நெறி என்று தங்கள் வாதத்தை வலியுறுத்தும் பணிகளை அவர்கள் மேற்கொண்டனர். இதற்குப் புதுவைச் சிவம் இயற்றி வெளியிட்ட கைம்மை வெறுத்த காரிகை, மறக்குடி மகளிர், காதலும் கற்பும் ஆகிய குறுங்காவியங்களைச் சான்றாகக் கூறலாம். இம்மூன்று நூல்களிலுமே சங்க இலக்கியப் பாடல்களைச் சான்றாகக் கொண்டு, அவற்றிற்கு எளிமையாகப் பொருள் கூற முற்பட்டு, அதனூடே தங்கள் இயக்கக் கருத்துக்களை ஏற்றி இவையனைத்தும் தமிழர் வாழ்க்கை நெறியே என்று நிறுவ முற்பட்டிருக்கிறார் புதுவைச்சிவம்.

**கைம்மை வெறுத்த காரிகை**

இந்நூல் 1945 ஆம் ஆண்டில் புதுவைப் பூங்கொடிப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது. புறநானூற்றுப் பாடல் (எண் 246) ஒன்றை அடிப்படையாகக் கொண்ட அந்நூலில் பாண்டிய மன்னன் பூதப்பாண்டியன் இறந்தபோது உடன் கட்டை ஏறத்தலைப்பட்ட அவன் மனைவி பெருங்கோப்பெண்டு, அதனைத் தடுத்த புலவர்க்குக் கைம்மைக் கொடுமையை உணர்த்தும் வகையில் பெண்ணுரிமை குறித்த திராவிட இயக்கக் கொள்கை விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது.

இந்தியச் சமுதாயத்தில் ஒரு சில சாதிகளைத் தவிரப் பெரும்பான்மையும் விதவை மறுமணத்தை முற்றிலுமாக ஏற்காத நிலையில், இருபதாம் நூற்றாண்டுச் சீர்திருத்த வாதிகள் பலர் விதவை மறுமணத்தை ஆதரித்து வந்தனர். திராவிட இயக்கம் தங்கள் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துகளில் விதவை மறுமணத்திற்கு மிக முக்கிய இடத்தைக் கொடுத்தது.

> *''....இந்துமத ஆண் உலகம் தங்களது பெண்ணுலகத்தின் மாட்டு கண்டொழுகும் கொடுமைச் செயல்கள் பலவற்றில் இங்கு நாம் விதவைகளைப் பற்றி மட்டும் கவனிக்க வேண்டியுள்ளது. தன் மனைவியை இழந்த கிழவன் மறுமணம் செய்து கொள்ளலாமென்றும், தன் கணவனை இழந்த மகப்பேறு பெறாத இளமங்கை மறுமணம் செய்து கொள்ளல் ஆகாதென்றும் கூறுவது நடுநிலைமை கொண்ட அறச்செயலாகாது..... மறுமணம் விரும்பாத பெண்களைத் தவிர்த்து, ஏனைய கைம் பெண்களுக்கு மறுமணம் செய்வித்தலே நன்று''*

(வே. ஆனைமுத்து 1974: 136-138)

என்று பெரியார் கூறினார். இதுவே திராவிட இயக்கத்தினரின் கொள்கையாகவும் அமைந்தது. இதனை வலியுறுத்தவும் பரப்பும் விதமாகவும் தமிழிலக்கியப் பாடலைத் துணை கொண்டு இயற்றப்பட்ட முயற்சியாக இந்நூலைக் கருதலாம்.

**மறக்குடி மகளிர்**

புதுச்சேரி, தொழிலாளர் மித்திரன் என்ற இதழின் நிர்வாகத்தினரால் 1945 ஆம் ஆண்டில் இந்நூல் வெளியிடப்பட்டது.[8] பெண்டிரின் வீரம் பகரும் புறநானூற்றுப் பாடல்கள் நான்கினை அடிப்படையாக வைத்து மூன்று இயல்களாக இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. போருக்குச் சென்ற மகன் புறமுதுகு காட்டினான் என்ற செய்தி கேட்ட ஒரு தாய், அதனை நம்பாமல், அவனுக்கு நான் ஊட்டியது கோழைப் பாலல்ல என்று போர்க்களம் சென்று, அவன் வீரமரணம் அடைந்ததைக் கண்டு பெருமிதப் பட்டதாக, 'படைக்குப் பிந்திய பதரோ என் மகன்' என்ற தலைப்பில் முதல் இயலாகவும்; தன் தமையனையும் கணவனையும் போரில் இழந்த பின்னும் சிறுவனான தன் மகனையும் போர்க்களம் அனுப்பிய பெண்ணின் தீரத்தை, 'சிங்கமனார் வழிவந்த சிங்கமன்றோ என் சிறுவன்' எனுந்தலைப்பில் இரண்டாம் இயலாகவும் போர் நடக்கும் காலத்தில் எங்கே உன் மகன் என ஒரு தாயைக் கேட்டதற்கு அவன் போர்க்களத்திலேயிருப்பான், 'அவனை ஈன்ற என் வயிறு புலி தங்கிச் சென்ற குகைபோல' என்று பெருமை பொங்கப் பதிலிறுக்கும் ஒரு பெண்ணின் கதையை மூன்றாம் இயலாகவும் எளிமையான விருத்த நடையில் புதுவைச்சிவம் இயற்றி வெளியிட்டிருக்கிறார்.

> *"....இன்றைய காலப் பெண்களுக்கு வீரமில்லை. புராணக் கதைகளும், சாத்திரங்களும் அவர்களைக் கோழையாக்கிவிட்டன. தமிழ் மரபின் பழைய வீரத்தை அவர்கள் அடைந்தால் தான் சமத்துவம் மலரும்"*
>
> (புதுவைச்சிவம் 1945: முன்னுரை)

என்ற நோக்கத்தில் அதற்காகத் தமிழ் இலக்கியத்தைச் சான்றாக முன்னிறுத்தும் முயற்சியாகவே இந்நூலை இயற்றியிருக்கிறார் புதுவைச்சிவம். பெண்களின் வீரத்தைப் பெண்ணுரிமை என்ற கண்ணோட்டத்திலேயே இதில் புதுவைச்சிவம் கையாண்டுள்ளார்.

*''....நாட்டு நிலையில் பெண்கள் நாட்டம் கொள்ளவேண்டும். தமிழர் சமுதாயத்தின் மானம் மீட்சியடைய இன்றைய தமிழ்ப் பெண்கள் முன்வந்து உழைக்கவேண்டும். சமத்துவ உரிமை ஓங்கவேண்டும் என்பவையே இந்நூற் பயன்''*

(புதுவைச்சிவம் 1945: முன்னுரை)

என்று நூலின் முன்னுரையில் புதுவைச்சிவம் குறிப்பிடுகிறார். பெண்ணுரிமை குறித்த கொள்கையில், பெண்கள் தம் சுய மரியாதையைக் காப்பாற்றிக் கொள்வதும் பெண்ணுரிமைக்குத் தகுதியுடையவர்களாகத் தம்மை ஆக்கிக் கொள்வதுமே தலையானவை என்று பெரியார் குறிப்பிட்டார். திராவிட இயக்கத்தின் இந்தக் கொள்கைகளின் அடிப்படையில்தான் இந்நூலும் எழுதப்பட்டுள்ளதாக இந்நூலின் முன்னுரையில் புதுவைச்சிவம் குறிப்பிடுவதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

**காதலும் கற்பும்**

வாழ்க்கைத் துணை நலம் பகுதியில் இருபாலரையும் சமமாகப் பாவித்து வேறு சில இடங்களில் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று திருவள்ளுவர் பெண்மையைப் புகழ்ந்தாலும், அவரது கற்பு நிலையும், பரத்தமை குறித்த அவரது கருத்தும் திராவிட இயக்கத்தினரின் விமர்சனத்திற்கு உள்ளாயின. மகளிர் குறித்த திருவள்ளுவரின் குறட்பாக்களை நீக்கிவிட வேண்டுமென்று பெரியார் கூறினார். மகளிர்க்கான கற்பு நெறியை ஏற்காத பெரியார் அது ஆண்களின் சுயநலம் என்றும் சூழ்ச்சி என்றும் அறிவித்தார். அன்றைய காலக்கட்டத்தில் கற்பு குறித்த பெரியாரின் கருத்துக்களை அன்றைய சமுதாயமே குறிப்பாகப் பெண்களே ஏற்காத நிலையில் இக்கருத்தைப் பரப்பத் திராவிட இயக்கத்தினர் பெரிதும் பாடுபட்டனர். இதை வலியுறுத்துவதற் கென்றே இக்கவிதை நூலைப் புதுவைச்சிவம் இயற்றி யிருப்பதாகக் கொள்ளலாம்.

> *''....கற்பு என்ற மறநெறியொன்றைக் கடவுளின் பெயரால் புகுத்தினர். இதனை யொப்பிய தமிழர் சமுதாயம் வீழ்ந்தது. ஆரியர் தம் நோக்கத்தில் வெற்றி கண்டனர்''.*

என்று புதுவைச்சிவம், 1946 ஆம் ஆண்டில் வெளியிட்ட தனது 'காதலும் கற்பும்' நூலின் முன்னுரையில் குறிப்பிடுகிறார். மேலும் காதல் மணத்தையே அவர் பெரிதும் வலியுறுத்துகிறார்.

> *''....இனியேனும் தமிழர்கள் அறிவுக்கொவ்வாத கற்பு நெறியைக் கைவிட்டுக் காதலின் உயர்வையும் கற்பின் உண்மையையும் உணர்ந்து, வாழ்வில் வளம் பெற்று உயர் நிலையடைய வேண்டும்''.*

என்றும் அந்நூல் முன்னுரையில் அவர் குறிப்பிடுகிறார். இதில் கற்பு நெறியைக் கைவிட வேண்டும் என்று குறிப்பிடும் அவர் 'கற்பின் உண்மையையும் உணர்ந்து' என்ற தொடரையும் கையாண்டிருக்கிறார். ஆரியர் வழிவந்த கற்புநெறி, தமிழர் வழிவந்த கற்புநெறி என்று பகுத்துப் பார்க்கும் விளக்கமும் அவரது அம்முன்னுரையில் காணப்படுகிறது. அம்முன்னுரையில்,

> *''....அக்காலத்தில் தமிழர்களிடையே கற்பு நெறி இருந்ததில்லையா எனின், காதல் பற்றிய களவு, கற்பு என்ற இரண்டைத் தவிர, வேறு கற்பு என்று - அதுவும் பெண்கள் மட்டும் பின்பற்றி ஒழுக வேண்டுமென்ற மறநெறியொன்று இருந்ததில்லை''.*

என்றும் கூறுகிறார் புதுவைச்சிவம்.

இந்நூல் முழுமையாகக் காதல் மணத்தையே வலியுறுத்து கின்றது. இதன் மூலம் சாதி மறுப்புத் திருமணம் என்ற திராவிட இயக்கக் கொள்கையினைத் தமிழ்ச் சமுதாயம் ஏற்க வைக்க முடியும் என்ற நம்பிக்கையின் பின்னணியையும் இந்த நூலின் வழி அறிந்து கொள்ளலாம். திராவிட இயக்க இதழ்களில் சாதி

மறுப்புத் திருமணம் செய்து கொள்ள முன்வந்த ஆண்கள், பெண்கள் பற்றிய தகவல்கள் கொடுக்கப்பட்டு, விரும்பியவர் களுக்குச் சீர்திருத்தத் திருமணங்கள் நடத்திவைக்கப்பட்டன. புதுவைச்சிவம் பொறுப்பாசிரியராக இருந்து நடத்திய 'புதுவை முரசு' இதழில் இதற்கான அறிவிப்புகளும் திருமணம் நடந்த செய்திகளும் வெளியிடப்பட்டுள்ளன.

## காவியங்கள் வெளிப்படுத்தும் சமூகப் பார்வைகள்

### கைம்மை வெறுத்த காரிகை

இக்காவியம் எழுதப்பட்டு நூலாக வெளிவந்த காலத்தில் (1945) விதவையரின் துயர நிலை சமுதாயத்தின் சீர்கேடாக திராவிட இயக்கத்தால் முன்வைக்கப்பட்டது. இளம் வயது விதவையர்களின் எண்ணிக்கை மிக அதிகம் என்ற கணக்கு தரப்பட்டிருக்கிறது. 1921 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி இந்தியாவில் ஒன்று முதல் பத்து வயதுக்குக் கீழ்ப்பட்ட விதவைகள் 96, 929 என்றும், மொத்த விதவைகள் 2, 63, 788 என்றும் பெரியார் குறிப்பிட்டார் (வே. ஆனைமுத்து 1974:138). விதவைகள் துயர் குறித்துத் திராவிட இயக்கம் பெரும் சமுதாய விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்தது. பாரதிதாசனின் பல பாடல்கள் விதவைத் துயரினை வெளிப்படுத்தும் விதத்தில் இக்காலத்தில் எழுதப்பட்டன. கொடுமையான இவ்விதவைத் துயரை வேடிக்கை பார்க்கும் சமுதாயம் அறிவுடைமை அற்றது என்பதும் இந்நிலையைத் தமிழ்ச் சமுதாயம் அடைய ஆரியமே காரணம் என்பதும்தான் புதுவைச்சிவத்தின் கருத்தாக இக்காவியத்தில் பிரதிபலிக்கின்றது.

கணவன் பூதப்பாண்டியன் இறந்ததனால், 'மிக்க துன்புடைய வைதய்வக் கடலில் வீழ்ந்து துடித்திடுதல் நான் சகியேன்' என அவன் மனைவி பெருங்கோப்பெண்டு உடன்கட்டை ஏற முடிவெடுக்கிறாள். வைதய்வக்கொடுமை அரசியையும் விட்டு வைக்காது என்று தெளிவுபடுத்தும் புதுவைச்சிவம், அக்கொடுமை பற்றி விளக்கும் முகமாக,

140. ''உலகத்தில் உழல்கின்ற கொடுமை யாவும்
ஒருருவாய்த் திரண்டதெனில், அதுதான் மாதர்
நலனழித்துச் சீரழிக்கும் விதவை யென்னும்
நஞ்சன்றி வேறுண்டோ? அதனை யுண்டோர்,
பலர்பழிக்கும் ஆளாகா திருப்பதுண்டோ?
பல்சுவையூண் உடையுண்டோ? அணிகளுண்டோ?
தலைசீவி முடிப்பதுண்டோ? திலக முண்டோ?
சாற்றிடுநற் சுகவாழ்வு பெறுவ துண்டோ? ''

(புதுவைச்சிவம் 1945:9)

என்று அரசியின் வாயாலேயே சொல்ல வைக்கிறார். விதவைத் தன்மையை விட எரிதழலை உவந்து ஏற்றுக் கொள்ளும் நிலைமையைப் புதுவைச்சிவம்,

141. ''சீரிழக்கும் எனக்கோ இவ் வீமத்தீயும்
அரும்பலர்ந்த தாமரைசேர் குளிர்நீர் கொண்ட
ஆழ்குளமும் ஒன்றாகும்''

(புதுவைச்சிவம் 1945: 10)

என்ற அரசியின் வாக்கு மூலமாக வைதய்வத்தின் கொடுமையைச் சுட்டுகிறார். விதவைக் கொடுமையைச் சுட்டும் பெரியார், 'இத்தகைய படுமோசமான விதவைத் தன்மையை எந்த நாகரிக உலகம் ஏற்கும்?' என்றும் வினவினார். ஒரு கட்டத்தில் மிகவும் மனம் வெறுத்துப்போய், பெண்கள் உடன்கட்டை ஏறுதலே அவர்களின் துயர் துடைக்கும் வழி என்றார் பெரியார். அதாவது, 'உயிருடன் சுடப்பட்ட பெண்ணுக்கு ஒரு மணி நேரந்தான் கஷ்டம் இருந்திருக்கக் கூடும்' என்றும், 'உயிரோடு ஆயுள்காலம் முழுவதும் சித்திரவதையை விநாடி தோறும் அனுபவிப்பதைவிட ஜீவகாருண்யத்தை உத்தேசித்து உடன் கட்டை ஏறும் வழக்கத்தைப் புதுப்பிக்கலாம்' என்றும் அவர் எதிர்மறையாகக் கூறினார் (வே.ஆனைமுத்து 1974:136-140).

இக்கருத்தை முழுவதும் உள்வாங்கிய புதுவைச்சிவம், இக்கொள்கையைப் பரப்பவும் வலியுறுத்தவும் இயற்றிய நூலே கைம்மை வெறுத்த காரிகை எனலாம். இந்த எதிர்மறையான

கருத்தைப் புதிய சிந்தனையாகக் கூறுவதை விட, இதற்குப் பழந்தமிழ் மரபிலிருந்தே சான்றுதேடி, புறநானூற்றுப் பாடல் ஒன்றின் மூலம், தமிழர் விதவைத் தன்மையை ஏற்றுக் கொள்வதில்லை என்பதையும், விதவைத் தன்மைக்கு மாற்றாவது ஒன்று மறுமணம் அல்லது மரணம் என்பதையும் விளக்குவதே இந்நூலின் நோக்கமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

> *''....கணவன் இறந்தபின் மனைவியைக் கைம்மைத் துயரில் ஆழ்த்துவது ஆரியர் கண்ட முறையாகும். விதவையென்னும் ஓர் கொடுங் கட்டுப்பாடு பழந்தமிழர்களிடையே இருந்ததா என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை. ஆரியரின் பழக்க வழக்கங்களைத் தமதாகக் கொண்ட பிற்காலத் தமிழர்கள் அன்புள்ளம் இழந்து, அக்கொடுமையைத் தங்கள் பெண்கள் மீதும் சுமத்தி விட்டனர்''*

(புதுவைச்சிவம் 1945: முன்னுரை)

என்பதுதான் புதுவைச்சிவத்தின் கருத்தாக, அவராலேயே அந்நூல் முன்னுரையில் குறிக்கப்படுகிறது. மேலும், கைம்பெண் நிலை கூறப்பட்டிருக்கும் புறநானூற்றுப் பாடலை விளக்கிக் கூறுவதற்காகவே இந்நூலை எழுத முன்வந்ததாகக் கூறும் அவர், முன்னுரையின் இறுதியாகச் 'சீர்திருத்தத்தில் ஆர்வமுடையவர்கள், இக்கொடுங் கட்டுப்பாட்டை உடைத்தெறிய முன் வருவராக' என்றும் நேரடியாக அழைப்பு விடுத்திருக்கிறார். திராவிட இயக்கத்தினரின் இந்த அழைப்பினை ஏற்றுப் பல இளைஞர்கள் விதவைகளை மறுமணம் செய்துகொண்ட செய்திகள் அவ்வியக்க இதழ்களில் காணக்கிடக்கின்றன.

## மறக்குடி மகளிர்

### படைக்குப் பிந்திய பதரோ என்மகன்

பெண்கள் அச்சவுணர்வு மேலீட்டினால் சமுதாய நிகழ்வுகளில் சரிவரப் பங்கு கொள்ளாமலும் நாட்டின் நிலையில்

அக்கறை சிறிதுமின்றியும் இருப்பதால்தான் பெண்ணடிமை நிலவுவதாகப் புதுவைச்சிவம் எடுத்தியம்புகிறார். சங்க காலத்தில் வாழ்ந்த மகளிர் வீரம் செறிந்தவர்களாகவும், நாட்டு நலனிலும் பாதுகாப்பிலும் அக்கறை கொண்டவர்களாகவே வாழ்ந்திருந் தனர் என்றும் கூற முற்படும் புதுவைச் சிவம், தன் கருத்துக்குச் சான்றாகச் சங்க இலக்கியத்தையே கையாண்டுள்ளார்.

நாட்டின் பாதுகாப்பில் மகளிரின் அக்கறையை வலியுறுத்தும் வகையில் இப்பாத்திரப் படைப்பைப் புதுவைச்சிவம் இயக்கக் கொள்கைகளுக்கேற்ப மாற்றியிருக்கிறார். 'மறக்குடியின் மானத்தைக் காத்து வந்த கிழவி தன் மகன் புறமுதுகுண்டான்' என்ற செய்தியைக் கேட்டவுடன்,

142. *''ஒப்பற்ற என் குடியின் வீரம் இந்நாள்*
*ஒளியிழந்து குன்றிடவும் ஆச்சா''*

(புதுவைச்சிவம் 1945: 5)

என்று புலம்பித் தான் கேள்விப்பட்ட செய்தி உண்மையானால், அவனுக்குப் பாலூட்டிய தன் தனங்களை அறுத்தெறிவேன் என்று சூளுரைத்து, 'இக்கிழவியின் வீரந்தான் என்னே' என்று மற்றையோர் வியக்க, போர்க்களம் நாடிச் செல்கிறாள். போர்க் களத்தில் தன் மகன் வீரமரணம் எய்தியதைக் கண்ணுற்ற அக்கிழவி,

143. *''உன்னையான் இழந்ததற்கே உளந்துடிக்கின்றேனும்*
*மன்னியப் புகழை நோக்க மனமுவக்கின்றேன்''*

(புதுவைச்சிவம் 1945: 9)

என்றுகூற, அங்கிருந்த வீரனொருவன் 'அம்மணி உங்கள் வீரம் அளவிறந்ததுவாம்' என்று பாராட்டுகிறான். பின்னர் அரசவையிலும் அக்கிழவி அனைவராலும் பாராட்டப் பெறுகிறாள்.

144. *''நாட்டில் வீரம் அமைந்திட, அறிவில் தேர்ந்தே*
*தீதிலா வாழ்வு பெற்றுச் சிறந்திட''*

(புதுவைச்சிவம் 1947: 12)

இக்காவியத்தைப் படைத்திருக்கும் புதுவைச்சிவம், இக்காவிய உருவாக்கத்தின் செய்தியாக,

*145. "அந்த நல்நரைமூ தாட்டி, அமைந்திடும் வீரம்போலச்*
*சந்ததம் நாமும் பெற்றுத் தனிப்புக ழெய்த வேண்டும்*
*சிந்தையில் அச்சங்கொண்டால்*
*சிறுமையே யடைவோம்! பின்னர்*
*வெந்துயர் வாழ்வு நேரும்! வீண் பழி நம்மைச் சாரும்!*
(புதுவைச்சிவம் 1945: 11)

என்று கூறுகிறார். சிந்தையில் அச்சம் நீங்கிய வாழ்வை மகளிர்க்கு ஆற்றுப்படுத்துவதையே இக்குறுங்காவியத்தின் முதல் இயல் வெளிப்படுத்துகிறது.

**சிங்கமனார் வழிவந்த சிங்கமன்றோ என் சிறுவன்**

மறக்குடி மகளிர் காவியத்தில் இரண்டாவதாக இடம் பெற்றிருக்கும் இவ்வியல் தன்னலங்கருதாது நாட்டுநலனுக்காகத் தன் குடும்பத்தையே அர்ப்பணிக்கும் சமூக உணர்வினைத் தூண்டுவதாக அமைக்கப்பட்டுள்ளது.

போர்க்களத்தில் முதல் நாள் தன் தமையனையும், இரண்டாம் நாள் தன் கணவனையும் இழந்த பாண்டி நாட்டுப் பெண்ணொருத்தி, தன் ஒரே சொந்தமாக எஞ்சியிருக்கும் சிறுவனான தன் மகனையும் போருக்கனுப்பத் துணிகிறாள்.

*146. "இந்நாட்டைப் பகைவரவர் வெற்றி கொண்டால்*
*என்னாகும் நம் நிலைதான்? அடிமை வாழ்வும்*
*இழிநிலையும் நமைவந்து சூழ்ந்திடாதோ?*
*மன்னிய நம் உரிமையெலாம் மாய்ந்த பின்னர்*
*மானமற்ற வாழ்வெதற்கு?"* (புதுவைச்சிவம் 1945: 26)

என்று அதற்கான காரணத்தையும் கூறுகிறாள்.

வீட்டுப் பிரச்சினைகளில் மட்டுமே மகளிர் உழல வேண்டும் எனும் நிலையிலிருந்து விடுபட்டு நாட்டுப் பிரச்சினையிலும் தங்கள் பங்களிப்பைச் செவ்வனே செய்ய வேண்டுமென்ற கருத்தையே புதுவைச்சிவம் இக்கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

147. ''நாட்டிற்கு வந்திட்ட ஆபத் தென்று
நாமெல்லாம் ஒரு சிறிதும் கவலையின்றி
வீட்டிற்குள் அடைபட்டுக் கிடந்து விட்டால்
வெற்றியது கிடைத்திடுமோ?''
(புதுவைச்சிவம் 1945: 26)

என்று மகனைப் போருக்கனுப்பும் பெண் மூலமாகவே விளக்கியுள்ளார்.

148. ''வாட்டுகின்ற பகைவீழ்த்த உதவிடாமல்
வாழுகின்ற மாதர்குலம் இருத்தல் நன்றோ''
(புதுவைச்சிவம் 1945: 26)

என்று அவள் பெண்ணுலகை நோக்கிக் கேட்பது சமகாலத்திய பிரச்சினையில் பெண்களும் பங்கெடுக்கவேண்டும் என்ற அவாவின் மிகுதியால் என்ற கருத்து ஏற்கத்தக்கதே.

பெண்களுக்கு நாட்டு நலனில் அக்கறை வேண்டும், அச்சமின்றி வீரத்துடன் வாழவேண்டும் என்று வலியுறுத்தும் இக்காவியத்திலும் புதுவைச்சிவம் விதவைத்துயர் குறித்தான கருத்துக்களை வாய்ப்புக் கிடைக்கின்ற இடத்திலெல்லாம் வலியுறுத்துகிறார். தன் கணவனைப் போரில் இழந்து துயருறும் இக்காவிய நாயகி,

149. ''இகமுறும் வாழ்வை நீதான்
இன்றெனக் களித்த தென்னே?''
(புதுவைச்சிவம் 1945: 18)

என்று விதவைக் கொடுமையை நினைத்து, இழந்துபோன கணவனிடம் கேட்பதுபோல் கவிதையை அமைத்திருக்கிறார். மேலும் விதவைத் தன்மை எனும் சமுதாயச் சீர்கேட்டின் தன்மையை விளக்கவும் முற்படுகிறார்.

150. ''அஞ்சுக வாழ்விழந்தேன் அகிலமும் பாழ் எனக்கு
விஞ்சிய இன்ப மெல்லாம் வேம்பென விலகி நிற்கும்
வெஞ்சொலும் துயரும் ஏற்று வீணிலே வாழேன்''
(புதுவைச்சிவம் 1945: 21)

என்று கைம்மைத் துயரை இக்காவிய நாயகியின் வெளிப் பாடாகப் புதுவைச்சிவம் அமைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**அவனையீன்ற என் வயிறு புலிதங்கிச் சென்ற குகைபோல**

நாட்டு நலனில் மகளிர் அக்கறை கொள்ளும் விழிப்புணர்வை ஏற்படுத்தக்கூடிய வகையில் மறக்குடி மகளிர் குறுங்காவியத்தின் மூன்றாவது இயல் அமைக்கப்பட்டுள்ளது.

151. *"நாட்டில் நேர்ந்திடும் காரியத்தில்*
*நாரியர் நாட்டமின்றி இருந்திடில்*
*நன்மையுண்டோ? "* (புதுவைச்சிவம் 1945:31)

என்ற கேள்விக்கான விடையைச் சங்கப் பாடலின் பின்னணியில் தெரிவிக்கிறார் புதுவைச்சிவம். போர் நடக்கின்ற வேளையில் சேர நாட்டுப் பெண்ணொருத்தி தன் தோழியிடம் இக் கேள்வியைக் கேட்கிறாள். அதற்கவள் நாட்டு நலனில் தனக்கிருக்கும் அக்கறையை வெளிப்படுத்தும் விதமாகத் தன்மகன் போர்க்களத்தில் எங்காவது இருப்பான். ஏனெனில், அவனை ஈன்ற என் வயிறு புலி தங்கிச் சென்ற குகைபோல என்று பதிலிறுக்கிறாள். பகைமையை எதிர்த்துப் போராடப் பாலோடு வீரத்தை ஊட்டுவதும் வீரம் கொடுப்பதும் தமிழர்தம் நாட்டம் என்றும் இப்படிப்பட்ட வீரத்தை மகளிர் பெற்றால் துன்பவாழ்வு நீங்கி இன்ப வாழ்வடையலாம் என்பதும் புதுவைச்சிவம் கருத்துகளாக அமைகின்றன.

152. *"பழந்தமிழ்ப் பெண்கள் பாலோடு வீரப் பாலைக்*
*குழந்தைகட்கூட்டி வந்தே கோதிலாப் புகழை ஏற்றார்!"*
(புதுவைச்சிவம் 1945: 33)

என்று சங்ககால மகளிரைச் சுட்டிக் காட்டும் புதுவைச்சிவம்,

153. *"விழுமிய பெண்கள் கொள்ளும் வீரமே நாட்டின் வீரம்*
*அழிவதும் பெண்ணால் மற்றும் ஆவதும்*
*பெண்ணாலன்றோ?*
*பழுதிலா வாழ்வு காக்கப் பாவைமார் முன்னே வந்தால்*
*எழுந்திடும் வீரம்..."* (புதுவைச்சிவம் 1945: 33)

என்பது அவருடைய சம காலப் பெண்களுக்கு அவர் விடுக்கும் செய்தியாக அமைந்திருக்கிறது. பெண்ணுரிமைக்காகப் பெரிதும் குரல் கொடுத்த புதுவைச்சிவம், இந்த இயலிலும் விதவையர் நிலை குறித்த சமூகப் பார்வையை வலிந்து புகுத்தியிருக்கிறார். போர்க்களம் சென்ற தனது கணவனின் நிலை குறித்துத் தன்னில்லத்து முன்றிலில் தூணைப்பற்றிக் கொண்டு கலங்கி நிற்கும் ஒரு பெண்ணின் நிலையைக் கூற வந்த புதுவைச்சிவம்,

154. *''மென்மயிர்க் கூந்தல் நீக்கி வெண்ணிற ஆடை பூண்டு*
*கொன்னுறும் அல்லியின் காய் உணவெனக் கொண்டு,*
*நாதன்*
*தன்னையே எண்ணி ஏங்கித் தவித்திடும் விதவைபோல''*
(புதுவைச்சிவம் 1945: 30)

அவளிருந்தாள் என்று கவிதை வடித்திருப்பதன் மூலம், விதவைத் தன்மையின் கொடுமையை இயன்ற வரை பரவலாகப் பயன்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.

இக்குறுங்காவியத்தின் மூன்று இயல்களுமே, பெண்கள் நாட்டு நலனில் அக்கறையும் விழிப்புணர்வும் கொண்டு நாட்டைக் காக்க முன்வருதல் வேண்டும் என்ற அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன. இதற்கான சான்றை வேறு உலக வரலாறுகளிலிருந்து எடுத்துக்காட்டாமல், பண்டைத் தமிழரின் வாழ்விலேயே இப்படிப்பட்ட வீரமிக்க மகளிர் இருந்திருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டுவதே அவரது நோக்கமாக இருந்திருக்கிறது. அதற்காகத் தமிழிலக்கியத்தின் சங்கப்பாடலைத் தனது கருத்துக்குச் சான்றாகக் கொள்கிறார் அவர். அவர் வாழ்ந்த காலத்தில் சங்க காலத்தில் நடைபெற்றதைப் போலப் போர்கள் மூலம் வாய்ப்பில்லா நிலையில், புறநானூற்று மகளிரின் வீரத்தை அவர் வலியுறுத்துவது வெறும் பழந்தமிழ் இலக்கியப் பற்றாக மட்டும் நின்று விடவில்லை.

இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் சமுதாயத்தில் நிலவிய பெண்ணடிமைத் தனத்திற்கு எதிராகப் பெண்களை விழிப்புணர்வு கொள்ள வைக்கும் நிலையைப் புதுவைச்சிவம்

மேற்கொண்டிருப்பதை இதன் மூலம் தெளிய முடிகிறது. அஞ்சா நெஞ்சம் கொண்ட மகளிரை அடுப்பங்கரையில் ஒடுக்கியவை புராண இதிகாசக் கற்பனைக் கதைகளும் மனு முதலிய அதர்ம சாத்திரங்களும் என்று இந்நூல் முன்னுரையில் அவரே குறிப்பிடுகிறார். பெண்கள் போராடும் துணிவிற்கு இச்சிறுநூல் வழிகாட்டியாக இருக்குமானால் அதுவே இந்நூற் பயனுமாகும் என்று வெளிப்படையாகவும் அம்முன்னுரையில் அவர் தெரிவித்துள்ளார்.

குறிப்பாக இந்தித் திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சி தமிழ் நாட்டில் முதன் முதல் எழுந்த காலத்தில் (1938) பெண்களும் இப்போராட்டத்தில் ஈடுபட வேண்டும் என்று திராவிட இயக்கத்தினர் விரும்பினார்கள். அவர்களது ஈடுபாட்டின் காரணமாகப் பல பெண்களும் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டனர். பலர் சிறைத் தண்டனையும் பெற்றனர். இந்நிலையைக் கவிதையில் வடித்த புதுவைச்சிவம்,

155. *"செந்தமிழ்ச் செல்விகாள், தாயர்காள் நீங்கள்*
*சிறைச்சாலை யேகவில்லை! தீமையெலாம் வீழ்த்த*
*அறச்சாலை தான் ஏகினீர்!"* (புதுவைச்சிவம் 1946:18)

என்று வரவேற்கிறார். அதே காலக்கட்டத்தில்தான் மறக்குடி மகளிர் என்னும் இக்குறுங்காவியமும் இயற்றப்பட்டதாக அந்நூல் முன்னுரையின் தொடக்கத்திலேயே புதுவைச்சிவம் குறிப்பிட்டுத் தமிழுணர்வும் புராணக் கற்பனைகளுக்கு எதிரான போக்கை உருவாக்கும் நிலையுமே இந்நூல் படைக்கப் பட்டதன் காரணம் என்றும் விளக்கமளித்திருக்கிறார்.[9]

திராவிட இயக்கம், பெண்ணுரிமைப் போருக்குப் பெண்களைத் தயார் படுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகளின் விளைவே புதுவைச்சிவம் இயற்றிய இக்குறுங்காவியம் என்று கொள்வதும் அதற்காக அக்காலக்கட்டத்தில் எழுந்த தமிழுணர்வைச் சங்க இலக்கியப் பாடல்களின் துணையோடு கிளர்ந்தெழ வைத்துத் தான் சார்ந்த இயக்கக் கொள்கைப்

பரவலையும் கூடவே கையாண்டிருக்கிறார் அவர் என்று கொள்வதும் பொருத்தமாகவே படுகின்றன.

**காதலும் கற்பும்**

காதல் மணமே தமிழரின் உன்னத வாழ்விற்கு அடிப்படை என்றும் இடைக்காலத்தில் ஆரியர் வருகையால் தவறாகச் சித்திரிக்கப்பட்ட காதல் மணம் தமிழர் நோக்கில் தவறான வழியல்ல என்று நிறுவும் நோக்கில் இந்நூல் இயற்றப்பட்டதாக இதன் முன்னுரையில் புதுவைச்சிவம் குறிப்பிடுகிறார்.

156. ''*பாரது வியக்கும் வண்ணம் படைத்த அப்பழங்கீர்த்*
*திக்குக்*
*காரணம் என்னவென்றே கருதிடின், அக்காலத்தோர்*
*ஈருள்ம் ஒன்றுகின்ற இயற்கையாம் காதல் வாழ்வைச்*
*சீரிய முறையிற் கண்ட திறத்தினால்...*''
(புதுவைச்சிவம் 1946 : 5 )

என்று அழுத்தந்திருத்தமாகக் குறிப்பிடும் புதுவைச்சிவம், 'மாநிலம் யாவும் போற்ற அதிபுகழொளி வீசிப் பின் ஆரிருள் அடைந்த' தமிழ்நாட்டின் நிலையைக் கூறி, அதற்கான காரணம் தமிழர் வாழ்வில் சேர்ந்துள்ள மூடக்கொள்கை, பொய்நெறி வழக்கம், சாதி, மதம் என்றும் அந்நெறியை விளைத்தோர் ஆரிய மாந்தர் என்றும் தமிழ்ச் சமுதாயம் அடைந்த நிலை குறித்துத் தனது கருத்தை அமைத்திருக்கிறார்.

ஆடு, மாடு ஓட்டிப் பிழைக்க வந்த ஆரியர், தமிழர் வாழ்வில் சிறந்திருந்த காதல் வாழ்வை அழிப்பதற்காகவே கற்பென்னும் நெறியைப் புகுத்தினர் என்ற கருத்தை முன்வைக்கிறார் புதுவைச்சிவம். தலைவனோடு உடன்போக்கு ஏகிய தலைவியைத் தேடி அலையும் செவிலித் தாயிடம், அன்புடைக் காதல் வாழ்வே அறநெறி என்று தமிழ் அந்தணர்கள் அறிவுறுத்துவதாகவும் தன் கருத்தைக் கூறுகிறார் புதுவைச் சிவம். பெண்களுக்கு மட்டும் உரியதாகிய கற்புநெறி என்பது ஆரியரால் திணிக்கப்பட்டது என்று கூறும் புதுவைச்சிவம்,

'தன்மனக் கினியரோடு சார்வதே உண்மைக் கற்பு' என்பதுதான் பண்டைத் தமிழரின் காதல் நெறி என்று தமிழ் அந்தணர்கள் அறிவுறுத்துவதாகவும் கூறுகிறார். அதே நேரம் சங்க இலக்கியத்தில் அந்தணர் எனக் குறிக்கப் பெறுவோர் தமிழர் என்றும் அவர்கள் ஆரியப் பார்ப்பாரல்லர் என்றும் அதனால்தான் அவ்வந்தணர் காதல் வாழ்வை ஆதரிக்கின்றனர் என்றும் காவிய நிறைவில் விளக்குகிறார் புதுவைச்சிவம். இவ்வாறு காதல் வாழ்வை ஏற்கும் அந்தணர் என்போரைத் தமிழர் என்பது தன் கருத்து என்பதையும் இந்நூல் முன்னுரையிலேயே குறிப்பிட்டு விடுகிறார் புதுவைச்சிவம். சங்க இலக்கியத்திலும் அவ்வாறுதான் இக்கருத்து அமையப்பெற்றது என்பதையும்,

> *''....இத் தமிழகத்தின்கண் ஆரியப் பிராமணர் என்போர் அறநெறிப் போதகராக ஆகி மக்களிடம் செல்வாக்கும் பெற்றிருப்பதை யறிந்து தம் கூற்றைத் தமிழ் அந்தணர் வாயிலாகத் தமிழருக்கு அறிவுறுத்தி யுள்ளனர் என்பதே அச்செய்தி பற்றிய என் சொந்தக் கருத்தாகும்.''*
>
> (புதுவைச்சிவம் 1945: 4)

என்று இக்காவிய முன்னுரை மூலம் கூறுகிறார் புதுவைச்சிவம்.

கற்பு என்னும் நெறி ஆணாதிக்கத்தின் வெளிப்பாடே என்று இந்தியப் பெண்ணுரிமை இயக்கங்கள் வெளிப்படையாகப் போராடத் துவங்கிய காலத்துக்கு முன்பே, அறிவுக் கொவ்வாத கற்பு நெறியைக் கைவிடவேண்டும் என்ற கருத்தைப் புதுவைச்சிவம் வலியுறுத்தி இருப்பது நோக்கத்தக்கது. இக்கருத்தையே தமிழ் இலக்கியங்களும் கூறியிருக்கின்றன என்று தான் சார்ந்த இயக்கத்தின் கொள்கைக்காகச் சங்க இலக்கியப் பாடல்களைச் சான்றாக்குவதன் மூலம், அவர் காலத்திய சமூகத்தை மறுமலர்ச்சிக்கான இலக்கை நோக்கி ஆற்றுப்படுத்தும் நோக்கம் தெளிவாக்கப்படுகிறது.

காதலும் கற்பும் என்ற தலைப்பில் அமைந்திருக்கும் இக்குறுங்காவியத்தில் கூட ஆரியர்களின் தன்மையைப் பற்றியும் அவர்களின் கபட நாடகத்தில் தமிழ் அரசுகள் மதிமயங்கித் தமிழர்நாடு இழிநிலைமை அடைந்தது என்ற தமதியக்கக் கருத்தையும் அவர் பரவலாகவும் காவியத்தின் அடிப்படைக் கருவுக்குக் காரணமாகவும் கருதி மதிப் பிட்டிருப்பது நோக்கத்தக்கது.

# கவிதைக் கதைகள்

ஒரு கதைக்கருவை எடுத்துக் கொண்டு அதைக் கவிதை நடையில் சொல்லும் உத்தி தமிழ் இலக்கியங்களிலும் கையாளப் பட்டுள்ளது. இருபதாம் நூற்றாண்டில் எளிமைப் படுத்தப்பட்ட கவிதை நடை இவ்வுத்திக்கு மேலும் வளமளித்தது. பாரதிதாசன் இவ்வுத்தியைப் பயன்படுத்தி, 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்', 'புரட்சிக்கவி' போன்ற கவிதைக் கதைகளைத் தந்திருக்கிறார். இந்த வழியில் புதுவைச்சிவமும் பல கவிதைக் கதைகளை இயற்றியிருக்கிறார். அவற்றுள் அளவில் பெரியதான மூன்று கவிதைக் கதைகள் மட்டும் இங்கே ஆய்வுக்கு எடுத்தாளப் படுகின்றன. மறுமலர்ச்சிக் கவிதைகள்(1946) கவிதைத் தொகுப்பினில் 'ஆய்ந்து பார்ப்பீர்', 'அவர்கள் வாழ்வு', 'உண்மைக் காதல்' என்ற மூன்று கவிதைக் கதைகளும் இடம் பெற்றுள்ளன.

## கதைப்போக்கும் நோக்கமும்

### ஆய்ந்து பார்ப்பீர்

கவிஞர் ஒருநாள் இசைப்பாடல் எழுதச் சோலைக்குச் செல்கிறார். சோலையில் தங்களுக்குள் உரையாடிக் கொண்டிருந்த பறவைகளைப் பார்த்த கவிஞர் அவை என்ன பேசுகின்றன என்பதைக் கேட்க அங்கிருந்த மேடையில் அமர்கிறார். முதலில் தங்கள் பேச்சை நிறுத்திய பறவைகள், பின்பு வந்தமர்ந்த மனிதனைப் பற்றிய தங்கள் எண்ண ஓட்டத்தை வெளியிடுகின்றன. மூடநம்பிக்கை கொண்டவன் என்றும் பெண்ணடிமை கொள்பவன் என்றும், காதல் வாழ்விழந்து துன்பத்தில் மூழ்கித் துயர் கொள்பவன் என்றும், தன்முயற்சியை நம்பாமல் தெய்வச் செயலை நம்புபவன் என்றெல்லாம் கேலிசெய்து, நாட்டை இழந்து நலனொன்றுங் காணாமல் கேட்டையடைவோன் என்றும் பரிதாபம் கொள்கின்றன.

இவற்றையெல்லாம் கேட்டுக் கோபமுற்றாலும் மனம் வருந்திச் சோர்வுடன் வீடு நோக்கித் திரும்பும் போது, 'மூடச் செயலில் மூழ்கியிருக்கும் வரை எவ்விடுதலையும் கிட்டாது' என ஓர் பறவை எள்ளி நகையாடுகிறது. இதைக் கேட்டு வீடுவந்த கவிஞர் இந்த அனுபவத்தையே கவிதையாக்கி 'இதற்கு உங்கள் பதிலென்ன?' என்று நுகர்வோரிடம் கேள்வி கேட்டுக் கதையை முடிக்கிறார்.

'ஆய்ந்து பார்ப்பீர்' என்ற தலைப்பிலான கவிதைக் கதை ஒரு புதுமையான போக்கைக் கொண்டிருக்கிறது. மனிதர்களிடம் மலிந்துள்ள மூடப்பழக்க வழக்கங்கள் குறித்தும் தன்மான மிழந்திருக்கும் நிலை குறித்தும் ஒன்றின்மீது ஒன்றாக அடுக்கடுக்கான பல குற்றச்சாட்டுகள் இக்கதை முழுவதும் முன்வைக்கப்படுகின்றன. அப்படி முன்வைக்கப்படும் குற்றச் சாட்டுக்களிலேயே அதற்கான தீர்வுகளும் சொல்லப்பட்டுக் கதையின் போக்கைச் சிக்கலில்லாமல் செய்து விடுகிறது. சமுதாயச் சீர்திருத்தத்தை வலியுறுத்தும் போக்கும் கதையின் தொடக்கத்திலேயே உணரவைக்கப் பட்டும் விடுகிறது. கதையின் இறுதியில்,

*157. "மூடச் செயலெல்லாம் முற்றும் ஒழியாமுன்*
*நாடாது தன்னரசு"* (புதுவைச்சிவம் 1946:11)

என்ற அடிகளில் இக்கதையின் முழுமையான நோக்கத்தையும் கவிஞர் வெளிப்படுத்தி விடுகிறார். கதைப் போக்கில் அடுத்தடுத்து முன்வைக்கக்கூடிய குற்றச்சாட்டுகள் குறித்தான எதிர்பார்ப்பு, கதையின் நோக்கத்துடன் பெரிதும் தொடர்பு கொண்டிருப்பதால் கதையின் நோக்கும் போக்கும் இயைந்து சென்று சரியான முடிவைப் படிப்போரின் சிந்தனைக்கு விட்டு விடுகின்றன.

இக்கவிதைக்கதை முழுவதிலும் பறவைகளே முக்கியப் பங்கு வகிக்கின்றன. மனித குலத்தின், குறிப்பாகத் தமிழர்களின் உருவகமாகக் கவிஞனை வைத்துக் கொண்டு ஒவ்வொரு பறவையும் தமிழர்களின் பழக்க வழக்கங்களில் மலிந்திருக்கும்

மூடசெய்கைகளைப் பற்றி மதிப்பீடு செய்கின்றன. சமுதாயச் சீர்கேடுகளனைத்தையும் பறவைகளின் வாயாலேயே சொல்ல வைப்பதுடன், பறவைகள் தங்கள் வாழ்க்கையைத் தமிழரின் வாழ்வோடு ஒப்பிட்டுத் தாங்களே மேலான வாழ்வு வாழ்பவர்கள் என்றும் தமிழர்கள் தங்கள் மூடநம்பிக்கை களினால் தாழ்ந்த வாழ்வு வாழ்கிறார்கள் என்றும் ஆறறிவு மனிதனை எள்ளி நகையாடும் உத்தி இதில் கையாளப்படுகிறது. இதுபோன்று பறவைகள், விலங்குகள் மூலம் மனித குலத்தை மதிப்பீடு செய்யும் உத்தியைப் புதுமுறையான கலைப்புரட்சி என்று குறிப்பிடுகிறார் அறிஞர் அண்ணா (திராவிடநாடு 21.7.1946). இது போன்ற உத்தியைக் கவிஞர் சுரபியும், கவிமணி தேசிக விநாயகமும், மா. சிங்காரவேலரும், பயன்படுத்தியிருப்பதை எடுத்துக்காட்டும் அறிஞர் அண்ணா, இவர்களுக்கு முன்பே பாரதிதாசனும் புதுவைச்சிவமும் இவ்வுத்தியைப் பயன்படுத்திக் கலைப்புரட்சி செய்துள்ளனர் என்று திராவிடநாடு இதழில், தான் எழுதியுள்ள அக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

**அவர்கள் வாழ்வு**

செல்வந்தனான ஒரு வயோதிகன் ஓர் இளம் பெண்ணை இரண்டாம் மணம் செய்து கொள்கிறான். ஒரு நாள் அவனது உறவினனும் நண்பனுமான ஒரு வாலிபன், வயோதிகன் இல்லம் வருகின்றான். அப்போது வரும்வழியில் தான் கண்ட ஒரு குமரியின் அழகைப்பற்றி வருணிக்கின்றான் அவ்வாலிபன். அவளைப்பற்றி அவ்வயோதிகன் விசாரிக்கும் போதில் வயோதிகனின் இளம் மனைவி அங்குவர இவள்தான் என்கிறான் வாலிபன். அவளைத் தன் மனைவி என அறிமுகப் படுத்தும் வயோதிகன், இனி அவள் அலங்காரம் செய்யலாகாது எனக் கட்டளையிடுகிறான். என்றாலும் வயோதிகன் மனதில் அவளைப்பற்றிச் சந்தேகம் எழுகிறது. சந்தேகம் முற்றி நோயாகிப் படுக்கையில் வீழ்கிறான். இந்நிலையில் ஓர் நாள் வயோதிகன் கனவு கண்டு அலறி எழுந்திருக்கும் வேளையில் தன் மனைவியும் அவ்வாலிபனும் பேசிக்கொண்டிருப்பது

கண்டு அலறித் துடித்து வீழ்ந்து மடிகிறான். அவ்விளம்பெண்ணின் துயர் துடைக்க ஆறுதல் சொல்லவரும் அவ்வாலிபனுக்கும் அவளுக்கும் இடையில் காதல் அரும்புகிறது. நாளடைவில் அவர்கள் விரும்பி மணம்புரிந்து கொள்கின்றனர். எங்கடுக்கும் இக்கொடிய அக்கிரமம் என ஊரார் சொல்கின்றனர்.

'அவர்கள் வாழ்வு' கவிதைக்கதை, ஒரு சிறுகதைக்கான கருவைக் காட்டிலும் ஒரு குறுங்காவியத்திற்கான கருவைக் கொண்டிருக்கிறது. இதை விரிவுபடுத்திக் குறுங்காவியமாக்க வாய்ப்பிருந்த போதிலும், ஒரு சிறுகதை அளவுக்குக் குறுக்கும்போது காட்சிகள் மிக வேகமாக நகர்கின்றன. மிகத் தேர்ந்த ஒரு நாடகாசிரியரான அறிஞர் அண்ணாவின் கதைக் கருவை மையமாக வைத்து இக்கவிதை உருவாக்கப்பட்டிருப் பதால் இதன் காட்சி அமைப்புகள் நாடகப் பாணியைப் பெரிதும் ஒத்திருக்கின்றன (சிவ இளங்கோ 1991: 12). இந்த வகையில் கதையின் தொடக்கம், வளர்ச்சி, உச்சநிலை, வீழ்ச்சி, முடிவு ஆகிய நிலைகள் இக்கவிதைக் கதையிலும் காணப்படுகின்றன. கதையின் முடிவைப் படிப்பவர் ஏற்கும் நிலையில் கதை நிகழ்வுகளைக் கொண்டு சென்றாலும், இம்முடிவைச் சமுதாயம் ஏற்பது குறித்தான ஐயப்பாடுகளும் அக்கவிதையிலேயே தெரிவிக்கப்படுகின்றன. கதையின் முடிவு சொல்லும் சீர்திருத்தக் கொள்கைகளை வெளிப்படையாக வைக்காமல், அதை விவாதப் பொருளாகவும் ஆக்காமல் முடிவை மட்டும் சொல்லி மற்றவற்றைப் படிப்பவரின் சிந்தனைக்கு விடுகின்ற போக்கை இக்கவிதை முடிவு கொண்டிருக்கிறது.

இக்கவிதைக்கதை, ஒரு குறுங்காவியத்தை, ஆறு கட்டங்களில் ஒரு சிறுகதையாகச் சொல்லும் முயற்சியில் படைக்கப் பட்டுள்ளது. கதை நிகழ் களங்களாக அமைந்திருக்கும் இந்த ஆறு கட்டங்களிலும், கதை மாந்தர்களே தங்கள் உரையாடல் மூலமாய், தங்களின் உள்ளக்கிடக்கையையும், கதைப் போக்கினையும் வெளிப்படுத்துகின்றனர். மேலும் வருணனையும் ஓர் உத்தியாக இக்கவிதைக் கதையில் கையாளப் பட்டிருக்கிறது.

*158. ''மேனி திரைந் திளைத்து மீசை மயிர் நரைத்துக்*
*கூனி நடக்கும் பருவம் குறுகுகையில்''*
(புதுவைச்சிவம் 1946:38)

என்று வயோதிகனைப் பற்றிய வருணனையும்,

*159. ''ஆடுமயில் போன்றாள் அலங்காரம் மிக்குடையாள்*
*பாடுங்குயில் போல்நற் பண்ணிசைக்கும்*
*பாவையினாள்*
*கட்டுடைய தேகம் கவரும் இளமையெழில்*
*மட்டுக் கடங்கா வளமுடையாள்''*
(புதுவைச்சிவம் 1946:38)

என்று வயோதிகனின் இளம் மனைவியைப் பற்றிய வருணனையும் பொருந்தா மணக்கண்டனத்தைப் படிப்பவர் மனத்தினில் முதற்கட்டத்திலேயே எழுப்பி விடுகின்ற உத்தி எனக் கொள்ளலாம். துன்பியலில் முடிந்துபோன கதையை மீண்டும் உயிர்ப்பித்து இன்பியலில் கொண்டு முடிக்கும் உத்தியும் இதில் கையாளப்பட்டுள்ளது. இதன் மூலம் பொருந்தா மணக்கண்டனமும் விதவை மறுமணமும் வலியுறுத்தப்பட்டுத் திராவிட இயக்கக் கருத்தியலின் விளக்கமாகவும் இது படைக்கப்பட்டுள்ளது. திராவிட இயக்கத்தின் தளபதி என்று அந்நாளில் அழைக்கப்பட்ட அறிஞர் அண்ணாவின் கருத் தோவியமே இங்குக் கவிதைக் கதையாக மாற்றப்பட்டிருக்கிறது. இதற்கான கருத்தை அண்ணா கடிதமாக எழுதி அதைக் கதையாக மாற்றித்தருமாறு கேட்டுப் புதுவைச்சிவத்திற்கு அனுப்பியிருக்கிறார். அப்படி அனுப்பப்பட்ட இக்கவிதை திராவிட நாடு இதழின் 1946 ஆம் ஆண்டுச் சித்திரை மலரில் வெளியானது (சிவ.இளங்கோ 1991: 5).

**உண்மைக் காதல்**

ஓர் நாள் கடலோரம் உலாவச் செல்லும் குப்பன் ஒரு சுந்தரியைக் கண்டு மனத்தைப் பறி கொடுக்கின்றான். பின்னர், அவள் தன் வீட்டருகே வசிப்பவள்தான் என்றறிந்து அவளுக்கோர் காதல் கடிதத்தைத் தன் வீட்டு வேலைக்காரி

மூலம் கொடுத்தனுப்புகிறான். காதல் தோன்றிய காரணத்தை அக்கன்னியும் கடிதம் மூலம் கேட்க, இது தெய்வீகக் காதல் என்று பதிலனுப்புகிறான் குப்பன். தெய்வீகம் என்பது ஏமாற்று வேலை; இது வெறும் காம இச்சை என்கிறாள் அவள். அதற்கவன் வருந்திக் காதல் உண்மை எனக் கதறுகின்றான். குறிக்கோளிலாத வாழ்க்கை பாழென்றும், தான் சீர்திருத்த எண்ணம் உடையவளாதலால் 'அவை உமக்குப் பிடித்த மாமோ' என அவள் பதிலிறுக்கிறாள். கடவுளரின் வெறுப்புக்கு ஆளாகக் கூடாது என்று அவன் கருத்தெழுத, திருந்தாத மனிதனைத் தான் ஏற்பதற்கில்லை என்று அவள் பதிலுரைக்கிறாள். உனக்காகச் சீர்திருத்தம் ஒப்புகிறேன் என்ற அவனது பதிலுரையை ஏற்காத அக்கன்னி, அவனை வீட்டுத் தோட்டத்திற்கு வரச்செய்து சீர்திருத்தம் அவசியமா என்று விவாதம் செய்கிறாள். இறுதியில் அறிவுக்குப் பணிந்து விடுகிறான் குப்பன். காதல் மணத்திற்கு அவளும் சம்மதிக்கிறாள்.

'உண்மைக்காதல்' இன்பியலில் முடியும் சிறுகதைக் கருவைக் கொண்ட கவிதை. கதையின் தொடக்கத்தில் இருந்து இறுதிவரை ஒரே சீரான போக்கைக் கொண்டிருப்பதால் சிறுகதைக்கான இலக்கணப்படி கதையின் உச்சநிலை கதையின் முடிவில் வெளிப்படுத்தப்படுகிறது. என்ன முடிவு ஏற்படும் என்ற எதிர்பார்ப்பை இறுதி வரையில் கொண்டு செல்வது கதைப்போக்கில் சுவாரசியத்தை ஏற்படுத்தினாலும் கதையின் முடிவை விரைந்து முடிக்கும் போக்கும் இதில் காணப்படுகிறது. கதையின் நோக்கம் கதைப் போக்கில் துவக்க நிலையிலேயே சுட்டிக் காட்டப்பட்டு விடுகிறது. கதையின் நோக்கம் நிறைவேறுமா இல்லையா என்னும் எதிர்ப்பார்ப்பே கதையின் நகர்வு விசையாக ஆக்கப்பட்டுக் கதை நோக்கமே கதை மாந்தர்களை விடவும் முதன்மை பெற்று விடுகிறது. இயக்கத்தின் கொள்கைகளே கதையின் நோக்கம் என்பதை மிக வெளிப்படையாக இக்கதையின் முடிவு சொல்வதுடன், இயக்கம் குறித்து நேரடியாகவே குறிப்பிடும் போக்கையும் இக்கவிதைக் கதை கொண்டிருக்கிறது.

இக்கவிதைக் கதையில் கதை மாந்தர்களைவிடக் கடிதமே முக்கியத்துவம் பெறுகிறது. கடிதம் மூலம் கதையின் முக்கியப் பகுதிகளை நிகழ்த்திச் செல்லும் உத்தி இதில் கையாளப் படுகிறது. நாயகன், நாயகி, வேலைக்காரி ஆகிய மூவர் மட்டுமே பாத்திரப் படைப்பாக்கப்பட்டு உயிரில்லாக் கடிதம் கதையின் உயிர்த்துடிப்பான பாத்திரமாக ஆக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் தோழி தூதாக இருப்பதைப் போல் இக்கதையில் வேலைக்காரி தூது போகிறாள். ஆனால் வேலைக்காரி வாய்மொழியாக எதையும் பரிமாறாமல் இருக்க, அவளின் வேலையைக் கடிதம் செய்கிறது. கடிதப் பரிமாற்றத்திற்கும் மேலான நிகழ்வொன்றில் கதை நாயகனும் நாயகியும் நேரிலேயே சந்திக்கிறார்கள். காதலை ஏற்றுக் கொள்ளக் காதலி விதிக்கும் நிபந்தனையைக் காதலன் ஏற்கின்றானா என்பதைக் கதை முழுவதும் நகர்த்திச் சென்று கதை முடிவில் இருவரையும் சந்திக்கவைத்துக் காட்சியை வளர்த்தாமல் உடனேயே முடிவுக்குக் கொண்டு வந்து விடுவதை ஓர் உத்தியாகவே கொள்ளலாம். துன்பியலாகவும் முடிக்கச் சரிசமமான வாய்ப்புள்ள இக்கதையை இன்பியலில் முடித்து வைத்துக் காதலை விடச் சமூகச் சீர்திருத்த கொள்கைகளுக்கு உயர்வு தரும் உத்தியோடு இக்கவிதைக் கதை அமைக்கப்பட்டுள்ளது.

## பாடுபொருட்களும் சமுதாயப் பார்வையும்

### ஆய்ந்து பார்ப்பீர்

இக்கவிதைக் கதையின் பாடுபொருட்கள் முழுக்க முழுக்கத் திராவிட இயக்கக் கருத்தியல்களை வெளிப்படுத்துவனவாகவும், அன்றைய சமுதாயக்கேடுகளைச் சுட்டிக் காட்டும் வகையிலும் அமைந்துள்ளன. கவிதை எழுதச் சோலையை நாடிச் செல்லும் கவிஞரைப் பார்த்து அங்குள்ள பறவைகள் 'இவன் யார்?' எனத் தங்களுக்குள் வினவிப் பின் 'இன்னவன் மூடநம்பிக்கையில் மொய்த்த தமிழ்நாட்டான்' என்று முடிவெடுத்து, 'ஆயினும் தன்னினத்தார்க்கு ஆறறிவு உண்டென்றுரைத்து நாயினைப் போல் சண்டையிட்டே நாசமுறுங் கூட்டத்தான்' என்றும்

தமிழர்களின் ஒற்றுமையின்மை குறித்தும் அவர்களிடம் நிலவியிருக்கும் மூடநம்பிக்கை குறித்தும் கேலி பேசுகின்றன.

பெண்ணடிமை பற்றிப் பேசுகின்ற ஓர் பறவை, தங்களுக்குள் பேதம் இல்லை, பெண்ணடிமை கொள்வதில்லை என்றும் 'மாதர் தமை அடிமை செய்தும், இழித்தும் வாழ்வினிலே தீதுற்று மாளும் சிறுசெயலோன்' என்று தமிழரைக் குறிப்பிடுகின்றது. 'இவ்வுலக வாழ்வை இனிதென்று எண்ணும் பறவைகளைப் போலன்றிக் காதல் வாழ்வில் இன்பம் காணாமல் மூழ்குபவர்' என்றும் 'இவ்வாழ்வு பொய்யென்றும் எல்லாமும் மாயையென்றும் அவ்வுலக வாழ்வே அரும்பெறற் பேறென்று சொல்லும்' மனிதர் என்றும் 'இந்நிலையில் இம்மனிதரை ஆறறிவு படைத்தவர்கள், நம்மை விட மேலானவர்கள் என்று எந்த அறிவால் இயம்புவது' என்றும் பறவைகள் மனித சமுதாயத்தை நோக்கிக் கேள்விகளை எழுப்புகின்றன.

மற்றொரு பறவை 'தன்முயற்சியால் நாம் தரணியிலே வாழ்கின்றோம்; தெய்வச் செயலன்றி நம்மால் சிறிதேனும் உய்ய முடியாதென்று ஒப்பாரி வைத்து நிதம் சோம்பிக் கிடப்போரைச் சூழ்ந்தோன்' என்றும் 'இவர்கள் உண்பதும், உறங்குவதும் ஊரை ஏமாற்றுவதும் அண்டை அயலோர் அழிகவென எண்ணுவதும் ஏமாந்தோர் சொத்துக்கு எசமானர் ஆவதும், தன்னலத்தால் தீங்கிழைப்பதும்' ஆகிய செயல்களில் ஈடுபடுவதுடன் அவற்றை 'எல்லாம் அவன் செயல்' என்று சொல்பவர்கள் என்றும், மனித சமுதாயத்தின் பல்வேறு நாகரிகமற்ற செயல்களைப் பட்டியலிட்டுக் கிண்டலும் செய்கிறது.

இவ்விடத்தில் கவிஞர், 'பகுத்தறிவு வாய்ந்த மனிதரின் வாழ்க்கையில் ஊழல்கள் தோய்ந்திருக்குதென்று' பறவைகளின் கிண்டலும் கேலியும் கேட்டு வெட்கமும் கோபமும் அடைகிறார். கோபத்தினால் பறவைக் கூட்டம் மீது கல்லெறிய நினைக்கிறார். ஆனால் அடுத்து ஒரு பறவையின் கருத்து மூலம் கதையின் போக்கே மாறிவிடுகிறது. அப்பறவை கவிஞரைப் பார்த்து, 'இவர் பகுத்தறிவுள்ளவர்தாம். ஆனால் இன்று அவர் நிலைமை

எள்ளற்குரியதாகும். தன்னுடைய நாட்டை அயலவர் ஆளக்கண்டும் உணர்வின்றி வாழும் அடிமை இவன்' என்று சொல்லப் பிற பறவைகளோ,

160. *''....... ஆகா !*
*கொடுமை இவன்நிலை! மிக்க கொடுமையந்தோ!*
*நாட்டை யிழந்து நலனொன்றுங் காணாமல்*
*கேட்டையடைவோனைக் கேலியொன்றும்*
*செய்யாதீர்!''* (புதுவைச்சிவம் 1946:11)

என்று இரக்கம் கொள்வதுடன் கண்ணீர் கசியப் 'பரிதாபம்' என்கின்றன. முதலில் பறவைகள் பட்டியலிட்ட அத்தனை சமூகக் கேடுகளுக்கும் காரணம் தமிழரது அடிமை நிலையே என்று புள்ளினங்கள் இரக்கப்படுகின்றன. இக்கவிதைக் கதை எழுதப்பட்ட காலத்தில் சென்னை மாகாணம் உள்ளிட்ட அனைத்து இந்தியாவும் பிரிட்டிஷாரிடம் அடிமைப்பட்டுத் தான் இருந்தன. ஆனால் புதுவைச்சிவம் இங்கு அயலவர் ஆட்சி என்ற கருத்தில் ஆரியர்களின் ஆதிக்கத்தையும் சேர்த்தே குறிப்பிடுகிறார். இதுவே திராவிட இயக்கக் கருதுகோள் என்று முன்னரே இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் சமூகத்தில் நிலவும் அனைத்து மூடநம்பிக்கைகளுக்கும் பெண்ணடிமை, தன்முயற்சியின்மை போன்ற சமூக அவலங்களுக்கும் இவ்வடிமைத் தன்மையே காரணமென்று கூறுகிறார். ஆறறிவில் குறைவுடைய பறவைகள் ஒன்றுசேர்ந்து ஆறறிவு மனிதனைக் கேலியாக மதிப்பீடு செய்வதைக் கண்டு முதலில் கோப முற்றாலும் பின்னர்ப் பறவைகளின் இரக்கம் கண்டு அவமானம் அடைகிறார் கவிஞர். அப்போது பறவைகள் பட்டிய லிட்டிருக்கும் அனைத்துச் சமூகக் கேடுகளுக்கும் தீர்வாக,

161. *''மூடச் செயலெலாம் முற்றுந் தொலையாமுன்*
*நாடாது தன்னரசு''* (புதுவைச்சிவம் 1946:11 )

என்று ஒரு பறவை கூறுகிறது. காங்கிரஸ் கட்சி 1930 ஆம் ஆண்டுகளில் முன்வைத்த சுயராஜ்யக் கொள்கைக்கு மறுப்புச் சொன்ன திராவிட இயக்கத்தின் கூற்றும் இதில் கலந்துள்ளது.

சுயராஜ்யம் கிடைப்பதற்கு முன்னர் மூடச் செயல்களெல்லாம் முற்றாக ஒழிக்கப்பட வேண்டுமென்றும் அப்படி அல்லாமல் பெறப்படும் சுயராஜ்யம் உண்மையான முழு உரிமையுள்ள தன்னரசாக இருக்காது என்பதும் இங்கு வலியுறுத்தப்படுகின்றது. இக்கவிதைக் கதையினை மதிப்பீடு செய்த அறிஞர் அண்ணா,

> *''....மக்களின் அறிவுக்கு இட்ட வேலியை வெட்டி வீழ்த்தினாலன்றி, எந்த அரசியல் விடுதலையாலும் பயன்பெற முடியாதென்ற உண்மையினைக் கவி, மிகவும் அழகாக ஆணித்தரமாக எடுத்து விளக்கியிருக்கிறார்.''* (திராவிட நாடு 21.7.46)

என்று குறிப்பிட்டு மேலும் பறவைகளின் வாயிலாக இப்படியோர் சமூகப் பார்வை பார்க்கும் நிலையைப் புது முறையான கலைப்புரட்சி என்றும் அண்ணா குறிப்பிடுகிறார்.

> *''....முன்பெல்லாம் மனித குலத்தால் இகழ்ச்சியாகக் கருதப்பட்டுக் கேலி செய்யப் பட்டு வந்த பாம்பு முதல் சிட்டு வரையிலே மனிதன் இருக்கும் நிலையையும் அவனுடைய நினைப்பையும் செயலையும் கேலிசெய்து, அவனுக்குப் புத்திபுகட்டும் பேராசிரியர்கள் ஆக்கப்படுவது, உண்மையிலேயே புதுமுறை அல்லவா? கலைப்புரட்சி அல்லவா?''*
>
> (திராவிட நாடு 21.7.46)

என்னும் அண்ணாவின் கருத்தோட்டம் இக்கவிதைக் கதையின் சமூகப்பார்வையை ஒரு கலைப்புரட்சி என்னுமளவுக்கு உயர்த்தியிருப்பது தகுதியானதாகவே உள்ளது.

**அவர்கள் வாழ்வு**

இக்கவிதைக் கதை முழுமையாகப் பொருந்தா மணத்தின் தீமைகளை எடுத்தியம்புகிறது. செல்வந்தனான வயோதிகன் ஒருவன், அழகான இளம்பெண்ணை இரண்டாவதாக மணந்து கொள்ளப் பொருந்தாமணம் பாடுபொருளாகிச் சமுதாயப் பார்வையை விரிக்கின்றது. இப்பொருந்தா மணவாழ்க்கையைப்

பற்றிக் குறிப்பிடும் புதுவைச்சிவம், 'தின்ன முடியாதான் தீங்கனியைப் பெற்றென்ன?' என்று சுருங்கக் கூறித் தெளிவேற் படுத்துகிறார். இளம் மனைவிமேல் சந்தேகம் கொள்ளும் வயோதிகக் கணவன், அவளை அலங்காரம் செய்யக்கூடாது என்று கூற, திகைக்கும் அவ்விள நங்கை அதற்கும் பணிய, 'ஆதிக்கம் ஆணுக்கு; அடங்காமல் என் செய்வாள்?' என்று அன்றைய சமூகத்து ஆணாதிக்க நிலையைப் புதுவைச்சிவம் குறிப்பிடுகிறார். மேலும், 'தன் கணவன் சொல்லைத் தடுத்துரைத்தல் பாபம்' என்று அவளைப் பேச விடாமல் செய்யும் பெண் ஒடுக்கலையும், அதற்குச் சாதகமான பண்பாட்டு நெறியையும் சுட்டிக் காட்டுகிறார். மனைவிமேல் கட்டுப்பாடுகளை விதித்தாலும் சந்தேகப் பேயால் சாகும் அவ்வயோதிகன் இறுதியில், 'சிறப்பில் பொருந்தா மணம் விரும்பிச் செய்திட்டேன்' என்று அரற்றுவதன் மூலம், பொருந்தா மணங்களின் சோகத்தினையும் தோல்வியினையும் புதுவைச்சிவம் எடுத்துரைக்கிறார்.

கிழவன் இறந்தபின் அவனது நண்பனான வாலிபன் அவ்விதவைப் பெண்ணிற்குத் தேறுதல் மொழி சொல்லும் போதில், அவள் நல்லறிவு பெறும் வகையில் போதிக்கிறான். அதனால் அவள் மனதிலிருந்த மூடநம்பிக்கைகள் விலகி அவள் மறுமணத்திற்குத் துணிகிறாள். அதிலும் தனக்கு இத்தெளிவேற் படுத்திய அவ்விளைஞனையே காதல் மணம் புரியவும் விரும்புகிறாள். அவனும் சம்மதிக்க அவர்கள் இணைகின்றனர். ஆனால் ஓர் இளம் விதவைப் பெண் மறுமணம் புரிவதை, அதுவும் காதல் மணம் புரிவதை ஏற்காத சமூகம், 'எங்கடுக்கும் இக்கொடிய அக்கிரமம்?' என்று அவர்களைத் தூற்றுவதன் மூலம், சமுதாயக் கட்டுப்பாட்டினையும், அதனை எதிர்கொள்ள வேண்டிய உறுதியினையும் புதுவைச்சிவம் சுட்டியிருக்கிறார்.

திராவிட இயக்கக் கருத்தியல்களான பொருந்தாமணக் கண்டனம், காதல் மணம், விதவை மறுமணம் ஆகிய மூன்றையும் வலியுறுத்தும் வகையில் இக்கவிதைக் கதை புனையப் பட்டுள்ளது. திராவிட இயக்கத்தில் பெரியாருக்கு அடுத்த

நிலையில் இருந்த தலைவரான அறிஞர் அண்ணாவின் கருத்தோவியமே இக்கவிதைக் கதையின் மூலம். இக் கவிதைக்கான கதையினை ஆறு கட்டங்களாக வடிவமைத்து அதைக் கடிதம் மூலம் புதுவைச்சிவத்திற்கு அனுப்பிய அண்ணா அவர்கள்,

> *''....நண்பரே! இதுபோல் ஆறு கட்டங்களில் கவிதை அமைத்து, நமது இதழில் ஒரு பக்கத்தில் அமையக் கூடியதாகத் தந்துதவக் கோருகிறேன். பொருந்தா மணக் கண்டனம் நோக்கமாகக் கொண்டிருத்தல் நல்லது. இரண்டு கிழமைகளில் புத்தாண்டு நமது பத்திரிகைக்கு. அதற்கே கவிதை''* (சிவ. இளங்கோ 1991: 12)

என்று அக்கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். சமுதாயத்தில் நிலவும் மூடநம்பிக்கைகளைக் களையவும் பெண்ணுரிமைக்கான விழிப்புணர்வை ஏற்படுத்தவும் அறிஞர் அண்ணாவும் புதுவைச்சிவமும் முயன்று, அதைப் பிரச்சாரமாகவும் கொண்டு சென்றிருக்கின்றனர் என்பதை அக்கடிதம் விளக்குகின்றது. விரிவடைந்த பொதுநோக்கும் சமூகப் பார்வையும் இப் பாடலுக்கு அடிப்படையாக விளங்குகின்றன என்பதும் ஏற்கத்தக்கதே.

**உண்மைக் காதல்**

தன் உள்ளத்தில் எழுந்த காதலைக் கடிதம் மூலம் காதலிக்கு எடுத்தியம்புகின்றான் ஒருவன். ஆனால் அவள் அதை மறுத்துக் காதலுக்கான காரணத்தை வினவுகிறாள். அவளது அழகை முதன்மைப் படுத்தி அவன் விரிக்கும் காதலை அவள் ஏற்காமல், 'கண்டவுடன் எழும் ஆசை காதலல்ல' என்றும் இப்படிப்பட்ட காதலைத் தெய்வீகக் காதல் என்று பெண்கள் நினைத்து, ஏற்றுப் பின் வருந்தித் துயரில் ஆழ்கின்றனர் என்றும் காதலியின் வாயிலாக விளக்கும் இக்கவிதை தமிழ் இலக்கியக் காலத்தி லிருந்து நிலவி வரும் காதலைப் புறந்தள்ளி விடுவதைக் காணலாம். அதுமட்டுமன்றிக் காணும் ஈர்ப்பினால் நிகழும் காதலை விடக் குறிக்கோளுடன் கூடிய காதலே சரியானது

என்றும், 'காதலென்றால், வாழ்க்கை அதன் குறிக்கோளில் உள்ளம் ஒன்றி நற்றோழமை கொள்ளல்' என்றும் காதலுக்குப் பொருள் பொதிந்த ஓர் இலக்கணத்தையும் வகுக்கிறார் புதுவைச்சிவம்.

காதல் மணம் என்றாலே தீதெனக் கொண்ட அன்றைய சமுதாயத்தில் காதல் மணத்தை வற்புறுத்துகின்ற புதுவைச் சிவம் அக்காதல் குறிக்கோளுடன் கூடியதாக இருக்கவேண்டும் என்று கூறி அக்குறிக்கோளும் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்றும் விளக்கமளிக்கிறார். சமுதாயத்தில் மலிந்து கிடக்கும் மூடச் செய்கைகள், சாதி மதம் போன்ற மனிதரைப் பிரிக்கும் வழக்காறுகள், இவற்றை வலியுறுத்தும் வேதங்கள் முதலான சாத்திரங்கள், வாட்டும் பெண்ணடிமைத்தனம் இவை யாவற்றையும் வீழச்செய்து யாவரும் சமம் என்ற வளமான சமுதாயத்தைச் சமைத்திட வேண்டும் என்பதுதான் அக் குறிக்கோள் என்றும் அக்குறிக்கோளை நாட்டுதலே தன் வாழ்நாள் கொள்கை என்றும் இக்கதையின் நாயகி வாயிலாகக் கூறுவதன் மூலம், காதலுக்குக் கூட, உலகளாவிய சமத்துவச் சமுதாய உருவாக்கத்தைக் குறிக்கோளாகக் கூறுகிறார். இந்தக் குறிக்கோளுடன் ஒன்றுபவனையே தான் காதலிக்க முடியும் என்று கதைத் தலைவி கூறுவதன் மூலம் அவளை ஓர் இலட்சியப் பெண்ணாகவும் ஆக்குகிறார் புதுவைச்சிவம்.

பழைமைக் கருத்துகளில் ஊறியிருந்த காதலன், முதலில் அவள் கருத்தை ஏற்கத் தயங்கினாலும், 'திருந்தாத மனிதர் தம்மை என்னுள்ளம் நிச்சயமாய் ஏற்காது' என்ற அவளின் உறுதியினால் தடுமாறுகின்றான். பின்னர் அவளுடன் நடத்துகின்ற நீண்ட விவாதத்தில் அவளது பகுத்தறிவுத் கருத்துக்களை ஏற்றுக் கொள்கிறான். அறிவுக்குப் பணிந்த அவனது காதலை ஏற்கிறாள் காதலி என்று கதையை நிறைவு செய்வதன் மூலம் காதலை விடப் பகுத்தறிவுக் கொள்கைகளுக்கே முதன்மை தருகிறார் புதுவைச்சிவம். இக்கவிதையின் தொடக்கத்தில் கதைத் தலைவி தன் பெற்றோருடன் கடலோரம் சென்றதைக் குறிப்பிடும் கவிஞர், பின் கதை நிகழ்வின் எந்த ஒரு

சந்தர்ப்பத்திலும் பெற்றோரைக் குறிப்பிடவில்லை. அவள் தனது எதிர்காலம் குறித்தும் திருமணம் குறித்தும் முடிவெடுக் கின்ற கட்டத்திலும் பெற்றோர்களின் பங்கு குறிப்பிடப்பட வில்லை. பெண்களின் திருமண உரிமையை நிலை நாட்டும் வகையிலேயே இதுபோன்ற காட்சி அமைப்புகள் அமைக்கப் பட்டிருப்பதாகக் கொள்ளலாம்.

திராவிட இயக்கக் கருத்தியல்களின் பெரும் பகுதியும் இப்பாடலில் இடம் பெற்றிருக்கின்றது. பெண்ணுரிமை, மூட நம்பிக்கை எதிர்ப்பு, சாதிமத எதிர்ப்பு, சமத்துவம் ஆகிய கோட்பாடுகளையும் அதன் உட்பிரிவுகளையும் பெண்கள் தமது குறிக்கோள்களாகக் கொள்ள வேண்டும் என்னும் அறிவுறுத்தலும் இக்கவிதையின் ஊடே சமுதாயத்திற்கு விடுக்கும் செய்தி யாகின்றது. கதைத் தலைவி தன்னுடைய குறிக்கோளைக் குறிப்பிடும்போது,

*162. ''நாட்டினிலே மலிந்துள்ள மூடச் செய்கை*
*நனிபேத வழக்கங்கள் சாத்திரங்கள்*
*வாட்டுகின்ற பெண்ணடிமை யாவும் வீழ்த்தி*
*வளமுற்ற சமவாழ்வைச் சமுதாயத்தில்*
*நாட்டிடவே வேண்டுமெனுங் கொள்கையோடு*
*நானுள்ளேன்!...''* (புதுவைச்சிவம் 1946:46 )

என்று குறிப்பிடும் வரிகளில் தன்னைப் பற்றிய தன்னிலை விளக்கத்தையும், புதுவைச்சிவம் ஏற்றியே பாடியிருக்கிறார் என்பதும் நோக்கத்தக்கது. இங்குக் குறிப்பிடப்பட்டிருக்கும் கருத்தியல்கள் அனைத்துமே உலகளாவிய பார்வை கொண்ட சமுதாய முன்னேற்றக் கொள்கைகளாக அமைந்திருப்பதும், அதைக் காதல் என்ற, மனித இனம் தவிர்க்க வியலாத ஓர் உறவு சார்ந்த முறைமையில் ஏற்றிச் சமுதாயச் சீர்திருத்தப் படைப்பாகப் புதுவைச்சிவம் அளித்திருப்பதும் நோக்கத்தக்கன.

# யாப்பு வடிவங்கள்

புதுவை அரசின் கலைப் பண்பாட்டுத் துறை 1996 ஆம் ஆண்டில் தொகுத்து வெளியிட்ட புதுவைச்சிவம் கவிதை நூலில் அவரது எட்டுக் கவிதைத் தொகுப்புகள் உள்ளன.[10] இதற்குப் பிறகு புதுவைச்சிவத்தின் மூன்று கவிதைத் தொகுப்புகள் (அச்சில் வெளிவந்தவை) இவ்வாய்வுத் தேடலில் கிடைத்துள்ளன. இவற்றையும் சேர்த்துப் புதுவைச் சிவத்தின் கவிதைத் தொகுப்பு நூல்களின் எண்ணிக்கையும் அவற்றிலுள்ள பாடல்களின் எண்ணிக்கையும் பின்வருமாறு பட்டியலிடப் படுகின்றன.

| வ. எண் | நூற்பெயர் | யாப்பு | வெளியான ஆண்டு | பாடல்கள் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| 1. | புதுவை நெசவுத்தொழில் ஏழையர் எழுச்சிப் பாட்டு | இசைப்பா | 1932 | 5 |
| 2. | பெரியார் பெருந்தொண்டு | ஆசிரிய விருத்தம் | 1944 | 104 |
| 3. | கைம்மை வெறுத்த காரிகை | ,, | 1945 | 24 |
| 4. | மறக்குடி மகளிர் | ,, | 1945 | 91 |
| 5. | தமிழர் தன்மதிப்புப் பாடல்கள் | இசைப்பா | 1945 | 67 |
| 6. | திராவிடப் பண் | ,, | 1946 | 21 |
| 7. | காதலும் கற்பும் | ஆசிரிய விருத்தம் | 1946 | 32 |
| 8. | மறுமலர்ச்சிக் கவிதைகள் | இயற்பா/இசைப்பா | 1946 | 49 |
| 9. | இந்தி மறுப்புப் பாடல்கள் | இசைப்பா | 1948 | 14 |
| 10 | தமிழிசைப்பாடல்கள் | ,, | 1950 | 43 |
| 11 | தன்மதிப்புப் பாடல் | ,, | 1951 | 41 |
| | மொத்தம் | | | 491 |

மேற்குறித்த பட்டியலில் குறிக்கப்பெற்ற பதினொரு கவிதைத் தொகுப்புகளில் மொத்தமுள்ள 491 பாடல்களின் யாப்பு வகைகளும் இசைப் பாடல் வகைகளும் பட்டியலிடப் பட்டுப் பின்னிணைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

புதுவைச்சிவத்தின் யாப்பு வகைகளையும் வடிவங் களையும் ஆய்வதற்கு முன் பாரதிதாசனின் யாப்பு வகை களையும் வடிவங்களையும் தெரிந்து கொள்ளுதல் அவசிய மாகிறது. புதுவைச்சிவம் பாரதிதாசனிடம் தனிப்பட்ட முறையில் யாப்புப் பயின்றவர் என்பதாலும் (புதுவைச்சிவம் 1996: 2-3), பாரதிதாசனுடனேயே ஒரே வீட்டில் குடியிருந்து பல்லாண்டுகள் அவரது பாடல்களைப் படியெடுத்து அவரது பல கவிதைத் தொகுப்புகள் வெளிவரக் காரணமாக இருந்தவர் என்பதாலும் (சிவ.இளங்கோ 1991: 153), பாரதிதாசனின் யாப்பு வடிவ ஆதிக்கம் புதுவைச்சிவத்தின் யாப்புகளில் படிந்திருக்க இடமுண்டு என்ற வகையில் பாரதிதாசனின் யாப்பு வகை, வடிவங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுவது அவசியமாகிறது.

கவிதை புனையச் செய்யுள் இலக்கணமாகிய யாப்பிலக்கணம் தெரிந்திருக்க வேண்டும் என்ற கொள்கை யுடைய பாரதிதாசன் அகவற்பா, வெண்பா, விருத்தப்பா, கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, வெண்டளையான் இயன்ற தரவினைக் கொச்சகக் கலிப்பா, வண்ணப்பா, சிந்துப்பா, குறள் வெண் செந்துறை, கண்ணி முதலிய இரண்டடிப்பா வடிவங்கள், ஆசிரியத்தாழிசை, உருப்படிகள் முதலிய இயற்பா, இசைப்பா வடிவங்களையெல்லாம் தனது படைப்பில் கையாண்டிருக்கிறார். தமிழின் யாப்பு வடிவங் களைப் பயன்படுத்தியதில் ஒரு கடலைப் போல் விளங்கும் பாரதிதாசன், குறிப்பான சில வடிவங்களில் மிகுதியாகவும் செழுமையாகவும் பாடல்களை யாத்துள்ளார். நேரிசை ஆசிரியப்பா வடிவத்தை மிகுநிலையிலும், பஃறொடை வெண்பா, கலிவெண்பா ஆகிய வகைகளை நேர்த்தியான நிலையிலும் அவர் கையாண்டுள்ளார். விருத்தமென்னும் ஒண்பாக்களை ஆண்டு, பல காவியங்களையும் குறுங் காவியங்களையும் அவர் படைத்துள்ளார். ‘சிந்துக்குத் தந்தை’ எனப் பாரதியைப் போற்றிய பாரதிதாசன், தானும் சிந்துப் பாடல்களில் சிகரத்தை எட்டியுள்ளார். இசைப் பாவலராக ஏராளமான உருப்படிகளை அவரே ஒரு தமிழிசை இயக்கமாக இயற்றியிருக்கிறார் (ய. மணிகண்டன் 2004: 10, 158-161).

பாரதிதாசன் ஏராளமான யாப்பு வகைகளைப் பயன் படுத்தியிருந்தாலும் அவர் மிகச் சிறப்பாகப் பயன்படுத்திய யாப்பு வகைகளை மட்டுமே புதுவைச்சிவம் தனது படைப்பு களுக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார். விருத்த வடிவங்களில் பாரதிதாசன் எண்ணிறந்த பாடல்களை யாத்துள்ளார். அவரது 'புரட்சிக் கவி', 'அழகின் சிரிப்பு', 'தமிழியக்கம்', 'பாண்டியன் பரிசு' ஆகியவை விருத்தங்களால் ஆனவையே. 'ஆசிரிய விருத்தத்துள்ளும் அறுசீர் ஆசிரிய விருத்த வடிவிலும், எண்சீர் ஆசிரிய விருத்த வடிவிலும் பாவேந்தர் தொட்ட சிகரங்கள் மிகுதி' என்பது ஆய்வாளர் கருத்து (ய. மணிகண்டன் 2004: 44). புதுவைச்சிவம் இயற்றிய குறுங்காவியங்களான 'கைம்மை வெறுத்த காரிகை', 'மறக்குடி மகளிர்', 'காதலும் கற்பும்' ஆகியவை முழுமையாக ஆசிரிய விருத்தங்களால் ஆனவையே. அவர் இயற்றிய வாழ்க்கை வரலாற்றுக் காவியமான 'பெரியார் பெருந்தொண்டு' நூலில் மொத்தமுள்ள 104 பாடல்களில் பஃறொடை வெண்பா ஒன்றும் இன்னிசைக் கலிவெண்பா ஒன்றும் போக, மீதமுள்ள 102 பாடல்களும் ஆசிரிய விருத்தங் களால் ஆனவையே. அவரது கவிதைத் தொகுதியான 'மறுமலர்ச்சிக் கவிதைகள்' நூலிலும் மொத்த முள்ள நாற்பத்தொன்பது பாடல்களில் இருபத்தைந்து பாடல்களை ஆசிரிய விருத்தத்திலேயே அவர் அமைத்திருக்கிறார்.

பாரதிதாசன் அகவற்பாக்களில் நேரிசை ஆசிரிய யாப்பே தலையாய இடத்தைப் பெறுகிறது. மேலும் பஃறொடை வெண்பா, இன்னிசைக் கலிவெண்பா ஆகிய வகைகளைப் பாரதிதாசன் மிக நேர்த்தியாகக் கையாண்டிருக்கிறார். 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' என்னும் பாரதிதாசனின் குறுங்காவியம் இன்னிசைக் கலிவெண்பாவில் அமைந்துள்ளது (ய. மணிகண்டன் 2004: 13,35). அதேபோலப் புதுவைச்சிவமும் தனது கவிதைத் தொகுதியில் நேரிசை ஆசிரியப்பா வகையில் நான்கு பாடல்களை அமைத்திருக்கிறார். மேலும் அத்தொகுப்பில் இடம் பெறும் புதுவைச்சிவத்தின் நீண்ட கவிதைக் கதைகளான, 'அவர்கள் வாழ்வு' 'ஆய்ந்து பார்ப்பீர்' இரண்டுமே

இன்னிசைக் கலிவெண்பாவினால் ஆனவையே. அதேநேரம் தனது கவிதைத் தொகுப்பிலேயே உருப்படி, சிந்துக் கண்ணி, நொண்டிச் சிந்து, காவடிச் சிந்து, ஆனந்தக் களிப்பு, கும்மி வகையிலான பதினைந்து இசைப்பா வடிவங்களைப் புதுவைச்சிவம் பயன்படுத்தியிருக்கிறார்.

இவை தவிர, புதுவைச்சிவம் ஆறு இசைப்பாடல் தொகுதிகளை இயற்றி வெளியிட்டிருக்கிறார். இந்த ஆறு தொகுதிகளில் உள்ள 191 பாடல்களில் இரண்டு சந்த விருத்தங்கள் தவிர ஏனைய 189 பாடல்களும் உருப்படி, சிந்து ஆகிய வடிவிலான இசைப்பாடல்களே. இவற்றுடன் கவிதைத் தொகுதியில் உள்ள பதினைந்து இசைப் பாடல்களையும் சேர்த்தால் 204 இசைப் பாடல்கள் ஆகின்றன. இதன் வழிக் குறுங்காவியங்களைத் தவிர்த்துப் பார்க்கும்போது, புதுவைச் சிவம் கவிதைப் படைப்புகளில் யாப்பு வடிவங்களை விட இசைப்பாடல்களே மிகுதியாக இடம்பெற்றிருப்பது புலனாகிறது.

இந்தப் பாடல்கள் அனைத்தும் திராவிட இயக்கத்தின் கொள்கை விளக்கப் பாடல்களாகவே கருத்தமைக்கப் பட்டிருக்கின்றன. பகுத்தறிவுக் கருத்துக்களைப் பரப்ப, அவர் இசைப் பாடல் வடிவங்களையே பெரிதும் தேர்ந்தெடுத்துள்ள மையும் தெரியவருகிறது.

இவைதவிர, புதுவை அரசு, கலைப்பண்பாட்டுத்துறை தொகுத்து வெளியிட்டிருக்கும் 'புதுவைச்சிவம் நாடகங்கள்' நூலில் மொத்தம் 115 நாடகப் பாட்டுகள் உள்ளன.[11] இவை அனைத்தும் திபதை, கிருதி, கீர்த்தனை ஆகிய உருப்படி வடிவிலும், நாடகப் பாணியில் அமைந்த தரு, தருக்கம், குழுப்பாடல், இந்துஸ்தானி, இங்கிலீஷ்நோட் வடிவிலும், கண்ணி, கிளிக்கண்ணி, காவடிச்சிந்து ஆகிய சிந்துப்பா வடிவிலும் இயற்றப்பட்டுள்ளன.

புதுவைச்சிவத்தின் இசைப் பாடல்கள் அனைத்திற்கும் முன்னைப்புகழ் பெற்ற இசைப்பாடல் மெட்டுகள் குறிக்கப் பட்டுள்ளன. இவை முன்னை உருப்படிகள் பலவற்றின் மீது

அவர் கொண்ட ஈடுபாட்டைப் புலப்படுத்துவதுடன், அவர் காலத்தில் இசையுலகில் பரவலாகப் பாடப்பட்டு வந்த மெட்டமைந்த பாட்டுகள் எவை என்பதையும் தெரியப்படுத்துகின்றன. இசை அறிஞர்கள் மட்டுமே சுவைத்து வந்த திபதை, கீர்த்தனைகளை உருப்படி வடிவில் எளிய மக்களும் சுவைக்கும் வகையிலேயே அவர் இசைப் பாடல் வடிவங்களைத் தேர்ந்தெடுத்திருப்பதும் புலனாகிறது. இசை நலமும், புதுமை-பொதுமை-பகுத்தறிவுச் சிந்தனை விரவிய கருத்துநலமும் அமைந்த புதுவைச்சிவத்தின் இசைப்பாடல்கள் தமிழிசை இயக்கம் தழைக்கவும் திராவிட இயக்கம் வளர்ச்சி பெறவும் தம்மால் இயன்ற செயல்பாட்டைப் புரிந்திருக்கின்றன என்பதும் நோக்கத்தக்கது.

# தொகுப்புரை

கவிதை இலக்கியம் மட்டுமே கோலோச்சி வந்த தமிழ் மொழியில் இருபதாம் நூற்றாண்டில் நாடகம், சிறுகதை, கட்டுரை, உரைநடை எனப் பல, புதிய வளர்ச்சி நிலைகள் உள் நுழைந்தன. இருபதாம் நூற்றாண்டில் சமூக, அரசியல், அறிவியல் சூழல்கள், தமிழ் இலக்கிய வகைகளிலும், பொருண்மைகளிலும் தாக்கத்தை ஏற்படுத்தின. புதுமுறை, புதுநடையில் இலக்கிய வாதிகள் உருவாகிப் பாரதி, பாரதிதாசன், புதுவைச்சிவம் எனக் கவிஞர்கள் பாரம்பரியமாக வளர்ந்தனர். இவர்களின் படைப்புகள் தமிழின் பல வளர்ச்சி நிலைகளில் ஊடுருவி, அவ்வளர்ச்சிக்குக் காரணமாயும், தாங்கள் சார்ந்திருந்த இயக்கத்தின் வளர்ச்சிக்குக் காரணமாயும் அமைந்தன.

இந்திய விடுதலை இயக்கக் காலத்திலேயே சமுதாய விடுதலை கோரிய இயக்கங்களும் வளர்ந்தன. இருபதாம் நூற்றாண்டுத் துவக்கத்தில் இருந்த சமுதாயச் சூழலில் பார்ப்பனர் ஆதிக்கம் மிகுந்திருந்ததால், பார்ப்பனரல்லாதார் நலன் குறித்த விழிப்புணர்வு ஏற்பட்டு நீதிக்கட்சி உருவானது. சாதிப்பிரிவினைகளைக் களைய விரும்பிய பெரியார் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தைக் காங்கிரஸ் கட்சியில் கொண்டு வர விரும்பிப் பலனின்றி அதனால் அக்கட்சியினின்றும் வெளியேறிச் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

தமிழ்நாடு முழுவதும் இளைய தலைமுறையினர் பெரியாரின் கருத்துக்களால் கவரப்பட்டனர். இயக்கத்தை முன்னெடுத்துச் செல்வதில் பெரியாரோடு இணைந்து பணியாற்றிக் கவிஞராகவும் தன் பங்களிப்பை அளித்த புதுவைச்சிவம் திராவிட இயக்கம், அன்று பிரெஞ்சிந்தியா

எனப்பட்ட புதுச்சேரியில் காலூன்ற அடித்தளம் அமைத்தவராக இருந்திருக்கிறார்.

தமிழகச் சூழலில் திராவிட இயக்கம் தோன்றி இன, மொழி அடிப்படையிலான உணர்வைக் கிளர்ந்தெழச் செய்தது. இந்தி மொழித்திணிப்பும், திராவிட - ஆரியர் பிரச்சினையும் பெருமளவில் தமிழ்நாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தின. சமூதாயச் சீர்த்திருத்தம் வேண்டிய திராவிட இயக்கத்தினர், சாதி, மதங்கள் நீங்கவும் பெண்ணடிமை தீரவும் அடிமை நிலை மாறி அனைவரும் சம உரிமை பெறவும் இனமும், மொழியும் பாதுகாக்கப்படவும் திராவிட நாடு என்பதையே தீர்வாக முன்வைத்து அதற்காகப் போராடவும் செய்தனர். திராவிட இயக்கப் பேச்சாளர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், படைப்பாளர்கள் அனைவரின் இலக்கும் இப்போக்கிலேயே அமைந்திருந்தன. திராவிட இயக்கக் கவிஞர்களாகத் திகழ்ந்த பாரதிதாசன், புதுவைச்சிவம் ஆகியோரின் கவிதைப் படைப்புகள் திராவிட இயக்கக் கருத்தியலின் விளக்கங்களாகத் திகழ்ந்து இயக்க வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நின்றன.

தங்கள் இயக்கம் முன்மொழியும் கொள்கைகள் புதியதல்ல என்றும் தமிழ்ப்பண்பாட்டு மரபுச் சூழலில் பண்டைத் தமிழர்கள் மூடப்பழக்கங்களின்றிப் பெருமையோடு வாழ்ந்த வாழ்க்கையின் மீட்டுருவாக்க நனவே தங்களின் தற்போதைய இயக்கம் என்றும் திராவிட இயக்கத்தினர் நம்பினர். ஆரியக் கலப்பில்லாத தமிழிலக்கியத்தையும் பண்பாட்டையும் கடைப்பிடிக்க அவர்கள் பழந்தமிழ்ச் சமுதாயத்தையும் தமிழிலக்கியத்தையுமே நம்பி இருக்க வேண்டியிருந்தது. பக்தி இலக்கியங்களையும் மரபுவழிச் சார்ந்த சடங்கு சம்பிரதாயங்களையும் முற்றிலும் மறுதலித்த திராவிட இயக்கத்தினர், சாதி பேதமற்ற சமத்துவ வாழ்வுக்குப் பண்டைய தமிழர் வாழ்வைத் தமிழிலக்கியவழிச் சான்றுகாட்டும் சிக்கலான முயற்சியையும் மேற்கொண்டனர், பழம் பெருமையை விட்டுக் கொடுக்காமலும் அதே நேரம், உலகமெங்கும் பரவிய புதிய மறுமலர்ச்சிச் சிந்தனைகளைத் தமிழ்ச் சூழலுக்கேற்ப மாற்றித் தரும் போராட்டங்களையும்

அவர்கள் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. அதே நேரம், தமிழ் இலக்கியங்களைப் பற்றி உயர்ந்த மதிப்பீடு இல்லாதவரும் தன் கருத்தில் சிறிதளவும் விட்டுக் கொடுக்காதவருமான பெரியாரின் தலைமையில் கடினமான மனப்பான்மையுடன் திராவிட இயக்கத்தினர் பணியாற்றி வந்தனர்.

இயக்கத்தின் தொடர் முன்னேற்ற நிகழ்வுகளிலும், பின்னடைவு அடைந்த காலக்கட்டத்திலும் இயக்கக் கொள்கை களையே மேலாகக் கொண்டும் அவற்றை முன்னிறுத்துவதில் இலக்கிய வடிவங்களைத் தமக்குத் துணையாகக் கொண்டும், இயக்கக் கவிஞராகப் பரிணமித்துள்ளார் புதுவைச்சிவம். இயக்கக் கவிஞர் என்ற நிலையில் படைப்பிலக்கியவாதி என்ற இலட்சியமோ, இலக்கியத்தரம் மிகுந்த காவியப் படைப்புகள் குறித்த இலக்கோ ஏதுமின்றி இயக்கம் என்ற ஒரே சிந்தனையில் தன் செயல், திறன் , ஆற்றல், படைப்புகள் அத்தனையும் பதித்து, இயக்க வளர்ச்சியைத் தன் வளர்ச்சியாக நினைத்துப் பெருமிதப்பட்டுக்கொள்ளும் போக்கையே புதுவைச்சிவத்திடம், அவருடைய கவிதைகள் வழிக் காண முடிகிறது. திராவிட இயக்க வரலாற்றை ஊன்றிக் கவனிக்கும்போது புதுவைச்சிவம் போன்ற இயக்கப் படைப்பாளிகளே திராவிட இயக்கத்தின் வேர்களாக நின்று திராவிட இயக்கத்தின் உறுதிக்குக் காரணமாக விளங்குகின்றனர் என்பது, திராவிட இயக்கக் கருத்தியல் நீர்த்துப் போய்விட்ட இன்றைய நிலையிலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக அமைகின்றது.

## குறிப்புகள்

1. 1962 ஆம் ஆண்டில் திமுக, திராவிட நாட்டுப் பிரிவினைக் கொள்கையைக் கைவிட்ட பிறகான சூழ்நிலையில்கூட, அவரது கவிதைப் பொருண்மைகளில் பெருத்த மாற்றமேதுமில்லை. இக்காலக்கட்டங்களில் அவரது கவிதை ஆக்கங்கள் பெருமளவில் குறைந்திருந் தாலும் பாடுபொருள்களில் திராவிட இனஉணர்வு எப்போதும்போல் இழையோடியே செல்கின்றது. 1970ஆம் ஆண்டுகளில் உருவான அவரது படைப்புகளில்கூட 1930ஆம் ஆண்டுகளில் அவர் எழுதிய படைப்பு உருவாக்கப் பொருண்மைகள் மாறாமலேயே காணப்படு கின்றன (புதுவைச்சிவம், 'இராவணன் ஆரியனா' கட்டுரை - பின்னிணைப்பில் காண்க).

2. *''கற்பு என்பதற்குப் பதிவிரதம் என்று எழுதிவிட்டதன் பலனாலும், பெண்களை விட ஆண்கள் செல்வம், வருவாய், உடல்வலு கொண்டவர்களாக ஆக்கப்பட்டு விட்டதனாலும், பெண்கள் அடிமையாவதற்கும், புருஷர்கள் மூர்க்கர்களாகிக் கற்பு என்பது தங்களுக்கு இல்லை என்று நினைப்பதற்கும் அனுகூலம் ஏற்பட்டது. கற்புக்காகப் புருஷனின் மிருகச் செயலைப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்கின்ற கொடுமையான மதங்கள் சட்டங்கள் மாய வேண்டும். இம்மாதிரியான கொடுமையை விட வெறுக்கத்தக்க காரியம் மனித சமூகத்தில் வேறொன்று இருப்பதாக என்னால் சொல்ல முடியாது.''*

   *'வன்மை, கோபம், ஆளுந்திறம், ஆண்களுக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வதானது வீரம்,*

வன்மை, கோபம், ஆளுந்திறம் புலிக்குச் சொந்த மென்றும் சாந்தம், பேணும்திறம் ஆட்டுக்குச் சொந்த மென்றும் சொல்வது போன்றதேயொழிய வேறில்லை. நாம் வேண்டும் பெண்ணுரிமை என்பது என்னவெனில், ஆணைப் போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண்மக்கள் ஒப்புக் கொள்ளவேண்டும் என்பதேயாம்' (பெரியாரின் 'பெண் ஏன் அடிமையானாள்' என்ற நூலிலிருந்து வே. ஆனைமுத்து 1974: 116-117-121).

3. சுயமரியாதை இயக்கத்தின் மற்ற மாநாடுகளிலும் இதே போலத் தீர்மானங்கள் இயற்றப்பட்ட செய்தியைக் குடியரசு இதழ் வெளியிட்டிருக்கிறது (குடிஅரசு 4.1.1931, 6.4. 1931, 23.8.1931).

4. 1932ஆம் ஆண்டிலிருந்து தன்னை, சமதர்மக் கோட்பாட்டை வலியுறுத்தும் கவிஞனாக வெளிப்படுத்திப் பின்னர், சமதர்மக் கோட்பாடமைந்த பல கவிதைகளை உருவாக்கி இருக்கிறார் புதுவைச்சிவம். சமத்துவ நோக்கத்தின் பால் மிக அதிக அளவில் ஈர்க்கப்பட்டதற்கு அவர் பிரெஞ்சிந்தியா எனப்பட்ட புதுச்சேரியின் பூர்வ குடியினராக இருந்ததை ஒரு காரணமாகக் குறிப்பிடவும் வாய்ப்பிருக்கிறது.

   'சுதந்திரம் - சமத்துவம் -சகோதரத்துவம்' என்னும் உயர்ந்த கோட்பாட்டைக் கொண்டிருந்த பிரான்சின் காலனி ஆதிக்கத்தில் புதுச்சேரி இருந்தது. இந்தத் தத்துவத்துக்கு உட்பட்டிருந்ததாலேயே பிரெஞ்சிந்திய ஆட்சிக்கும் பிரிட்டிஷ் ஆட்சிக்கும் (அடக்குமுறை, அடிப்படை உரிமை ஆகியவற்றில் கூட) வேறுபாடு இருந்தது என்று கூறும் வாய்ப்புமுண்டு. ஆனால் இந்த உயர்ந்த தத்துவத்தினால் விளைந்த அனைத்து உரிமைகளும் பிரான்சைப் போன்று அதன் குடியேற்ற ஆதிக்கப் பகுதியான பிரெஞ்சிந்தியா விலும் நடைமுறைப்படுத்தப்பட்டதாகக் கொள்ள முடியாது. பூர்வ குடிகளுக்கும், குடியேற்றப் பிரெஞ்சுக்காரர் களுக்கும் இருந்த சட்டப்பூர்வமான வேறுபாடே அதற்குப்

போதுமான சான்று. அதே நேரம், 'Renunciation' போன்ற குடியுரிமைச் சட்ட ஒழுகலும், ஆதி திராவிடர்கள் உள்ளிட்ட பூர்வ குடிகளுக்கான சில முன்னேற்றத் திட்டங்களும் பிரெஞ்சியர்களின் சமத்துவக் கொள்கை ஓரளவு செயல் பட்டதைத் தெரிவிக்கின்றன (பா. கிருஷ்ணமூர்த்தி 1991: 26). ஆள்பவர் அந்நியர் என்பதால் பிரெஞ்சுக் காரர்கள் மேல் வெறுப்பு இருந்தாலும் அவர்கள் கோட்பாட் டளவிலாவது காட்டிய சமத்துவத்தில் ஒரு நாட்டம் பிரெஞ்சிந்திய மக்களுக்கு இருந்திருக்க நியாயமுண்டு.

1908 ஆம் ஆண்டில் புதுவை வந்த பாரதிக்கும் பிரெஞ்சுக் குடியரசின் தத்துவத்தில் நாட்டம் இருந்தது. நீதியைச் சரியாக உணர்ந்து கொள்வதில் பிரெஞ்சிந்திய நீதிபதிகள் காட்டிய முனைப்பைப் பாராட்டியதோடு மட்டுமின்றி (Saroja Sundararajan 1995: 84), பாரதி தனது இந்தியா பத்திரிகையின் குறிக்கோளாக, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற பிரெஞ்சுக் குடியரசின் இலட்சியத்தையே பொறித்திருந்தார் (ரகுநாதன் 1982: 549). இந்த ஈர்ப்பு புதுச்சேரியில் வந்து தஞ்சமடைந்த அனைத்துச் சுதேசிகளிடமும் இருந்தது. வந்தவர்களுக்கே இருக்க, புதுச்சேரியிலேயே பாரம்பரியமாகப் பிறந்து வளர்ந்த பாரதிதாசனுக்கும் புதுவைச்சிவத்துக்கும் சமத்துவம் அரும்பியதற்குப் பிரான்சின் அந்த உயரிய கோட்பாடும் ஒரு காரணமாகவே இருந்திருக்க வாய்ப்புண்டு.

1931-32 ஆம் ஆண்டில் பெரியாரின் ஐரோப்பிய, ரஷியப் பயணம் பொதுவுடைமைக் கோட்பாட்டின்பால் அவருக்கிருந்த நம்பிக்கையை மேலும் வளர்த்தது. இதனைத் தொடர்ந்து 'சுய மரியாதைச் சமதர்மத் திட்டம்' புதிய வேலைத்திட்டமாகச் சுயமரியாதை இயக்கத்தினரால் கொள்ளப்பட்டுச் சுயமரியாதைச் சமதர்மப் பிரச்சாரம் மேற்கொள்ளப்பட்டது. இதில் பொதுவுடைமை இயக்கத் தலைவரான சிங்காரவேலனாரின் உத்தேசத் திட்டமும் கூட சமதர்மக் கருத்துப் பிரச்சாரத்திற்கான திட்டமாகவே இருந்தது. இதற்காகப் பல மாநாடுகள், பொதுக்கூட்டங்கள்

நடத்தப்பட்டன. கூட்ட மேடைகளில் லெனின் படம் வைக்கப்பட்டது. மாநாட்டுப் பந்தலுக்குச் சமதர்மப் பந்தல் என்று பெயரிடப்பட்டது. தமிழகப் பொதுவுடைமைப் பிரச்சார வரலாற்றில் சமதர்மக் கட்சியின் பங்கு முதன்மையாக இருந்தது. சுயமரியாதை இயக்கத்தின் முக்கிய இலட்சியமான பார்ப்பன ஆதிக்க ஒழிப்பைவிடச் சமதர்மமும் பொதுவுடைமைக் கொள்கையும் தலையானவை என்று பெரியார் குறிப்பிட்டார்.

சமதர்ம எண்ணம் புதுவைச்சிவம் பாடல்களில் மிகுந்திருப்பதற்குச் சுயமரியாதை இயக்கத்தின் கொள்கையும் மிக முக்கியக் காரணமாக அமைந்திருந்தது. சுயமரியாதை இயக்கம் சுயமரியாதை - சமதர்மக் கட்சி என்று 1933 ஆம் ஆண்டில் பெயர் மாற்றம் கொண்டது. சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளும் இலட்சியங்களும் சமதர்ம நோக்கத்தில் அமைந்தவை என்று அறிவிக்கப்பட்டது (குடி அரசு 1.1.1933).

சமதர்மம் என்பது பொதுவுடைமைக் கோட்பாடு என்ற பொருளில்தான் சுயமரியாதை இயக்கத்தினரால் கையாளப் பட்டிருக்கின்றது. வர்க்க பேதத்தைத் தீர்ப்பது பொதுவுடைமையானால், இந்தியாவில் முதலில் சாதிபேதத்தை ஒழித்து, சமத்துவம் நாட்டி அதன் மூலம் பொதுவுடைமை காண்பது சுயமரியாதை இயக்கத்தினரின் எதிர்பார்ப்பாக இருந்தது. அந்த வகையில் சுயமரியாதைக் கொள்கைகள், சமதர்மம், பொதுவுடைமை ஆகியவற்றை அவர்கள் இணைத்தே கண்டனர் (எஸ்.வி. ராஜதுரை 1996: 243).

5. சுயமரியாதை இயக்கத்தினரின் வெளிப்படையான பொது வுடைமைப் பிரச்சாரம் பிரிட்டிஷ் இந்தியப் பத்திரிகை களுக்கு ஓர் அச்சுறுத்தலாகவே இருந்திருக்கிறது. இதை, 'மாடர்ன் ரெவ்யூ' என்னும் பிரிட்டிஷ் இந்திய இதழ் இப்பிரச்சினையைக் குறிப்பிட்டுச் 'சுயமரியாதை இயக்கத்தினர் ரஷ்யாவை உற்று நோக்குகின்றனர்' என்று

குறிப்பிடுவதில் இருந்து அறிய முடிகிறது. இதற்கான பதிலாகப் புதுவை முரசு இதழின் தலையங்கத்தில், 'சுயமரியாதைக்காரர்கள் ரஷியாவை மாத்திரமல்ல பகுத்தறிவோடு கூறப்படும் எதையும் அது எந்த நாட்டிலிருந்து வந்தாலும் கூர்ந்து நோக்குகிறோம்' என்று குறிப்பிட்டிருப்பதில் இருந்து சுயமரியாதை இயக்கத்தினரின் வெளிப்படையான தன்மையைத் தெரிந்து கொள்ளலாம் (புதுவைமுரசு 21.9.1931/ குடிஅரசு 25.12.1927, 7.10.1928, 26.5.1929/ வே. ஆனைமுத்து 1974: 1677).

6. அ) இதற்கும் முன்பாகவே 18.12.1927 குடிஅரசு இதழின் ஆசிரியராக ஈ.வெ.ராமசாமி நாயக்கர் என்று குறிக்கப்பட்ட பெயர் 25.12.1927 குடிஅரசு இதழில் சாதிப்பட்டம் நீக்கப்பட்டு ஈ.வெ.ராமசாமி என்று மாற்றப்பட்டதாக ஆனைமுத்து குறிப்பிடு கிறார் (வே. ஆனைமுத்து 1974: XXIX).

ஆ) கனக சுப்புரத்தின முதலியார் என்று தனது பெயரைக் குறிப்பிட்டுவந்த பாரதிதாசன் 1929 ஆம் ஆண்டு செங்கல்பட்டு மாநாட்டிற்குப் பிறகு தனது பெயரைக் கனக சுப்புரத்தினம் என்று சாதிப்பட்டம் நீக்கிக் குறிப்பிட ஆரம்பித்தார். தொடர்ந்து அவருடைய படைப்புகளில் பாரதிதாசன் என்றே குறிப்பிட்டார்.

இ) 1928 ஆம் ஆண்டில் புதுவைச்சிவத்தின் மைத்துனர் பாலசுப்பிரமணிய நாயகர் காலமானபோது பாரதி தாசன் இயற்றிப் புதுவைச்சிவம் வெளியிட்ட இரங்கற் பா நூலில் மட்டுமே அவரது பெயர் ச. சிவப்பிரகாச நாயகர் என்று சாதிப்பட்டத்துடன் குறிக்கப்பட்டுள்ளது (சிவ.இளங்கோ 1991: 54).

7. 1940 ஆம் ஆண்டில் பாரதிதாசன் தலைமையில் சீர்திருத்தத் திருமணம் புரிந்து கொண்ட புதுவைச்சிவம், திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் பலருடைய திருமணங்களைத்

தலைமையேற்றுச் சீர்திருத்த முறையில் நடத்தி வைத்திருக்கிறார். (புதுவைச்சிவம் வாழ்க்கைக்குறிப்பு கையெழுத்துப் பிரதி/ செ.முத்து நேர்காணல் 31.8.2000). அப்படித் தான் நடத்தி வைத்தத் திருமணங்களைப் பதிவு செய்யும் வகையில் திருமணச் சான்றிதழ் என்ற வகையிலான ஒரு படிவத்தை அச்சடித்து வைத்துள்ளார் அவர் (இதன் உருவ அச்சுப் படியைப் பின்னிணைப்பில் காண்க). புதுச்சேரியைப் பொறுத்த வரையில் இத்திருமணங்கள், பிரெஞ்சியர் ஆட்சிக் காலந்தொட்டே சட்டப்படிப் பதிவு செய்ய வகையிருந்திருக்கிறது என்பதையும் இதனால் அறிய முடிகிறது. தமிழ்நாட்டில் சுயமரியாதை அல்லது சீர்திருத்தத் திருமணங்கள் செல்லுபடியாகும் சட்டம் திராவிட இயக்கத்தின் வழிவந்த அண்ணா அமைச்சரவையினால் 1967ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டது (க. திருநாவுக்கரசு 1993: 12). ''தமிழ்நாடு இந்து திருமண திருத்த மசோதா 28.11.1967'' எனும் அச்சட்டம் தமிழ்நாட்டில் சுயமரியாதைத் திருமணங்கள் செல்லுபடியாக வழிவகுத்தது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழர் திருமணத்தில் நிலவிவந்த மதச்சடங்குகளும், மூட நம்பிக்கைகளும் புரோகிதமும் இல்லாமல் சட்டப்படியே சீர்திருத்த முறையில் திருமணம் செய்து கொள்ளும் உரிமையை அது தமிழ்நாட்டினர்க்குத் தந்தது (வே. ஆனைமுத்து 1974: LV). திராவிட இயக்க வரலாற்றில் இந்நிகழ்வு அவ்வியத்தினர்க்குக் கிடைத்த ஒரு வெற்றியாகவே கொள்ளப்படுகிறது (க.திருநாவுக்கரசு 1993:12).

8. 'தொழிலாளர் மித்திரன்' என்பது 1940 ஆம் ஆண்டுகளில் புதுவையிலிருந்து வெளியிடப்பட்ட மாதமிருமுறை இதழ். இந்த இதழின் ஆசிரியர் காஞ்சி. கல்யாணசுந்தரம். இவ்விதழின் நிருவாகப் பணிகளைச் செய்து வந்த புதுவைச் சிவம், இவ்விதழில் தனது கவிதைகள், கட்டுரைகளைப் பெருமளவில் வெளியிட்டிருக்கிறார். புதுவைச்சிவத்தின், 'மறக்குடி மகளிர்' என்னும் கவிதை நூலை இந்நிறுவனமே வெளியிட்டிருக்கிறது (புதுவைச்சிவம் 1945: முன்னுரை).

9. பெரியாரே பதிப்பித்த ‘ஹிந்தி எதிர்ப்புப் பாடல்கள்’ எனும் முப்பதேழு பாடல்கள் கொண்ட கவிதைத் தொகுப்பு நூலில் புதுவைச்சிவத்தின் இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. உண்மை விளக்கம் பிரஸ், ஈரோடு என்னும் முகவரி கொண்ட இந்நூலின் மேல் அட்டை இல்லாததால் வெளியான ஆண்டு தெரியவரவில்லை. ஆனால் 1937ஆம் ஆண்டிலிருந்து 1939ஆம் ஆண்டுக்குள் இந்நூல் வெளியாகியிருக்கக் கூடும்.

10. இந்நூலில் ஒன்பது கவிதைத் தொகுப்பு நூல்கள் உள்ளடக்கம் பகுதியில் குறிப்பிடப்பட்டாலும் ‘திராவிடப் பண்’ என்னும் நூல் சிதைந்த நிலையில் கிடைத்ததால் பாடல்களை வெளியிட முடியவில்லை என்று குறிப்பிடப் பட்டுள்ளது. ஆகவே, இந்நூலில் வெளியிடப்பட்டுள்ள புதுவைச்சிவம் கவிதைத்தொகுதிகள் எட்டு மட்டுமே ஆகும் (புதுவைச்சிவம் 1996: 116).

11. புதுவைச்சிவம் இயற்றிய எட்டு நாடகங்கள் அடங்கிய தொகுப்பு நூலில் அவரது நான்கு நாடகப் பாட்டுகள் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றில் ‘ரஞ்சித சுந்தரா (அ) ரகசியச் சுரங்கம்’ நாடகப் பாட்டுகள் 1936 ஆம் ஆண்டிலும், சமூகச் சேவை நாடகப் பாட்டுகள் 1941 ஆம் ஆண்டிலும் அச்சில் வெளியிடப்பட்டுள்ளன. ‘கோகிலா ராணி’ நாடகம் 1947 ஆம் ஆண்டில் அச்சில் வெளிவந்த போது அந்நாடகப்பாட்டுகளும் நாடகத்தின் இடையே அச்சிடப்பட்டுள்ளன. ‘அமுதவல்லி (அ) அடிமையின் வீழ்ச்சி’, ‘சிதைந்த வாழ்வு’ ஆகிய நாடகங்களின் பாட்டுகள் கையெழுத்துப் பிரதியாகக் கிடைத்து மேற்கூறிய நூலில் அச்சிடப்பட்டுள்ளன (புதுவைச்சிவம் 2000: 365-424).

# துணை நூல்கள்

## முதன்மைச் சான்றுகள்


அண்ணாத்துரை, சி.என்., 1947, *ஆரியமாயை*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

----------------, 1947, *மேதினமும் திராவிடர் கழகமும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

----------------, 1948, *1958-1948*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

----------------, பாரதிதாசன், 1948, *மகாகவி பாரதியார்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

----------------, மற்றும் மூவர், 1950, *தீ பரவட்டும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

சிவப்பிரகாசம்,எஸ்., 1932, *புதுவை நெசவுத்தொழில் ஏழையர் எழுச்சிப்பாட்டு*, புதுச்சேரி, கலாநிதிபிரஸ்.

----------------, 1936, *ரஞ்சித சுந்தரா (அ) ரகசியச் சுரங்கம் என்னும் சமூகச் சீர்திருத்த நாடகப் பாட்டுகள்*, புதுச்சேரி, சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ்.

----------------, ஆண்டு இல்லை, *ஹிந்தி எதிர்ப்புப் பாடல்கள்*, ஈரோடு, உண்மை விளக்கம் பிரஸ்.

----------------, 1941, *சமூகச் சேவை* (நாடகப் பாட்டுகள்), புதுச்சேரி, ஸ்ரீ சாரதா பிரஸ்.

----------------, 1944, *பெரியார் பெருந்தொண்டு*, புதுச்சேரி, பூங்கொடிப் பதிப்பகம்.

----------------, 1945, *கைம்மை வெறுத்த காரிகை*, புதுச்சேரி, பூங்கொடிப் பதிப்பகம்.

சிவப்பிரகாசம். ச, 1945, *மறக்குடி மகளிர்*, புதுச்சேரி, தொழிலாளர் மித்திரன்.

---------------, 1946, *மறுமலர்ச்சிக் கவிதைகள்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

---------------, 1947, *கோகிலராணி*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

---------------, 1951, *சிதைந்த வாழ்வு*,புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

---------------, (தொகு.), 1949, *பெரியார் இராமசாமி*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

நெடுஞ்செழியன், இரா., 1948, *புதிய பாதை*,புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

பாரதிதாசன், 1948, *முல்லைக் காடு*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1955, *பாரதிதாசன் கதைகள்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

புதுவைச்சிவம், 1945, *தமிழர் தன்மதிப்புப்பாடல்கள்* (முதல் பதிப்பு), புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1945, *தமிழர் தன்மதிப்புப்பாடல்கள்* (இரண்டாம் பதிப்பு), புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1946, *காதலும் கற்பும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1946, *திராவிடப் பண்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1948, *இந்தி மறுப்புப் பாடல்கள்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1950, *தமிழிசைப் பாடல்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1951, *தன்மதிப்புப் பாடல்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

-------------, 1993, *புதுவைச்சிவம் கவிதைகள்*, சென்னை, முல்லைப் பதிப்பகம்.

-------------, 1997, *புதுவைச்சிவம் கவிதைகள்*, புதுச்சேரி, புதுச்சேரி அரசு கலை பண்பாட்டுத்துறை.

-------------, 2000, *புதுவைச்சிவம் நாடகங்கள்*, புதுச்சேரி, புதுச்சேரி அரசு கலை பண்பாட்டுத்துறை.

பெரியார், 1948, *விழாவும் நாமும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

## கையெழுத்துப் பிரதிகள்

**கவிதைகள்**

கவிதைகள் எழுதப்பட்ட நோட்டுப் புத்தகம், 1935 - 1938.

பகுத்தறிவுப் பாடல்கள் (நோட்டுப் புத்தகம்), 1938 -1943.

**நாடகங்கள்**

வீரத்தாய் (நோட்டுப் புத்தகம்), ஆண்டு குறிப்பிடப்பட வில்லை.

தமிழச்சியின் தேச பக்தி (நோட்டுப் புத்தகம்), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

கோவலன் - கண்ணகி (தாள் மடல் கட்டை), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

ரஞ்சித சுந்தரா (அ) ரகசியச் சுரங்கம் (நோட்டுப்புத்தகம்), 1935.

அமுத வல்லி (அ) அடிமையின் வீழ்ச்சி (நோட்டுப்புத்தகம்), 1937.

தமிழர் வீழ்ச்சி (அ) இராமாயண சாரம் (தனித் தாள்களின் தொகுப்பு), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

காந்திமதி (அ) கல்வியின் மேன்மை (தனித் தாள்களின் தொகுப்பு), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

வீர நந்தன் (தனித் தாள்களின் தொகுப்பு), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

மூன்று பெண்கள் (தனித் தாள்களின் தொகுப்பு), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

**மொழியாக்கம்**

தமிழ் - பிரெஞ்சு பாட நோட்டுப்புத்தகம், ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

காதல் முன் கட்டுப்பாடு (குறுங்காவியம்), (தனித் தாள்களின் தொகுப்பு), ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

**இதழ்கள்**

அறிவுக்கொடி, 1936, சென்னை.

ஈழகேசரி, 1935, இலங்கை.

கழகக் குரல், 1972, சென்னை.

காஞ்சி, 1962, காஞ்சிபுரம்.

குடிஅரசு, 1925, ஈரோடு, சென்னை.

ஞாயிறு, 1947, புதுச்சேரி.

சமநீதி, 1971, சென்னை.

சுடரொளி, 1947, புதுச்சேரி.

தமிழரசு, 1938, சென்னை.

திராவிட நாடு,1942, காஞ்சிபுரம்.

திராவிடன், 1950, சென்னை.

தென்றல், 1950, சென்னை.

தொழிலாளர் மித்திரன், 1945, புதுச்சேரி.

நகர தூதன், 1934, திருச்சி.

நம்நாடு, 1951, சென்னை.

பகுத்தறிவு, 1936, ஈரோடு.

புதுவை முரசு, 1930-1932, புதுச்சேரி.

பொன்னி, 1947, சென்னை.

போர்வாள், 1948, காஞ்சிபுரம்.

போர்வாள், 1970, புதுச்சேரி.

மன்றம், 1945, சென்னை.

முரசொலி, 1950, சென்னை.

விடுதலை, 1938, சென்னை.

ஸ்ரீ சுப்ரமணியபாரதி கவிதா மண்டலம், 1935, புதுச்சேரி.

**நேர்காணல்கள்**

சி. ஜெகதாம்பாள் (கவிஞர் புதுவைச்சிவம் துணைவியார்), 31.08.2000.

செ. முத்து (புதுவைத் தி.மு.க.வின் தொழிற்சங்கத் தலைவராகப் பதவி வகித்தவர், முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்), முதலியார் பேட்டை, 31.08.2000.

தணிகாசலம், திலசைநகர், 31.08.2000.

**துணைமைச் சான்றுகள் - தமிழ்**

அண்ணா. அறிஞர், 2002, *இராஜ்யசபையில் இன முழக்கம்*, சென்னை, சந்தியா பதிப்பகம்.

அடைக்கலசாமி. எம்.ஆர், 1967, *தமிழ் இலக்கிய வரலாறு*, சென்னை,பால் நிலா பதிப்பகம்.

அரங்கசாமி. பழனி. டாக்டர், 2002, *தமிழுக்கு வந்த ஷேக்ஸ்பியர்*, தஞ்சாவூர், தமிழ் இல்லம்.

அருணாசலம்.மு, 1972, *தமிழிலக்கிய வரலாறு - பத்தாம் நூற்றாண்டு*, சென்னை.

அருணன், 1999, *தமிழகத்தில் சமூகச் சீர்திருத்தம் இருநூற்றாண்டு வரலாறு*, மதுரை, வைகை வெளியீட்டகம்.

அருள்சாமி. மு. சு,1970, *தமிழ் இலக்கிய வரலாறு*, சென்னை, பாரி நிலையம்.

அழகப்பன். ஆறு, 1987, *தமிழ் நாடகம் தோற்றமும் வளர்ச்சியும்*, சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

ஆனைமுத்து.வே, 1997, *பெரியாரின் அயல்நாட்டுப் பயணக் குறிப்புகள்*, சென்னை, அன்னம் மறுதோன்றி அச்சகம்.

----------------, 2004, *பெரியாரியல் தொகுதி- 1-2*, புதுச்சேரி, தையல்நாயகி நினைவு நூல் வெளியீட்டகம்.

----------------, (பதி.), 1974, *பெரியார். ஈ.வெ.ரா. சிந்தனைகள்*, திருச்சிராப்பள்ளி, சிந்தனையாளர் கழகம்.

இரத்தினகிரி. இரா, 1997, *தந்தை பெரியார் வாழ்வும் தொண்டும்*, புதுதில்லி, நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா.

இராசாங்கம். முருகு, 1988, *முதல் குடிஅரசு*, கும்பகோணம், செங்குயில் பதிப்பகம்.

இராசேந்திரன். சே, 1985, *தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம்*, சென்னை, பூமணி பதிப்பகம்.

இராசேந்திரன். கு, 2002, *புதுவை பேணும் தமிழ்*, புதுச்சேரி, தாய்.

இராமசாமி. அ,1994, *என்று முடியும் இந்த மொழிப்போர்*, மதுரை, செம்பியம் பதிப்பகம்.

----------------, 2002, *சங்கரதாஸ் சுவாமிகள்*, புதுதில்லி, சாகித்திய அக்காதெமி.

இராமசாமி.ஈ.வெ. தோழர், 1933, *பெண் ஏன் அடிமையானாள்?*, ஈரோடு, பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.

இளங்கோ. ச. சு, 1990, *பாரதிதாசன் நாடகங்கள் ஓர் ஆய்வு*, சென்னை,ஐந்திணைப் பதிப்பகம்.

---------------, 1994, *பாரதிதாசனின் புதிய நாடகங்கள்*, சென்னை, நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

இளங்கோ. சிவ, 1990, *பாவேந்தரும் புதுவைச்சிவமும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

--------------, 1990, *புதிய பேராசிரியர்கள்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

--------------, 1991, *பாரதிதாசன்-கனக சுப்புரத்தினம்*, சென்னை, பாரதி பதிப்பகம்.

--------------, 2000, *பிரெஞ்சிந்தியாவும் திராவிட இயக்கமும்*, புதுச்சேரி, ஞாயிறு நூற்பதிப்பகம்.

இளங்கோவன். மு , 2001. *பாரதிதாசன் பரம்பரை*, ஆர்க்காடு,முகிலரசி.

கந்தையா. ந.சி, 1948, *திராவிடமென்றால் என்ன?* சென்னை, பகுத்தறிவுப் பாசறை.

---------------, 1948, *ஆரியத்தால் விளைந்த கேடு*, சென்னை, பகுத்தறிவுப் பாசறை.

கந்தையா பிள்ளை. ந.சி, 1949, *புரோகிதர் ஆட்சி*, சென்னை, பகுத்தறிவுப் பாசறை.

---------------, 1949, *திராவிட இந்தியா*, சென்னை, பிரிபிரிண்டர்ஸ்.

கிருட்டிணமூர்த்தி. கோ, 1991, *பாரதிதாசன் வாழ்க்கை வரலாறு*, சென்னை, தமிழ்நாடு அரசியல் அறிவாய்வுக் கழகம்.

கிருஷ்ணமூர்த்தி. பா, 1991, *பிரெஞ்சிந்திய விடுதலைப் போராட்டம்*, புதுச்சேரி, நவஜோதி வெளியீடுகள்.

குணசேகரன். கரு. அழ, 1988, *நகர் சார் நாட்டுப்புறக் கதைப் பாடல்கள்*, பாண்டிச்சேரி, தன்னானே.

குணசேகரன். கே.ஏ, 1999, *இன்றைய தமிழ் நாடகச் சூழல்*, பாண்டிச்சேரி, தன்னானே.

கேசவன். கோ, 1990, *சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும் (1930-1936)* விழுப்புரம், சரவணபாலு பதிப்பகம்.

சச்சிதானந்தம். க, 1996 , *பிரெஞ்சு ஆட்சியில் தமிழின் நிலை*, புதுச்சேரி, சாரதா பதிப்பகம்.

----------------, 1999 , *சுவையான பிரெஞ்சுப் பக்கங்கள்-II*, புதுச்சேரி, சாரதா பதிப்பகம்.

சட்டநாதன். ஏ.என், 1984, *தமிழ்நாட்டில் திராவிட இயக்கமும் அதன் பாரம்பரியமும்*, சென்னை, சென்னைப் பல்கலைக்கழகம்.

சம்பத். இரா, 1992, *புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம்*, புதுவை, உமா பதிப்பகம்.

*சவரிராயலு நாயகர் (வாழ்க்கை வரலாறு)*, ஆண்டு இல்லை, புதுவை அரசு கல்வித்துறை வெளியீடு.

சுந்தரராஜ் மாணிக்கம். டாக்டர், 1991, *காலந்தோறும் நந்தன்*, மதுரை, தமிழ்நாடு இறையியல் கல்லூரி.

சுப்பிரமணியம்.மு.க, 1997, *பெரியார் மெய்யியல்*, கோவை, நிகழ்.

சுப்பையா. இராம, 1998, *நானும் என் திராவிட இயக்க நினைவுகளும்*, சென்னை, தமிழ்ப்பண்ணை.

சுப்ரமணிய பாரதியார், 1976, *பாரதியார் கவிதைகள்*, சென்னை, பூம்புகார் பிரசுரம்.

சூரியநாராயண சாஸ்திரியார். வி. கோ, 1934, நாடகவியல், மதுரை- திருநெல்வேலி, வி. சூ. சுவாமிநாதன்.

தண்டபாணி. ப, 2001, *திராவிடர் இசை*, சென்னை, ஆபிரகாம் பண்டிதர் மன்றம்.

தந்தை பெரியார், 1995, *தமிழ்நாடு தமிழருக்கே*, திண்டிவனம், தமிழ்நாடு தன்மதிப்புப் பரப்புரைக் கழகம்.

---------------, 1996, *சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்ததேன்?*, சென்னை, பெரியார் சுயமரியாதை பிரச்சார நிறுவன வெளியீடு.

தமிழன்பன் ஈரோடு, 2000, *பாரதிதாசனோடு பத்தாண்டுகள்*, சென்னை, விழிகள் பதிப்பகம்.

திருநாவுக்கரசு. க, 1993, *திராவிடர் இயக்கச் சாதனைகள்*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

---------------, 1995, *தி.மு.க. பிரச்சினைகளும் பிளவுகளும் மறுமலர்ச்சியை நோக்கி*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

---------------, 1997, *திருக்குறளும் திராவிடர் இயக்கமும்*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

---------------, 1998, *திராவிட இயக்க இதழ்கள் - ஒரு பார்வை*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

---------------, 1999, *திராவிட இயக்கத் தூண்கள்*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

---------------, 1999, *திராவிட இயக்க வேர்கள்*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

திருமுருகன். இரா. முனைவர், 1993, *சிந்துப் பாடல்களின் யாப்பிலக்கணம்*, புதுச்சேரி, பாவலர் பண்ணை.

திருவாசகன். ஆ, சுரதா கல்லாடன் (தொகு.), 1993, *பாரதிதாசன் கவிதைகள்*, சென்னை, அருள்சுடர் பதிப்பகம்.

திருவேங்கடம். தோப்பூர், சுரேஷ் நம்பி, 1987, *திராவிட இயக்க இதழியல் வரலாற்றில் பொன்னியின் பொற்காலம்*, வேலூர், தென்புலம் பதிப்பகம்.

தேசிகப்பிள்ளையவர்கள்.ரா, 1971, *தமிழகமும் பிரெஞ்சுக் காரரும்*, சென்னை, பாரி நிலையம்.

நடராஜன். த, மற்றும் பலர் (பதி.), 2001, *ஒளிச்சேர்க்கை*, புதுச்சேரி, புதுவை இலக்கிய ஆய்வு மன்றம்.

நாராயணன்.அறந்தை (தொகு.), 1998, *விடுதலைப் போராட்ட காலப் பாடல்கள்*, புதுதில்லி, நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா.

நாராயணன்.அறந்தை, 1992, *நாகரீகக் கோமாளி என். எஸ். கிருஷ்ணன்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

----------------, 1994, *திராவிடம் பாடிய திரைப் படங்கள்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

நீலகண்டன். ப, 1981, *நாடக மேடை*, சென்னை.

பக்தவத்சலம். கி.மா, 1956, *மலர் மணம்*, சென்னை, அருணோதயம்.

பத்மநாபன் அரிமளம். சு, 2000, *தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகங்களில் இசைக்கூறுகள்*, புதுச்சேரி, இசைத் தென்றல்.

----------------, 2002, *சங்கரதாஸ் சுவாமிகளின் சந்தங்கள் ஓர் ஆய்வு*, புதுச்சேரி, இசைத்தென்றல்.

பத்மநாபன்.ப. முனைவர், 2004, *பிரெஞ்சிந்திய விடுதலைப் போரில் இதழ்கள்*, புதுச்சேரி, தொல் இளமுருகு பதிப்பகம்.

பாண்டியன். ஆர்.எஸ், 1959, *இங்கிலாந்தில் ஒரு தி.மு.க*, சென்னை, கலையரசி பதிப்பகம்.

பாரதிதாசன், 1932, *பாரதிதாசன் கவிதைகள்*, கடலூர், டி.எஸ். குஞ்சிதம்.

பாலசுந்தரனார். அ.கு, 1949, *திராவிட நாடு முதல்பாகம்*, சென்னை, தனலட்சுமி பதிப்பகம்.

பெரியார் ஈ.வெ.இராமசாமி, 1943, *கலையும் நாடகமும்*, ஈரோடு, குடிஅரசு பதிப்பகத்தார்.

பெரியார் ஈ.வெ. ராமசாமி, 1996, *இராமாயணப் பாத்திரங்கள்*, சென்னை, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.

பெருமாள். எஸ்.ஏ, 2002, *பாப்லோ நெருடா*, மதுரை, ரெட்ஸ்டார் பப்ளிகேஷன்.

பொன்னீலன், 1988, *தற்காலத் தமிழ் இலக்கியமும் திராவிட இயக்கச் சித்தாந்தங்களும்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

மங்களா,1990, *எட்டயபுரத்துக் குயில்*, புதுக்கோட்டை, ரஞ்சிதம் பதிப்பகம்.

மணி. டி.வி.எஸ்., விசுவநாதன். சீனி, 1980, *பாரதியார் கவிதைகள்*, சென்னை, வானவில் பிரசுரம்.

மணிகண்டன். ய, 2004, *பாரதிதாசன் கவிதைகளில் பாரதியார்*, சென்னை, விழிகள் பதிப்பகம்.

----------------, 2004, *பாரதிதாசன் யாப்பியல்*, சென்னை, விழிகள் பதிப்பகம்.

----------------, 2005, *பாரதிதாசன் கவிதை இலக்கியங்கள் சுயமரியாதை, சமத்துவம் (1930-37)*, சென்னை, பொன்னி.

மருதவாணன். தஞ்சை, 2003, *1912-1973, திராவிடர் இயக்க வரலாற்றுச் சுருக்கம்*, சென்னை, தந்தை பெரியார் திராவிடர் கழக வெளியீடு.

மன்னர் மன்னன்.சு, 1985, *கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல்*, விழுப்புரம், முத்துப் பதிப்பகம்.

மார்க்ஸ். அ, 2001, *பெரியார்?* சென்னை, அடையாளம்.

மாறன். பொன், 1998, *திராவிட இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணி*, மதுரை, வேங்கை பதிப்பகம்.

மாறன். முரசொலி, 1957, *ஏன் வேண்டும் இன்பத் திராவிடம்?*, திருச்சி, முத்துவேல் பதிப்பகம்.

முத்துசாமிப்பிள்ளை.எஸ். பண்டித, 1992, *நீதிக் கட்சி வரலாறு*, சென்னை, பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவன வெளியீடு.

முத்துலிங்கம். பெ, 1996, *எழுதாத வரலாறு (இலங்கை திராவிடர் இயக்கம் பற்றிய ஆய்வு)*, கண்டி, இலங்கை சமூக அபிவிருத்தி நிறுவகம்.

முருகேசன். கே, சுப்பரமணியம். சி.எஸ், 1991, *சிங்காரவேலு தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட்*, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

முருகையன். அரங்க. மற்றும் பலர், 2001, *தமிழ்க் களஞ்சியம் பாகம் 1-2*, சென்னை, திருக்குறள் பதிப்பகம்.

ராஜதுரை.எஸ்.வி, 1993, *இந்து இந்தி இந்தியா*, சென்னை, சென்னை அறிவகம்.

---------------, (பதி.), 1998, *ஆகஸ்ட் 15 துக்கநாள் - இன்பநாள்*, சென்னை, விடியல் பதிப்பகம்.

ராஜதுரை.எஸ்.வி, கீதா.வ, 1996, *பெரியார்-சுயமரியாதை சமதர்மம்*, கோவை, விடியல்.

ராஜதுரை. எஸ்.வி, 2001, *பெரியார் மரபும் திரிபும்*, சென்னை, தமிழ் முழக்கம்.

ராஜதுரை.எஸ்.வி, கீதா. வ, 2003, *சுயமரியாதை இயக்கச் செயல்பாடுகள்*, சென்னை, இலக்கியா கணினியகம்.

----------------, 2003, *பெரியார் கண்ட சுயமரியாதை இயக்கம்: செயல்பாடுகளும் சாதனைகளும்*, சென்னை, தந்தை பெரியார் திராவிடர் கழக வெளியீடு.

ரேணுகா தேவி (தொகு.), 1995, *தந்தை பெரியாரின் பகுத்தறிவுச் சிந்தனைகள்*, சென்னை, பாரதி நிலையம்.

ரேணுகாதேவி. வ, 1999, *திராவிட இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்*, சென்னை, நக்கீரன் பதிப்பகம்.

வரதராசன். மு, 1965, *இலக்கியத் திறன்*, சென்னை, பாரி நிலையம்.

------------, 1975, *மொழி வரலாறு*, சென்னை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.

-------------, 1975, *மொழிவரலாறு*, சென்னை, அப்பர் அச்சகம்.

வரதராசு. வீ. கல்லாடன், 1982, *முப்பத்திரண்டாவது ஆண்டு விழாச் சிறப்பு மலர்*, புதுவை, வாணி நிலையம்.

வல்லம் வேங்கடபதி, 1988, *கண்ணதாசன் கவிதைகள் ஓர் ஆய்வு*, சென்னை, டாக்டர் வல்லம் வேங்கடபதி.

விடுதலை 5 தலையங்கத்தின் தொகுப்பு, 1939, *தமிழ்நாடு தமிழருக்கே (திராவிடநாடு திராவிடர்க்கே)*, ஈரோடு, குடிஅரசு பதிப்பகம்.

வீரமணி. கி, 1999, *விடுதலைப் போரும் திராவிடர் இயக்கமும் உண்மை வரலாறு*, சென்னை, திராவிடர் கழக வெளியீடு.

-----------, 2004, *கீதையின் மறு பக்கம்*, சென்னை, திராவிடர் கழக வெளியீடு.

வேலுப்பிள்ளை. ஆ, 1985, *தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்*, சென்னை, பாரி புத்தகப் பண்ணை.

வைத்தியநாதன். கே, ஆண்டு இல்லை, *ஜூலை 30 தியாகிகள் சிலை திறப்பு விழா மலர்*, புதுச்சேரி.

வையாபுரிப்பிள்ளை. எஸ், 1952, *தமிழ்ச் சுடர் மணிகள்* , சென்னை, நவபாரத பிரசுராலயம் லிமிடெட்.

**மலர்கள்**

அப்பாத்துரைப்பிள்ளை. கா, 1946, *பண்டைத்தமிழ் நாடகம்*, முல்லை, ஐந்தாவது வெளியீடு.

சுப்பையா. வ, 1984, *சுதந்திரம் 1934-1984 பொன்விழா மலர்*, புதுச்சேரி.

நெல்லைராஜன் மற்றும் பலர், 1997, *வெள்ளி விழா மலர்*, புதுவை, ஆதவன் பைன் ஆர்ட்ஸ்.

முத்துசாமி. மா, 1968, *உலகத்தமிழ் மாநாடு விழா மலர்*, சென்னை, உலகத் தமிழ் மாநாடு.

மாணிக்கம். ப, 1991, *தாமரை*, மலர் 32, இதழ் 9.

**சொற்பொழிவுகள்**

சித்தன் (எ) இராதாகிருட்டிணன் (புதுவை நகர மன்றத்தில் புதுவை அரசு நடத்திய கவிஞர் புதுவைச்சிவம் பிறந்தநாள் விழாச் சிறப்புரை 23.10.1999).

முனைவர் இரா. திருமுருகன் (பாரதிதாசன் அருங்காட்சியகச் சொற்பொழிவு 29.10.2003).

முனைவர் ப. மருதநாயகம் (புதுவைத் தலைமைச் செயலகத்தில் நடைபெற்ற புதுவைச்சிவம் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்வில் வரவேற்புரை 24.2.2004).

துணைமைச் சான்றுகள் - ஆங்கிலம்

Antony, Francis Cyril (ed), 1982, *Gazetteer of India - Union Territory of Pondicherry,* Pondicherry, Government of Pondicherry.

Irschick, Eugone. F, 1969, *Politics and Social conflict in South India, Berkely and Los Angeles,* University of California Press.

Nilakanta Sastri. K.A, 1949, *Dravidian Literatures,* Madras, S. Viswanathan.

Padmanaban. A. Dr, 1986, *Saint Nandanaar,* Madras, Poompuhar Pathippagam.

Ramamurti. P, 1987, *The freedom struggle and the Dravidian Movement,* Chennai, Orient Longman Ltd.

Ramaswamy. A, 1987, *History of Pondicherry,* Bangalore, Sterling Publishers Pvt.Ltd.

Raphael Ramanayya,Dadala Sri, Year not mentioned, *My Struggle for the freedom of French India - An Autobiography,* Place and Publisher not mentioned.

Saraswathy. S, 1994, *Towards Self - Respect Periyar EVR on a New world,* Chennai, Institute of South Indian Studies.

Saroja Sundrarajan, 1995, *Pondicherry A Profile,* Pondicherry, Directorate of Art and Culture.

Spratt. P, 1970, *D.M.K. in Power,* Bombay, Nachikeda Publishers Ltd.

Subbiah.V, 1990, *Saga of Freedom of French India,* Chennai, NCBH.

Viswanathan. E.Sa, 1983, *The Political career of E.V. Ramasami Naickar,* Chennai, Ravi & Vasanth Publications.

**Unpublished Dissertation**

Ilango Siva, 1996, *Genesis and Growth of Dravidian Movements in French India(1927 - 1954),* M.Phil. Dissertation submitted to the School of International Studies, Pondicherry University.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை - 600 113

# அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீயும் மேலை அறிஞரும் | 60.00 |
| அறந்தாங்கித் தொண்டைமான்கள் | 45.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழி ஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |

---

**607 புதுவைச்சிவம் கவிதைகளும் புரட்சிக்கோட்பாடுகளும் 60.00**